## பொருளடக்கம்

# அத்தியாயம் 1

குரு தெருவின் ஓரத்தில் நின்று கொண்டிருந்தான். அது சென்னை நகரின் தி.நகரின் ஆரவாரமான ஒரு சந்து. சந்து, அனால் ஆரவாரமாய் இருக்கும். ஏனெனின் அங்கு ஒரு டீ கடை ஒன்று உண்டு. இளைஞர் பட்டாளம் கூடும் இடம். சந்து ஆனதால், இரு சக்கர வாகனங்களை நிறுத்தி சத்தமாகப் பேசி அரட்டை அடித்து விட்டு ஏதாவது சாப்பிட்டு விட்டுச் செல்லலாம்.

ஒருவன் இரு சக்கர வாகனத்தில் வந்து நின்றான். வயது சுமார் இருபத்திரண்டு இருக்கலாம். தலைக் கவசத்தைக் கழற்றி விட்டு அரக்கப் பறக்கப் பார்த்தான். இந்தப் பகுதிக்குப் புதியவன் போலத் தோன்றினான். கையில் ஒரு காகிதத்தை வைத்துக்கொண்டு குருவைப் பார்த்தான். “இந்த விலாசம் எங்கே இருக்கிறது என்று சொல்ல முடியுமா?” என்று கேட்டான். அதற்கு குரு “ இந்த வலது பக்கமாய்த் திரும்பு. திரும்பினால் பஸ் செல்லும் அளவிற்குப் பெரிய சாலை வரும். அதில் தொடர்ந்து செல். கொஞ்ச நேரத்தில் 12B பஸ் உன்னைத் தாண்டிச் செல்லும். தாண்டியவுடன் உடனே இடதுபுறம் திரும்பு. தொடர்ந்து சில நிமிடங்கள் செல். அதன்பின் போக வழி இல்லாமல் வண்டிகள் நிற்கும் பொழுது உன்னிடம் ஒருவன் காரில் இருந்தபடியே வழி கேட்பான். அவனிடம் தெரியாது என்று சொல்லிவிட்டு வலது பக்கமாய்த் திரும்பு. திரும்பியவுடன் ஒரு பெண் பையுடன் வெளியே வருவாள். அந்த வீடுதான் நீ கேட்கும் விலாசம்.

வந்தவன் சிறுது கூட சிந்திக்காமல் குரு சொல்லியதை ஏற்றுக்கொண்டு அதன்படி சென்று விட்டான். அருகில் நின்று கொண்டு இருந்த நண்பர்கள் “ எண்டா இப்படிச் செய்தாய்? என்று கேட்க குரு மேல்லியதைச் சிரித்து விட்டு அந்த இடத்தை விட்டு அகன்றான்.

குருவிற்கு இருபத்து ஐந்து வயது இருக்கலாம். கல்லூரி முடித்து சில ஆண்டுகளே ஆகின்றன. நிரந்திரமான வேலை எதுவும் கிடையாது. அதேநேரத்தில் பணம் தேவைப்படும் பொது அதைச் சம்பாதிக்கும் திறமையும் உண்டு. இன்னும் திருமணம் ஆகவில்லை. மெலிந்த உறுதியான தேகம்.கூர்மையான கண்கள். நடுத்தர உயரம் யாரையும் சில நிமிடங்களில் நண்பன் ஆக்கும் திறமையும் உண்டு. குருவைப் பிடிக்காதவர்கள் என்று யாரும் இருக்க முடியாது.. எப்பொழுதும் குருவைச் சுற்றி ஒரு கூட்டம் இருக்கும்.

## அத்தியாயம் 2

மரீனா கடற்கரை. மாலை சுமார் ஐந்து மணி இருக்கலாம். குரு அலைகளைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தான். தனக்குப் பின்னால் நிற்பவரைத் திரும்பிப் பார்க்காமலே " உட்கார் செந்தில் " என்றான். செந்திலுக்குத் தூக்கி வாரிப் போட்டது. நேற்று நடந்ததின் தாக்கத்தில் இருந்து மீழவே வெகுநேரம் ஆகி விட்டது. டீக்கடையில் கேட்டது போலவே பஸ் வந்தது. தன்னிடம் ஒருவன் வழி கேட்டான். ஒரு பெண் பையுடன் வெளியே வந்தாள். இது எல்லாம் எப்படி சாத்தியமாகும்?

செந்தில், உனக்காகத்தான் காத்துகொண்டு இருக்கிறேன் என்று குரு கூற . செந்தில் ஓட நினைத்தான். ஆனால் முடியவில்லை. மந்திரத்திர்க்குக் கட்டுப்பட்டவன் போல குருவின் அருகே அமர்ந்தான். நெஞ்சு எங்கும் பயமும் ஆச்சரியமும் கலந்திருந்தது.

குரு உன்னை இங்கு வர வைத்ததே நான்தான். பயப்படாதே. நான் யாருக்கும் எந்த தீங்கும் செய்வதில்லை. நீயும் நானும் இன்னும் சிலரும் சேர்ந்து செய்ய வேண்டிய கடமை ஒன்று இருக்கிறது. சரி அதை விடு. பிறகு பேசலாம். நீ இன்று காலையிலிருந்து இப்பொழுது வரைப் பார்த்து ரசித்த பெண்களைப் பற்றிச் சொல். அதற்கு செந்தில், அவர்கள் பெயர் தெரியாதே என்றான். தேவை இல்லை. நேரம், இடம், அடையாளம் மட்டும் சொல்.

காலையில் மயிலாப்பூரில் நடந்து வரும்பொழுது, ஒரு மஞ்சள் சுடிதார் போட்ட பெண்ணைப் பார்த்தேன்.
குரு – அவள் கையில் வைத்திருந்த செல் போன் நிறம் என்ன? சிவப்பா? செந்தில் – அப்படித்தான் நினைக்கிறன்.
குரு சரி, அடுத்தது யார்?

செந்தில் – ம்ம்ம் .... மத்தியானம் சரவணா பவனில் சாப்பிடும் போது, நீல நிற ஜீன்ஸ் போட்ட பெண். பச்சை நிற பனியன் போட்டிருந்தாள்

குரு – அவள் கூட ஒரு குழந்தை இருந்தாதா?

செந்தில் - ஆம்

குரு – சரி அடுத்தது யார்?

இப்பொழுது வரும் பொழுது பார்த்தேன். பத்து வயது பெண். மிகவும் துறுதுறு என்று இருந்தாள். ஊதா நிற கௌன் போட்டிருந்தாள்.

குரு – கையில் சாப்பிட ஏதாவது வைதிருந்தாளா?

செந்தில் – ஆம்

குரு – சரி வா. ஏதாவது குடிக்கலாம். என்று கூறி விட்டு மெதுவாக எழுந்து நடக்க ஆரம்பித்தான். செந்திலுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. பசுவின் பின் செல்லும் கன்றுக் குட்டி போல கூடவே சென்றான். அனால், கன்றுக் குட்டியின் நடையில் ஒரு துள்ளல் இருக்கும். செந்தினில் நடையில் தயக்கம் மற்றும் பயம் இருந்தது.

இருவரும் கடையினுள் நுழைந்து ஒரு மேஜையில் அமர்ந்தனர். கூட்டம் அதிகமாக இல்லை. சில மேஜைகள் இன்னும் காலியாக இருந்தது. குருவிடம் வந்து என்ன வேண்டும் என்று பரிமாறுபவர் கேட்டுச் சென்றார். அப்பொழுது, பக்கத்து மேஜையைக் கவனித்த செந்தில் ஆச்சச்சரியத்தில் உறைந்து விட்டான். காலையில் பார்த்த பெண் அங்கு அமர்ந்து இருந்தாள். அடுத்த இரண்டு மூன்று நிமிடங்களில், அடுத்த பெண். அடுத்த ஐந்து நிமிடத்தில் மூன்றாவது பெண். செந்திலால் திறந்த வாயை மூட முடியவில்லை. குரு மெதுவாகச் செந்திலைத் தட்டி எழுப்பி சாப்பிடச் சொன்னான். செந்திலின் வாயிலிருந்து எந்த வார்த்தையும் வரவில்லை. சத்தமில்லாமல் சாப்பிட்டு விட்டு குருவின் பின்னால் ஆட்டுக் குட்டி போலச் சென்றான்.

செந்தில் ஆச்சரியத்தின் விழிம்பில் இருந்தான்.

கடற்கரைக்கு வரும் பழக்கம் இல்லாத நான் எப்படி இங்கு வந்தேன்? அவர் இருக்கும் இடத்திற்கு நான் எப்படி வந்தேன்? நான் பார்த்த பெண்களைப் பற்றிய விபரம் இவருக்கு எப்படித் தெரிந்தது? எப்படி அவர்கள் அனைவரும் ஒரே இடத்திற்கு வந்தார்கள்? செந்திலுக்கு குருவைப் பார்த்து ஒரு பயம் கலந்த மரியாதை வந்தது. குரு செந்திலைப் பார்த்து எனது பெயர் குரு என்று கூறி மெதுவாகச் சிரித்து விட்டுச் சென்றான்.

மாம்பலம் ரயில் நிலையம். மாலை சுமார் நான்கு மணி இருக்கலாம். எனவே கூட்டம் அதிகம் இல்லை. கருங்கல்லால் உட்கார வசதியாக இரண்டு மேடைகள் செய்திருந்தார்கள். அவற்றில் குரு அமர்ந்திருந்தான். பலதரப்பட்ட மனிதர்கள் வந்து செல்லும் இடம் ரயில் நிலையம். விதவிதமான மக்கள், உடல் வாகு, உடைகள், முக பாவனைகள், உணர்ச்சிகள் அனைத்தையும் கண்டு ரசிக்க ஒரு சிறந்த இடம். நடை மேடை ஓரளவு சுத்தமாக இருந்தது. ஆனால் ரயில் பாதை குப்பையாக இருந்தது. அந்தக் குப்பைகளின் ஊடே ஒரு எலி ஒன்று ஓடிக்கொண்டு இருப்பதை குரு கவனித்துக்கொண்டு இருந்தான். கண்ணுக்கு தெரிந்த விளம்பரங்களைக் கவனித்துக்கொண்டு இருந்தான். அமர்ந்த இடத்தில் நிழல் இல்லை. சிறிது நேரத்தில் ஒவ்வொருவராய் குருவின் அருகில் அமர்ந்தனர். செந்தில் போல் வேறு சிலரையும் பழக்கப் படுத்தியிருந்தான். வெயிலில் தான் அனைவரும் அமர்ந்திருந்தனர். அதில் ஒருத்தி ஏன் அங்கே நிழலில் உட்காரக் கூடாது என்று கேட்டாள். தனது உடல் நிறம் கருத்து விடும் என்ற கவலை. நாம் வேலை செய்யப் போவது வெயிலிலும் மழையிலும். அதற்கு உடல் பழக்கப் படுவதற்குத்தான் இங்கு அனைவரும் கூடி உள்ளோம் என்றான் குரு.

மேலும் நம் அருகில் வேறு யாரும் அமரமாட்டார்கள். நாம் பேசுவது யாரும் கேட்க முடியாது. அப்படியென்றால் யாராவது ஒருவர் வீட்டில் சந்தித்து இருக்கலாமே என்றாள் மற்றொருத்தி. நாம் வேலை செய்யப் போவது குளிரூட்டப்பட்ட அலுவலகத்தில் அல்ல. மழையும் வெயிலும் நிறைந்த காட்டில். வேலை முடிந்தவுடன் வீட்டில் உட்கார்ந்து தொலைக்காட்சி விளம்பரங்களில் வருபவைகளைத் தேய்த்து வெள்ளையாகிக் கொள்ளுங்கள். என்று சிறிது எரிச்சலோடு குரு

பதிலளித்தான். அனைவரது மனதிலும் சிறிது பயம் ஓடியது. இதனை உணர்ந்த குரு, மெல்ல எழுந்து சென்று அருகில் உள்ள கடையிலிருந்து சாம்பார் வடை எல்லோருக்கும் வாங்கிக் கொடுத்தான். அதன் பிறகு எல்லோரும் தேநீர் அருந்தினர். நிலைமை சிறிது இளகியது. முடிந்த வரை என்னிடம் அதிகம் கேள்வி கேட்காதிர்கள். பலநேரங்களில் என்னால் பதில் சொல்ல முடியாத நிலையில் இருப்பேன். நானும் பல சட்டங்களுக்கு உட்பட்டவன். இயற்கைக்குப் புறம்பாக எதுவும் என்னால் செய்ய முடியாது.

முதலில் எல்லோரையும் அறிமுகம் செய்கிறேன். அனைவருக்கும் இனிமேல் புதிய பெயர் வைக்கப் போகிறேன். இது உங்கள் பாதுகாப்பிற்காக. ஒருவன் சிறிது கருப்பாக இருந்தான் அவனுக்குக் கண்ணன் என்று பெயரிட்டான் குரு. அடுத்து அமர்ந்திருந்த பெண், பெரிய கண்களுடன் இருந்ததால் மீனா என்று பெயரிட்டான். அடுத்தவன் ஒல்லியாய், உயரமாய் இருந்ததால் அவனுக்கு அமிதாப் என்று பெயரிட்டான். அடுதவளிடம் உனக்குப் பிடித்த நடிகையின் பெயர் சொல் எனக் கேட்க அவள் திரிஷா என அந்தப் பெயரையே அவளுக்குச் சூட்டினான். யாருக்காவது பெயர் பிடிக்கவில்லை என்றால் சொல்லுங்கள் மாற்றிக்கொள்ளலாம் என்றான் குரு. திரிஷா குருவைப் பார்த்து உன்னுடைய பெயர் குருவா எனச் சந்தேகத்துடன் கேட்க குரு வழக்கம் போல் சிரித்தான். குரு உண்மை சொல்கிறானா இல்லையா எனறு யாராலும் கணிக்க முடியவில்லை.

வீர பாண்டியன் மனைவி என்று தமிழில் ஒரு சரித்திர நாவல் உண்டு. அதில் ஜனநாதன் என்று ஒற்றர் படைத் தளபதி, முக்கிய கதாநாயகன். அவன் உண்மையைப் பொய் போல் பேசுவதிலும், பொய்யை உண்மை போல் பேசுவதிலும் கை தேர்ந்தவன். அவனது பல ஆண்டு திட்டத்தின் முடிவில் தமிழகத்தில் மன்னர் ஆட்சி

முடிவுக்கு வந்து மக்களாட்சி மலரும். ஜனநாதனைப் போல் குரு பேசுவதின் முழு அர்த்தத்தைக் கண்டு பிடிக்க முடியாது. குரு பேசுவதின் அர்த்தம் முழுவதும் குருவிற்குத் தெரியுமா என்றும் தெரியாது. பல நேரங்களில் நாம் பேசும் வார்த்தைகளுக்கு நாம் தான் பொறுப்பா என்று யோசித்துப் பார்த்தால் சரியான பதில் கிடைக்காது.

குரு கடைக்கு பணம் கொடுத்தானா இல்லையா என்று தெரியவில்லை. மீனா நான் வேண்டுமானால் பணம் கொடுக்கட்டா எனக் கேட்க குரு தேவை இல்லை என்று கூறி விட்டான். குரு எந்த கடைக்கும் பணம் கொடுப்பதில்லை. அவனிடம் யாரும் கேட்பதும் இல்லை. அனால் குரு வாங்கிய கடையில் அன்று அளவிற்கு அதிகமாக விற்கும். எனவே குருவினால் யாருக்கும் நட்டம் கிடையாது.

குரு தனது சட்டைப் பையிலிருந்து நான்கு டிக்கெட் எடுத்தான். அவை திருவல்லிக்கேணி வரை செல்ல முடியும். அனைவரும் அடுத்து வந்த மின்தொடர் வண்டியில் ஏறி திருவல்லிக்கேணியை அடைந்தனர். அங்கிருந்து மெதுவாக நடந்து கடற்கரையை அடைந்தனர். ஓர் இடம் வந்ததும் குரு மணலைத் தோண்ட அங்கு பிளாஸ்டிக் பறக்கும் தட்டு இருந்தது. அதை வானில் எறிந்தும் பிடித்தும் விளையாட ஆரம்பித்தனர். அனைவரும் நன்கு களைத்துப் போகும் வரை, இடைவிடாமல் விளையாண்டனர். அவர்கள் விளையாடும் பொழுது அனைவரது கவனமும் தட்டிலேயே இருந்தது. அவர்களிடம் இருந்த குருவைப் பற்றிய பயம், சந்தேகங்கள், கேள்விகள் அனைத்தும் மெதுவாகத் தொலைந்தன. குருவின் மீது ஒரு நம்பிக்கையும், எதையும் சாதிக்கும் துணிவும், வீரமும் அவர்கள் மனதில் பரவ ஆரம்பித்தன. இந்த மாற்றங்கள் அவர்களது விளையாட்டிலும் தெரிய ஆரம்பித்தது. முதலில் மெதுவாக விளையாடியவர்கள் வேகமாகவும்

வெறியுடனும் விளையாடத் துடங்கினார். அவர்கள் உடம்பில் அதீத சக்தி பாய்வதை உணர்ந்தனர். அவர்களது விளையாட்டில் ஒரு நேர்த்தியும் அழகும் புகுந்தது. எனவே அருகில் இருந்த பலரும் அவர்களைக் கவனிக்க ஆரம்பித்தனர்.

மெதுவாக இருட்ட ஆரம்பித்தது. மீண்டும் ரயில் நிலையத்தை நோக்கி நடக்க ஆரம்பித்தனர். அங்கே ஒரு பெண் கரும்புச் சாறு விற்றுக்கொண்டிருந்தாள். அவளிடம் சென்று ஐந்து பேருக்கும் தரச் சொன்னான் குரு. விளையாண்ட களைப்பில் இந்த கரும்புச் சாறு மனதிற்கும் உடலுக்கும் மிக இனிதாக இருந்தது. நாளை மாலை இரண்டு மணிக்கு இதே இடத்தில் சந்திப்பதாக முடிவு செய்துவிட்டு அனைவரும் கலைந்தனர்.

அடுத்த நாள் மீண்டும் அதே இடத்தில் அனைவரும் சந்தித்தனர். அனால் நேரம் மதியம் இரண்டு மணி. குரு அனைவரையும் பார்த்து நாம் போகப் போகும் இடம் காடு. நமது கால் பாதம் உறுதியாக இருக்க வேண்டும். அதற்காக இந்தப் பயிற்சி. அனைவரும் செருப்புகளைக் கழற்றுங்கள். நேற்று மாதிரி விளையாடலாம். மணலில் இறங்கியவுடன் அனைவரது கால்களும் சுட்டன. சிறிது முனக ஆரம்பித்தனர். ஆனால் குரு அனைவரையும் ஓடச் சொன்னான். மண்ணில் ஓடும பொழுது சிறிது கஷ்டமாக இருந்ததது. ஆனால் சிறிது நேரத்திலேயே கால்கள பழகி சூடு தெரியவில்லை. ஒரு மணி நேரம் தங்களை மறந்து, தங்கள் சூழ்நிலையை மறந்து, கவலைகளையும், பயங்களையும் மறந்து ஆனந்தமாக விளையாடினர். தட்டு வானிலேயே பறந்து கொண்டு இருந்தது. கீழே விழாமல் அருகில் இருப்பவர்கள் கைகளில் போய்சேர்ந்தது. குரு சில சமையங்களில் ஓடாமல் நிற்பான். அப்பொழுது தட்டு மெதுவாகப் பறந்து அவன் கைகளில் வந்து விழும். குரு மீண்டும் வானில் வீசினால் நன்கு உயரத்தில் பறந்து, அனைவரைய்ம் இங்கும் அங்கும் ஓட விடும். எங்கு யார் கையில் செல்லும் என்று கணிக்க முடியாது. தட்டு சிறிது நேரம் விளையாட்டு காட்டி விட்டு யாருடைய கையிலாவது இறங்கும். அனால் ஒருமுறை கூட கேழே விழுந்தது கிடையாது.

விளையாண்டு முடித்தவுடன் அனைவரும் கரும்புச் சாறு குடிக்க வந்தனர். அப்பொழுது குருவின் தோளில் ஒரு பறவை வந்து அமர்ந்தது. இறக்கைகள் பல வண்ணங்களில் இருந்தது. நீலம், மஞ்சள், சிவப்பு, பச்சை, வெண்மை முதலிய பல வண்ணங்களில் கலவையை இருந்தது. அதன் அலகு, மரங்கொத்திப் பறவை போல நீளமாய் இருந்தது. கால்கள், கொக்குவிற்கு இருப்பது போல் நீளமாய், உறுதியாய் இருந்தது. தலை

கிளி போல் உருண்டியாய் இருந்தது. யாரும் இதுவரை அப்படி ஒரு அழகான பறவையைப் பார்த்தது கிடையாது.

குருவின் காதுகளில் மேல்லியதாகச் சப்தம் இட்டது. அதன் குரல் மிகவும் இனிமையாய் இருந்தது. குயில் இதனிடம் இருந்துதான் பாடக் கற்றுக் கொண்டிருக்க வேண்டும். குரு அதனை மெதுவாகத் தடவிக் கொடுத்தான். அந்தப் பறவையும் குருவின் கன்னத்தில் மெதுவாகத் தன் தலையால் தடவியது. கூடியிருந்த அனைவரையும் ஒரு முறைப் பார்த்தது. கரும்பு சாறு விற்பவளைப் பார்த்து சப்தமாகக் கத்தியது. அவளும் நல்லா இருக்கியா என்று கேட்டாள். மீண்டும் ஒருமுறை குரல் கொடுத்து விட்டு, விருட்டென்று வானில் எழும்பிப் பறந்தது. பறக்கும் பொழுது அதன் இறக்கைகள் மிகவும் நீளமாய் இருந்தது, கழுகுகளுக்கு இருப்பது போல். அந்தப் பறவை ஒவ்வொரு வரையும் உற்றுப் பார்த்த பொது அவர்களது உடலிலும் மனதிலும் சில மாற்றங்கள் நடந்ததை உணர்ந்தனர். உயரே பறந்து மீண்டும் சிறிது கீழே வந்து அனைவரையும் ஒரு வட்டம் அடித்தது. அது அவர்கள் சாதிக்கப் போவதுற்கு வாழ்த்து கூறுவது போல் இருந்தது. குருவும் கைகளை உயர்த்தி அந்தப் பறவையை வழி அனுப்பினான். கரும்புச் சாறு விற்பவள், குருவிடம் உனது நண்பன் என்ன சொன்னான் எனக் கேட்க, குரு மெல்லியதாய் சிரித்தான். அவள் “இந்தத் தம்பி பதிலே சொல்லாது” என்று சொல்லிவிட்டு அவளும் சிரித்தாள். அனைவரும் புது உடலும் மனதும் பெற்றதை உணர்ந்தனர். அந்த உடல்களில் நோய் நொடி எதுவும் இல்லை. மனதில் கவலைகளும் பயங்களும் இல்லை. அனைவரும் மெதுவாகக் கலையத் தொடங்கினர்.

குருவும் அந்தப் பறவையும் என்ன பேசினார்கள் என்பது யாருக்கும் தெரியப் போவது இல்லை. இல்லை இது ஒரு சாதாரண சந்திப்பா என்பதும் தெரியாது. ஆனால் இது

ஒரு சாதாரண சந்திப்பு போல் தெரியவில்லை. அந்தப் பறவை தனது பார்வையால் அங்கிருந்தவர்களிடம் பல மாற்றங்களை செய்து விட்டுச் சென்றுள்ளது.

உலகில் நடக்கும் எல்லா செயல்களுக்கும் எதோ ஒரு அர்த்தம இருக்கத்தான் செய்கிறது. சில நேரங்களில் அது புரிகிறது. பல நேரங்களில் அது புரிவதில்லை. நம் உடலை விட்டு உயிர் பிரிந்தபின் தெரியுமோ என்னவோ?

இலங்கையின் தலைநகரம் கொழும்பு. ஜனாதிபதியின் மாளிகை. பின்கட்டில் சமையல் அறையை ஒட்டியுள்ள ஒரு சிறு அறை. அரிசி பருப்பு முதலிய சமையல் சாமான்கள் வைக்கும் இடம். ஒரு சிறிய மேஜை. அதி காலை நான்கு மணி. இலங்கையும் இந்தியாவும் தூங்கிக் கொண்டிருக்கும் நேரம். அதைச் சுற்றி நான்கு பேர் அமர்ந்திருந்தனர். அதில் மூவர் இராணுவ உடையில் இருந்தனர். தோளில் பல நட்சந்திரங்கள் மின்னின. தரை, விமான, கப்பற்படையினைச் சேர்ந்த தளபதிகள். நான்காம் நபர் ஜனாதிபதியின் அந்தரங்கச் செயலாளர். மேலும் உளவுப் படையின் தலைவர். உங்களுக்குப் பேசுவதற்கு வேறு இடமே கிடைக்கவில்லையா என்று அரசு அதிகாரி திலகரத்னே கேட்க, விமானப் படைத் தளபதி, யாரும் ஒட்டுக் கேட்காமல் பேச வேண்டுமானால் இம்மாதிரியான இடமே சிறந்தது.

அனைவரது முகத்திலும் ஒரு வெற்றிப் புன்னகை இருந்த்தது. கரபாகரன் கொலை செய்யப் பட்டு ஒரு வாரமே இருந்தது. பல ஆண்டுகளாக நாம் வளர்த்த கிடா தனது வேலையை மிகவும் நேர்த்தியாகச் செய்துள்ளது. தமிழர்களைக் கொன்றதில் இலங்கை இராணுவத்தின் பங்கு அதிகமா இல்லை, கரபாகரின் பங்கு அதிகமா என்று , என்றும் தீர்மானிக்க முடியாத பட்டி மன்றம் நடத்தலாம். கரபாகரின் உதவி இல்லாமல் இவ்வளவு தமிழர்களைக் கொல்ல முடியாது என்று தரைப்படை அதிகாரி சொல்ல அனைவரும் பலமாகச் சிரித்தனர்.

சற்றி யோசித்துப் பாருங்கள். இந்தியாவில் நடந்தது போல், அஹிம்சையைப் பயன் படுத்திப் போராடியிருந்தால், நம்மால் இவ்வளவு பேரைக் கொல்ல முடியாது. நம் தோற்றுப் போயிருப்போம். கரபாகரின் ஆத்மா சாந்தியடையட்டும் என்று கடற்படைத் தளபதி

கூறினார். அரசு அதிகாரி. அருகில் இருந்த அலமாரியில் கையைவிட்டு ஒரு பாட்டிலை எடுத்தார். வெளியே சென்று சில கண்ணாடிக் குவளைகளை எடுத்து வந்து அதில் அனைவருக்கும் ஊற்றிக் கொடுக்க, நால்வரும் குவளைகளை உயர்த்தி சிங்களர் உயர்வுக்காக என்று கூறிவிட்டு மெதுவாகக் குடிக்க ஆரம்பித்தனர். இன்று மாலை எட்டு மணிக்கு தாஜ் ஹோட்டல், அறை எண் 1024. உங்கள் அனைவரையும் அங்கு சந்திக்கிறேன். அதற்கு முன் உங்கள் மலேசிய வங்கிக் கணக்கை சரிபார்த்துக் கொள்ளுங்கள்.

பொழுது மெதுவாக புலர ஆரம்பித்தது. வெளிச்சம் அந்த அறையில் இருந்த சாளரத்தின் வழியே உள்ளே வர முயற்சித்தது. இதுகாறும் நடந்த உரையாடல்களைக் கேட்டுக் கொண்டிருந்த ஒரு சிறிய குருவி வெளியே இரை தேடப் பறந்து சென்றது. அவ்வாறு பறக்கும் பொழுது அதன் அருகில் மற்றொரு பெரிய பறவை பறந்து வந்தது. இரண்டு பறவைகளும் சில நேரம் ஒன்றாகப் பறந்தன. அவைகள் என்ன பரிமாறிக் கொண்டன என்று யாருக்கும் தெரியாது. நமக்குத் தெரிந்த ஒன்று, அந்தப் பெரிய பறவை, நாம் ஏற்கனவே சந்தித்த குருவின் நண்பன் என்பது.

## அத்தியாயம் 6

கொழும்பின் மிகப் பெரிய கட்டிடங்களில் ஒன்று சிலோன் வங்கி. காலை பதினோரு மணி இருக்கும். திலகரத்னே கட்டிடத்தின் வட கோடியில் ஒரு அறையை நோக்கிச் சென்றார். அதன் முன் ஒரு காவலாளி அமர்ந்திருந்தான். அவன் திலகரத்னேவிற்கு வணக்கம் சொல்ல, அவர் பதிலுக்குச் சிரித்து விட்டு அறையின் உள்ளே சென்றார். அங்கு இருந்த ஒரு கருவியில் தனது கை ரேகையையும் கண் இமையையும் பதிவு செய்ய ஒரு கதவு திறந்தது. அதன் உள்ளே சென்றதும் கதவு தானாக மூட, அது மெதுவாகக் கீழ் நோக்கிப் பயணித்தது. சில நிமிடங்களுக்குப் பிறகு கதவு திறக்க, அவர் வெளியே வந்தார். அவரை வரவேற்க சில விஞ்ஞானிகள் காத்திருந்தனர். மொத்தம் ஐம்பது அறுபது பேர் வேலை செய்யும் இடம். அங்கு நடக்கும் வேலை, அதன் நோக்கம் முதலியன ஒரு சிலருக்கே தெரியும். அந்த ஒரு சிலரும் இப்பொழுது திலகரத்னேவுடன் இருந்தனர்.

அந்த இடம் ஒரு ரசாயான ஆராய்ச்சி மையம். பல கண்ணாடிக் குடுவைகளும், பல வண்ண திரவங்களும், உலகில் உள்ள ரசாயன ஆராய்ச்சி சம்பந்தப்பட்ட அனைத்து வித கருவிகளும், உபகரணங்களும் அங்கு இருந்தன. அனைவரும் தூய வெள்ளை நிற உடுப்பு அணிந்திருந்தனர். எந்தத் திரைப்படத்திலும் இப்படி ஒரு ஆராய்சிக் கூடத்தை சித்தரித்திருக்க மாட்டார்கள். அந்த அளவிற்கு தொழில் நுட்பத்தில் முன்னோடியாக இருந்தது.

அங்கிருந்தவர்களில் பெரும்பாலோர் தமிழர்கள். திலகரத்னேவுடன் பேசிக் கொண்டிருந்த சிலர் மட்டும் சிங்களர்.

அனைவரும் ஒரு கண்ணாடி மேஜையின் முன் அமர்ந்தனர். மேஜையின் மேல் ஒரு பெட்டி ஒன்று

இருந்தது. அதைத் திறந்து ஒரு விஞ்ஞானி விளக்கத் தொடங்கினர். இதில் உள்ள விஷக் கிருமிகள் தண்ணீரில் எளிதாக பெருகி வாழும் தன்மை உடையது. குடிநீர் தொட்டியில் கலந்து விட்டால் அங்கு வாழும் அனைவரது உடலிலும் இந்த விஷத் தன்மை பரவி விடும். இது உடலில் எந்த வித நோயையும் ஏற்படுத்தாது. அனால் ஆண் பெண் இரு பாலாரும் தங்களது இனப்பெருக்கும் சக்தியை இழந்து விடுவர். இந்த கிருமி உடலில் இருப்பது எந்த வித மருத்துவ பரிசோதனையிலும் கண்டு பிடிக்க முடியாத ஒன்று. ஒரு இனத்தை அழிப்பதற்கு இதை விட சிறந்த ஆயுதம் இது வரை யாராலும் கண்டுபிடிக்கப் பட்டதில்லை. காஷ்மிரி இந்துக்கள் விரட்டப்பட்டது போல இந்தத் தமிழர்களும் அழிக்கப் படுவர். காஷ்மிரி இந்துக்கள் இன்றும் அகதி முகாம்களில் அவதிப் பட்டுக் கொண்டு இருக்கிறார்கள். ஒரு சிறிய அறையில் பல குடும்பங்கள் வாழ்கின்றன. மன உழைச்சல், நோய், வசதிகள் இல்லாத வீடுகள் ஆகியவைகளால் குழந்தை பிறப்பு விகிதம் மிகவும் குறைந்து விட்டது. இதில் இந்தியர்கள் வெட்கப் படவேண்டிய விஷயம் என்னவென்றால் இன்றைய ஆளும் குடும்பம் காஷ்மிரி பிராமணர்கள் வழியில் வந்தவர்கள்.
http://www.satp.org/satporgtp/kpsgill/2003/chapter9.htm. ஒரு விஞ்ஞானி தனது கணனியில் இணையத்தளத்தில் உள்ள அந்தப் பக்கத்தைத் திறக்க அனைவரும் அமைதியாகப் படித்தனர்.

இதுவரை இது ஒரு பிரச்சனையாக இந்தியாவில் யாரும் பேசுவதில்லை. ஹிட்லரால் கூட வெற்றிகரமாக யூதர்களை அழிக்க முடிய வில்லை. ஹிட்லரின் வழி விஷ வாயுவினால் கொலை செய்வது. இது உலகின் கவனத்தை ஈர்த்தது. பல நாவல்களும் திரைப்படங்களுக்கும் இது வழி வகுத்தது. ஆனால் நமது வழிமுறை யாராலும் கண்டு பிடிக்க முடியாத ஒன்று.

இது எந்த அளவிற்கு சோதிக்கப் பட்டு உள்ளது? என்று

திலகரத்னே வினவ, இங்கு வேலை செய்யும் எந்தத் தமினனுக்கும் குழந்தை பிறக்க வில்லை. பலரும் பலவித மருத்துவ பரிசோதனைகள் எடுத்துள்ளனர். நாங்களும் அந்த ரிப்போட்டுகளைப் படித்து விட்டோம். எந்த வித சந்தேகத்திற்கும் இடம் இல்லை.

திலகரத்னே அந்த பெட்டியை மூடி தனது கையில் எடுத்துக் கொண்டார். இன்று வீடு சென்றவுடன் உங்களது வங்கிக் கணக்கைப் பாருங்கள். அதில் ஒரு கணிசமான தொகை சேர்ந்திருக்கும். திலகரத்னேயின் கையில் ஒரு சிறிய குப்பியை ஒரு விஞ்ஞானி கொடுக்க, அதைத் தனது பையில் வைத்துக்கொண்டார்.

என்னோடு கொஞ்சம் வெளியே வாருங்கள் அன்று அனைவரையும் தான் வந்த வழியே அழைத்துச் சென்றார். தான் முதலில் நுழைந்த அறை வந்தவுடன், எல்லாரையும் சிறிது வெளியே நிற்கச் சொல்லிவிட்டு, அங்கிருந்த சுவரில் இருந்த ஒரு சிறிய கணணியை இயக்கினார். இரண்டு நிமிடங்களில் வெளியே வந்து அனைவரைய்ம் பார்த்து, நாம் அனைவரும் இன்று மாலை எட்டு மணிக்கு தாஜ் ஹோட்டலில் அறை எண் 1024 இல் சந்திக்கலாம். உங்கள் மகிழ்ச்சிற்காக எல்லாவித ஏற்பாடுகளும் செய்யப்பட்டுள்ளன.

திலகரத்னே தனது வண்டியில் ஏறி வீட்டிற்குச் சென்று விட்டார். தனது வாழ்வில் இன்று ஒரு மறக்க முடியாத நாளாக அமையப் போவதை எண்ணி மனதிற்குள் மகிழ்ந்து கொண்டார்.

அதே சமயத்தில் குரு தனது கணணி மூலம் அங்கு நடப்பதைக் கவனித்துக் கொண்டிருந்தான். அங்கிருந்த கதவுகள் அனைத்தும் தானாகவே மூடின. வேலைசெய்யும் அனைவரும் என்ன நடக்கிறது என்று தெரியாமல் விழித்தனர். குருவிற்கு உதவி செய்த அங்கிருந்த காவலாளி என்ன நடக்கிறது என்று கேட்க, குருவின் கண்களில் இருந்து கண்ணீர் அருவியாகக் கொட்டத் தொடங்கியது. அந்த அறை முழுவதும் விஷப் புகை பரவத் துடங்கியது. மேலும் பார்க்க விரும்பாத குரு கணணியை மூடிவிட்டு வாய்விட்டு அழுதான்.

குருவிற்கு அழுகை நிற்க நீண்ட நேரம் ஆயிற்று. தன் கண் முன்னே ஐம்பது அறுபது பேர் இறப்பதைப் பார்ப்பது மிகவும் கொடுமையானது. அதை விடக் கொடுமையானது இதை எதிர்த்து ஏதும் செய்ய முடியாத நிலைமை.

தனது கணணியில் பதிவான இந்த நிகழ்ச்சியை உடனே இணைய தளத்தில் போடலாம். அனால் இதனால் ஆகப் போவது ஒன்றும் இல்லை. இலட்சக் கணக்கான காஷ்மிரி பிராமணர்களுக்கு நடந்ததே இங்கும் நடக்கும். மிஞ்சி மிஞ்சிப் போனால் இரண்டு நாட்கள் செய்தித் தாள்களிலும், தொலைக் காட்சியிலும் காண்பிப்பார்கள். அதன் பின் சச்சின் சதம் அடித்தால் அதைப் பிடித்துக் கொள்வார்கள். இதை வெளியிடுவதின் மூலம் எனக்கு தொந்தரவு வரலாம். இலங்கை அரசு என்னைத் தேட ஆரம்பிக்கலாம். எனக்குத் தகவல் அளித்தவர் இன்று உயிருடன் இல்லையென்றாலும், அரசு விழிப்படைய ஏதுவாகும். இந்த நிகழ்ச்சியை மறப்பதே மேலானது ஆகும்.

குரு தனது ரத்தம் சூடேருவதையும் நரம்புகள்

முறுக்கடைவதையும் உணர்ந்தான்.

திலகரத்னே தனந்து வீட்டை அடைந்தார். அவரது கைபேசி ஒலிக்க ஆரம்பித்தது. ஜனாதிபதியின் அழைப்பு. எடுத்தே ஆகவேண்டும். ஜனாதிபதி என்னாயிற்று என்று கேட்க, பெட்டி எனது கையில் தான் உள்ளது என்றார். அவர்களை என்ன செய்யப் போகிறாய் என்று வினவ, நாம் பேசியபடி, இன்று இரவு எட்டு மணிக்கு தாஜ் அறை எண் 1024 க்கு வரச்சொல்லியுள்ளேன். சரி அப்படியே செய்து விடு. ஜனாதிபதி, அனால் அவர்கள் நம் ஆட்கள் என்று தயங்க, திலகரத்னே வேறு வழியில்லை, உங்களை காப்பற்ற வேண்டிய பொறுப்பில் இருக்கிறேன். சரி எல்லோருக்கும் பரிசு கொடுத்து விட்டாயா என்று வினவ, ஆம் முடிந்து விட்டது. வீட்டிற்கு வரும் வழியில் செய்து விட்டேன். இணைப்பு துண்டிக்கப் பட்டது.

சரியாக எட்டு மணிக்கு தாஜ் அறை எண் 1024இல் அனைவரும் கூடினர். திலகரத்னே தனது பையிலிருந்து ஒரு பாட்டிலை எடுத்து அதன் மூடியைத் திருகித் திறந்தார். அந்த மூடியை நெளித்து குப்பைத் தொட்டியில் தனது கையால் போட்டார். ஏனெனின், அந்த மூடியில் ஒரு ஊசி செல்லும் அளவிற்கு ஒரு ஓட்டை இருந்தது. அதன் மூலம் காலையில் தன்னிடம் கொடுக்கப்பட்ட குப்பியில் இருந்த விஷத்தை அந்த பாட்டிலில் கலந்ததை யாருக்கும் தெரியாமல் மறைத்தார்.

காலையில் உங்களிடம் ஒரு பாட்டில் கொடுத்தேனே அதைப் பற்றி உங்களுக்குத் தெரியுமா என்று கேட்டார். நான்தானே உங்களிடம் செய்யச் சொன்னது என்று பதிலுக்கு திலகரத்னே கேட்டார். ஆம் ஆம் நீங்கள் தன் செய்யச் சொன்னீர்கள். ஒருவேளை மறந்திருபீர்களோ என்று நினைத்தேன். தனது வங்கிக் கணக்கில் பலகோடி ரூபாய் போடப்பட்டிருப்பதை அறிந்த பின் தனது பெருமையை தம்பட்டம் அடிக்க முற்பட்டார். அதற்குள்

சிறிது சரக்கு உள்ளே சென்றதால், பேச்சு அதிகமாக் வெளியே வந்தது.

திலகரத்நேயிடம், நீங்களும் சிறிது குடியுங்கள் என்று இன்னொரு குவளையில் ஊற்ற ஆரம்பித்தார். இல்லை மன்னியுங்கள், இன்றிரவு பத்தரை மணிக்கு ஜனாதிபதியைச் சந்திக்க வேண்டும். குடித்திருந்தால் கொன்றேவிடுவார். பேச்சைத் திசை திருப்ப, சரி அந்த மருந்தைப் பற்றி கூறுங்கள் என்றார். அந்தமருந்தை எப்படிவேண்டுமானாலும் கொடுக்கலாம். நீரில், பாலில், டீயில், ஏன் இந்த மதுவில் கூடக் கலந்து கொடுக்கலாம். இது வேலை செய்ய குறைந்தது நான்கு நாள் முதல் ஒரு வாரம் வரை ஆகும். ஒருவரது சிறுநீரகம், காப்பாற்ற முடியாத அளவிற்கு சேதம் அடைந்து விடும். என்று கூறிவிட்டு பலமாகச் சிரித்தார். வேறு வழியில்லாமல் திலகரத்னேயும் உடன் சிரித்தார். அனால் அதன் நடுவில் சிறிது சோகம் இழையோடியது. தமிழ் இனத்தை அழிப்பதற்காக சில சிங்களர்களையும் இழக்க நேரிட்டது வருத்தத்தைக் கொடுத்தது. ஒன்பதரை மணிக்கு திலகரத்னே அங்கிருந்து கிளம்பினார். அங்கு வெகு நேரம் இருக்க அவருக்குப் பிடிக்கவில்லை. சிலசமயம் தன் செய்யும் வேலை சரியானதுதானா என்று கேள்வி எழுவதைத் தடுக்க முடியவில்லை. இவ்வளவு கொலைகள் தேவைதானா என்றும் புரியவில்லை. தான் ஒரு சூழ்நிலைக் கைதியாக மாறிவருவதை உணர்ந்தார். தனக்கும் இதேபோல் ஒரு முடிவு இருக்கலாம் என்று உணர்ந்தார் . எத்தனை திலகரத்நேகள் இங்குள்ளனர் என்று யார் அறிவார்? ஜனாதிபதி ஒருவருக்கே தெரியும்.

குருவிற்கு இருப்பு கொள்ளவில்லை. நிலைமை கையை மீறிப் போய்விடுமோ என்று பயம் வந்துவிட்டது. இதுவரை இப்படி ஒரு பயத்தை உணர்ந்தது இல்லை. குருவின் மூளை மிக வேகமாகச் செயல்பட ஆரம்பித்தது.

இலங்கை கொழும்பில் உள்ள தனது நண்பர்களை தொடர்பு கொண்டு, நடந்ததை விவரித்தான். கேட்ட அனைவருக்கும் இரத்தம் கொதித்தது. என்ன செய்யவேண்டும் என்று சொல் குரு, உடனே எங்கள் உயிரைக் கொடுத்தாவது செய்து முடிக்கிறோம், இல்லை செத்து மடிகிறோம். இந்தக் கொடூரமான உலகில் வாழ்வதை விட சாவதே மேல் என்று உணரத் தொடங்கினர்.

நீங்கள் அந்த ரசாயனக் கூடத்திற்குச் செல்ல வேண்ண்டும். அதற்கு இன்னொரு வழி கட்டாயமாக இருக்க வேண்டும். சிலோன் வங்கி கட்டிடம் கட்டப்பட்ட நேரத்தில் அருகில் வேறெந்த கட்டிடமும் கட்டப் பட்டதா என்று கண்டுபிடியுங்கள். எனக்கு அரை மணி நேரம் கொடுங்கள். நான் இணையதளத்தில் தேடுகிறேன். நீங்கள் உங்களுக்குத் தெரிந்த வழியில் தேடுங்கள். அனால் யாரும் இருந்த இடத்தை விட்டு வெளியே நான் சொல்லும் வரை செல்ல வேண்டாம் என்று குரு உத்தரவு பிறப்பித்து விட்டு இனைய தளத்தில் தேட ஆரம்பித்தான்.

அமெரிக்க விண்கோள்கள் எடுத்த படங்கள் அனைத்தும் இணையதளத்தில் இருக்கிறது. யார் வேண்டுமானாலும் பார்க்கலாம். பூமியின் ஒரு இடத்தின் ரேகைகளை உபயோகப்படுத்தி அந்த புகைப்படங்களைப் பார்க்கலாம். அதேபோல் ஒரு இடத்தின் ரேகைகள் மற்றும் தேதி குறிப்பிட்டு பழைய படங்களையும் தேடலாம். இந்த வசதியை உபயோகப்

படுத்தி குரு பொறுமையாகத் தேட ஆரம்பித்தான். கால் மணி நேரத்தில் விடை கிடைத்து விட்டது. வங்கியின் வடபுறம் உள்ள கட்டிடம் இதே நேரத்தில் கட்டப்பட்டதுதான். இன்னும் ஒரு ஆச்சரியம் என்ன வென்றால் இரண்டு கட்டிடங்களும் ஒரே ஆழம் தோண்டப் பட்டவை. குரு தன் கொழும்பு நண்பர்களைக் கூப்பிட்டு இன்று இரவு வடபுறக் கட்டிடத்தின் மூலம் வங்கியின் கீழ தழத்திற்குப் போகச் சொன்னான், அவர்கள் தயாரித்த மருந்தில் மிச்சம் மீதி இருக்கும். அது எனக்கு வேண்டும்.

ஹோமாபதியில் ஒரு உட்பிரிவு இருக்கிறது. அல்லோபதி மருந்துகளினால் ஏற்படும் பக்கவிளைவுகளிலிருந்து குணப்படுத்த ஒரு முறை கண்டு பிடிக்கப் பட்டுள்ளது. எந்த மருந்தினால் பக்க விளைவுகள் ஏற்பட்டதோ அதே மருந்திலிருந்து அதற்கு மாற்று மருந்து ஹோமாபதி முறையில் தயாரிக்கலாம். எனவே எனக்கு அந்த விஷம் தேவை. முடிந்தவரை, நீங்கள் உள்ளே சென்ற தடயம் எதையும் விட்டுவைக்க வேண்டாம். உங்கள் நெஞ்சங்களைக் கல்லாக்கிக் கொண்டு செல்லுங்கள். இல்லையென்றால் இந்த வேலையை முடிக்க முடியாது. அந்த மருந்த எடுத்தவுடன் சொல்லுங்கள். அது ஜெர்மன நாட்டிற்கு அனுப்பப் படவேண்டும். அங்கேதான் ஹோமாபதி மருந்துகள் சிறந்த முறையில் தயாரிக்க முடியும். எனக்கு பத்து மில்லி லிட்டர் இருந்தால் போதுமானது. அனால் இன்று இரவுக்குள் எப்படியும் எடுத்தாக வேண்டும். ஆறு மணிக்கு சிலோன் வங்கிக்குச் சென்று விடுங்கள். என்னென்ன கருவிகள் எடுத்துச் செல்லவேண்டும் என்று நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. காஸ் கட்டர் நிச்சயமாய்த் தேவைப்படும். ஆனால் முடித்த வரை அதை உபயோகிக்காமல் திறக்க பாருங்கள். அனாவசியமாக இலங்கை ராணுவத்தை தட்டி எழுப்ப வேண்டாம். வெற்றிகரமாய் முடித்துவிட்டு எனக்குத் தகவல் சொல்லுங்கள்.

திலகரத்னே அந்த விஷத்தை உபயோகப் படுத்தாமல் தடுக்க வேண்டும். அதற்கு ஒரு வழி பலத்த பாதுகாப்புடன் இருக்கும் அவர் வீட்டில் புகுந்து அந்த விஷத்தை அழிப்பது. அனால் இது மிகவும் அபயகரமான் செயல். இதற்கு முன் முடிக்க வேண்டிய வேலைகள் பல உள்ளன.

குரு இணையதளத்தில் வேகமாக வேலை செய்ய ஆரம்பித்தான். முதலில் தான் பதிவு செய்த காட்சிகளைத் தன் நண்பர்கள் பலருக்கு அனுப்ப ஆரம்பித்தான். இணைய தளத்தில் நேரடியாக வெளியிடுவதை விட இது பாதுகாப்பானது. ஜெனிவா நகரத்தில் உள்ள சில சிலருக்கு அனுப்பி ஐக்கிய நாடுகளின் அலுவலகத்தில் சேரும்படி செய்தான். பின்பு டெல்லி, வாஷிங்டன், லண்டன் முதலிய நகரங்களுக்கு அனுப்பி அங்குள்ள அரசு அலுவகங்களில் சிலருக்கு அனுப்ப ஏற்பாடு செய்தான். பன்னாட்டு உளவுத் துறைகளான இன்டர்போல், சி.ஐ.எ. , கே.ஜி.பி முதலிய துறைகளுக்கும் அனுப்பிவைத்தான். இதன் மூலம் இலங்கை அரசுக்கு நிச்சயமாக நெருக்கடி வரும் என்று குருவிற்கு தெரியம்.

இலங்கை ஜனதிபதி மாளிகை. உதவியாளரின் தொலைபேசி தொடர்ந்து ஒலிக்க ஆரம்பித்தது. குரு அனுப்பிய தகவல்கள் வேலை செய்ய ஆரம்பித்து விட்டன. ஜனதிபதியின் அலுவலகத்தில் என்ன பேசுவதென்று தெரியவில்லை. உடனடியாக ஜனதிபதியைத் தொடர்பு கொண்டனர். அவருக்கும் இந்த தொலைபேசி அழைப்புகள் அதிர்ச்சியாக இருந்தது. முதலில் இலங்கை அரசுக்கு என்ன நடந்தது என்று தெரியாது. என்ன தகவல் மற்ற நாடுகளிடம் இருக்கிறது என்றும் தெரியாது. எனவே ஜனாதிபதி இப்போதைக்கு எதுவும் பேச வேண்டாம் என்று கூறிவிட்டு, அவர்களிடம்

உள்ள தகவலைப் பெறச் சொன்னார். தகவல் குரு பதிவு செய்த காட்சிகள் அனைவரும் பார்க்க, ஜனாதிபதியே உறைந்து விட்டார்.

ஒவ்வொருவரும் மூச்சு திணறி உயிர் விடுவது கொடுமையை இருந்தது. தனது அலுவலகத்தில் சிலருக்குத் தெரிந்தது கூட ஜனாதிபதிக்குப் பிடிக்கவில்லை. யாரும் கேள்வி கேட்க மாட்டார்கள் என்றாலும், தனது முதுகின் பின் இது நிச்சயம் பேசப்படும். யாரவது சினிமாவிற்காக பதிவு செய்ததாக இருக்கலாம் என்று பொய் சொல்லச் சொன்னார். திலகரத்நேவை வெளி உலகில் யாருக்கும் தெரியாததால் இலங்கை அரசால் எளிதாக மறுக்க முடிந்தது. ஜனாதிபதி தொலைபேசி மூலம் திலகரத்நேக்கு நடந்ததைச் சொல்லி, சில நாட்கள் இங்கு வரவேண்டாம் என்று கூறினார். இரண்டு வாரங்கள் ஓய்வு எடுக்கச் சொன்னார். குரு நினைத்த காரியம் முடிந்தது. குரு பெருமூச்சு விட்டான். எப்படி மக்களின் ஞாபக சக்தி குறைவானதோ அரசியல் வாதிகளின் ஞாபக சக்தியும் குறைவானதே. இன்னும் சில நாட்களில் இப்படி ஒரு ஒளிப்பதிவு கிடைத்ததை மறந்து விடுவார்கள். இது எனக்கு தெரிந்ததைப் போல ஜனாதிபதிக்கும் திலகரத்நேக்கும் தெரியும். எனவே அதிக நாட்கள் கடத்தாமல் திட்டத்தை அமல் படுத்த முயற்சிப்பார்கள். அதற்கு முன்பாக நாம் தமிழர்களைக் காப்பாற்றியாக வேண்டும். மாற்று மருந்தை நம்பி இருக்க முடியாது. அதில் தவறு ஏதும் நடந்தால் இலங்கை தமிழ் இனம் வாரிசு இன்றி அழிந்துவிடும். அன்று இரவு ஜனாதிபதிக்கும் தில்கரத்நேக்கும் தூக்கம் வரவில்லை. ஏனென்றால் நாளை எந்த செய்தித் தாளில், தொலைக் காட்சியில் இந்த தகவல் வெளியாகும் என்று பயந்து இருந்தனர். இரவெல்லாம் தொலைக் காட்சிப் பெட்டியை மாற்றி மாற்றிப் பார்த்துக் கொண்டிருந்தார். ஜனாதிபதிக்கு இருப்புக் கொள்ளாமல் தனது உதவியாளரை அழைத்து செய்தி நிறுவனங்களுக்கு

அழைத்துப் பேசச் சொன்னார். நாளைய தலைப்புச் செய்தி என்ன என்று வினவச் சொன்னார். விசேஷமாக ஏதும் இல்லை. இந்தத் தகவல் ஏன் வெளிவரவில்லை என்று தெரியவில்லை. ஜனாதிபதியும் திலகரத்நேயும் படுக்கையில் உருண்டு கொண்டு இருக்கும் பொழுது, குருவின் நண்பர்கள் வங்கிக்கு அடுத்த கட்டிடத்தில் தங்களது வேலையை ஆரம்பித்தனர்.

கட்டிடத்தின் முன்பு எந்தவிதக் காவலும் இல்லை. இரும்புக் கதவில் இருந்த பூட்டை உடைக்கும் பொழுது இரவு பதினோரு மணி இருக்கும். சாலையில் நடமாட்டம் அதிகம் இல்லை. கட்டிடத்தின் முன்பு பெரிய வண்டி ஒன்றை நிற்கச் செய்து அதன் என்ஜினை ஓட விட்டிருந்தனர். எனவே யாருடைய கவனத்தையும் ஈர்க்காமல் வேலை செய்ய முடிந்தது.

எல்லோருடைய உடலிலும் கேமரா, மைக், ஸ்பீக்கர் முதலியன இருந்தன. அவை அனைத்தும் ஒரு சிறு கணணி மூலம் இணைய தளத்தில் பரவிக்கொண்டு இருந்தது. குரு அங்கு நடப்பதை மிகவும் கவனத்துடன் பார்த்துக் கொண்டு இருந்தான்.

இரும்புக் கதவை தாண்டியவுடன் ஒரு கண்ணாடிக் கதவு இருந்தது. அது மின்னணு பூட்டால் பூட்டி இருந்தது. தங்களிடம் இருந்த சில கார்டுகளை அதில் போட்டு முயற்சித்ததில் சில நிமிடங்களில் திறந்தது. அதன் பின்பு மிகப் பெரிய இரும்புக்கதவு ஒன்று இருந்தது. இந்தக் கதவு சாலையிலிருந்து பத்து மீட்டர் தொலைவில் இருந்தது. எனவே காஸ் கட்டர் மூலம் திறந்ததால் பரவாயில்லை என்று குரு உத்தரவு இட்டான். குருவின் மனதில் யாரேனும் உயிருடன் இருக்க வாய்ப்பு இருக்கலாம் என்ற ஐயம் எழுந்தது. எனவே எல்லா இடைத்தையும் நன்றாக தேடச் சொன்னான். அனைவரையும் பிராணவாயு எடுத்துச் செல்லச் சொன்னான். குரு எதிர்பார்த்ததுபோல, ஒரு பெண்மணி அங்கிருந்த சமையல் அறையில் சிறு முனகலுடன் கிடந்ததாள். அவளை உடனே வெளியே கொண்டு வந்து இரும்புக் கதவுக்கு வெளியே அமரச் செய்தனர்.

குருவின் கணனியில் ஆறு படங்கள் ஓடிக

கொண்டிருந்தன. அவற்றை எல்லாம் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் எதிபார்த்த குப்பி கிடைக்க வில்லை. அவை வெளியே இருக்க வாய்ப்பு இல்லை. எனவே எல்லா அலமாரிகளையும் தேடச் சொன்னான். வெளியே உள்ள அந்தப் பெண்ணிடம் விசாரிக்கச் சொன்னான். அவள் திரும்பவும் உள்ளே வந்து ஒரு ரகசிய இடத்தைக் காட்ட அதை உடைத்துப் பார்க்கையில் அதன் உள்ளே குரு தேடிய விஷம் இருந்தது. வேலை முடிந்தது. அனைவரும் கிளம்புங்கள். அந்தப் பெண்ணை வெளியே விட வேண்டாம். உங்கள் இடத்திற்கு அழைத்துச் செல்லுங்கள். வெளி உலகிற்கு அவள் இறந்ததாகவே இருக்கட்டும். அனைவரும் வெளியே வந்து வண்டியில் ஏறி தப்பித்துச் செல்ல குரு நிம்மதியாகத் தூங்க ஆரம்பித்தான். ஆனால் தூங்கிய சில நிமிடங்களில் அவனது கனவுகளில் எல்லாம் இறந்தவர்களில் ஆவிகள் வந்து ஏன் எங்களைக் காப்பாற்றவில்லை என்று கேட்க ஆரம்பித்தன. குருவிற்கும் உறக்கம் போய் விட்டது.

இன்னும் ஒரு வாரத்திற்குள் இலங்கை செல்ல வேண்டும். இல்லையென்றால் திலகரத்னேயின் திட்டத்திலிருந்து நம் மக்களைக் காப்பாற்ற முடியாது. கண்ணன், மீனா, அமிதாப், திரிஷா ஆகிய நான்கு பேரையும், இலங்கை செல்லத் தயாராய் இருக்கச் சொன்னான். குரு சென்னையிலிருந்து கிளம்பி, மதுரையை அடுத்துள்ள மேற்குமலை தொடர்ச்சியில் உள்ள காடுகளுக்குச் சென்றான். குருவின் சொந்த ஊரும் அங்கே தான் இருக்கிறது. வத்திராயிருப்பு என்று பெயர். ஓர் சிறிய அழகிய ஊர். குருவின் தந்தை, தாத்தா பிறந்து வளர்ந்த இடம். வதிராயிருப்பை ஒட்டி சதுரகிரி என்று ஒரு மலை இருக்கிறது. அங்கு தான் குரு போய்க் கொண்டிருக்கிறான்.

மலையின் மேல் தனியாக நடந்து சென்று கொண்டிருந்தான். அவனுக்குத் துணையாக ஒரு நாய் கூடவே ஓடி வந்து கொண்டிருந்தது. அந்த மலையில் யார் தனியே போனாலும் ஒரு நாய் துணைக்கு வரும். இதைப் பலரும் அனுபவித்தும் பார்த்தும் இருக்கிறார்கள்.

சிறிது தூரம் சென்றவுடன் ஒன்றிரண்டு குடியிருப்புகள் தோன்றின. அனைத்தும் அங்கேயே கிடைத்த கல் மண் செடி கொடி முதலியன கொண்டு கட்டியவை. கீழே நகரத்திலிருந்து எதுவும் கொண்டு வரப்படவில்லை. இந்த பண்டைமுறைத் தொழில் நுட்பம் இப்பொழது இலங்கை மக்களுக்குத் தேவைப்படுகிறது. அங்கு காடுகளைத் திருத்தி சிறுசிறு பாத்திகளாகப் போட்டு நெல் முதலிய தானிய வகைகள் பயிரிட்டு இருந்தனர். ஐம்பது வருடங்களுக்கு முன் இருந்த நெல் வகைகளைத் தேடிப்பயிறிட்டு இருந்தனர். இந்த நெல் வகைகள் பூச்சி மருந்து இரசாயன உரம் இன்றி வளர்க்கப்பட்டவை. அங்கு இருந்தவை குருவிற்குத் திருப்தியைக் கொடுத்தன. பல

ஆண்டுகளின் முயற்சி நல்ல வெற்றியைத் தந்துள்ளது. இனி இலங்கைத் தமிழர்கள் யாருடைய உதவியும் இன்றி வாழலாம். அதற்குத் தேவையான எல்லா ஏற்பாடுகளும் செய்து முடிக்கப்பட்டுள்ளன. பல ஆண்டுகளாகத் திட்டமிட்டு முயற்சி செய்தவைகள் இன்னும் சில வாரங்களில் நடைமுறைக்கு கொண்டுவரப்பட்டு வெற்றிப்பாதையில் செல்லும். அங்குள்ளவர்களையும் இலங்கை செல்லத் தயாராய் இருக்கும்படிச் சொல்லிவிட்டு, குரு முதலில் இலங்கை நோக்கிப் பயணப்பட்டான். அப்பொழுது குருவின் தோளில் ஒரு பறவை வந்து அமர்ந்தது. சிறிது நேரத்தில் குருவின் முகத்தில் கவலை ரேகைகள் தோன்றின. குரு நடையைத் துரிதப்படுத்தினான்.

திலகரத்னே மிகுந்த கோபத்துடன் இருந்தார். தன்னை ஜனாதிபதி இரண்டு வாரம் விடுப்பு எடுக்கச் சொன்னதை அவரால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை, ஆனால் எங்கு தவறு நடந்தது என்று தெரிந்து கொள்ள ஆசைப்பட்டார். அந்த இடத்தின் சாவியை எடுத்துக் கொண்டு தனியாக வண்டியில் சென்றார். இரவு மணி பதினொன்று இருக்கும். சாலையில் நடமாட்டம் இல்லை. வண்டியை, குருவின் ஆட்கள் திறந்த கதவின் அருகில் நிறுத்தினார். பூட்டைத் திறக்க முயற்சி செய்த பொழுது பூட்டு வேற மாதிரி இருந்தது. மிகவும் விலைகுறைந்த பூட்டாய் இருந்தது. வண்டியில் இருந்த ஒரு இரும்புக் கம்பியைக் கொண்டு பூட்டை எளிதில் உடைத்தார். இரும்புக் கதவைத் திறந்து உள்ளே சென்றால் கண்ணாடிக்கதவு திறந்து இருந்தது. அதையும் தாண்டி உள்ளே சென்ற பொழுது இரும்புக் கதவு உடைக்கப்பட்டிருப்பதைக் கண்டார். உடைத்த கதவின் வழியே உள்ளே செல்ல முயற்சி செய்த பொழுது பிணவாடை அவரை உள்ளே விடவில்லை. அதற்கு மேல் உள்ளே செல்ல அவருக்கு விருப்பம் இல்லை. ஆனால் அப்படியே விட்டுச் செல்லவும் முடியாது. பிண வாடை எப்படியும் வெளியே வரும். நான் பலருக்குப்பதில் சொல்லவேண்டிவரும். எனவே அந்த இடத்தை எரிக்க முயற்சி செய்தார். எரியும் தன்மையுள்ள சில திரவங்களைத் தேடி எடுத்து, அவைகளைக் கீழே ஊற்றி நெருப்பை எரியவிட்டார். பின்பு வெளியே வந்து வண்டியை எடுத்துக் கொண்டு அங்கிருந்து கிளம்பினார். வண்டிக்கண்ணாடியில் பார்த்தபொழுது புகை அங்கிருந்து வெளியே வருவது தெரிந்தது. திலகரத்னே தனது திட்டத்தை தனியே ஜனாதிபதியின் அனுமதியில்லாமல் நிறைவேற்ற எண்ணினார்.

இந்தச் செய்திதான் குருவைக் கவலையடையச் செய்தது. தனது கணக்கு தவறானது என்று உணர்ந்தான் குரு.

தனது இலங்கை நண்பர்களை எச்சரிக்கையுடன் இருக்கச் சொன்னான் குரு. தானும் அங்கு வருவதாய் கூறிவிட்டு குரு புறப்பட்டான்.

திலகரத்னேயின் வீட்டிற்கு அடுத்தநாள் காலை ஒரு ஆம்புலன்ஸ் வந்தது. அதில் மூன்றுபேர் வெள்ளை உடையணிந்து இருந்தனர். அவர்கள் வீட்டின் உள்ளே சென்று அரைமணி நேரம் களித்து வெளியே வந்தனர். அப்பொழுது அவர்கள் கையில் ஒரு பெட்டியிருந்தது. அது திலகரத்னே வங்கியில் இருந்து கொண்டு வந்த விஷப் பெட்டி. மூவரும் வண்டியில் ஏறி இலங்கைத் தமிழர்கள் வாழும் அகதி முகாமை நோக்கிச் சென்றனர். குரு தனது ஆட்களை முதலிலேயே தயார் படுத்தியிருந்தான். வண்டி நகரைத் தாண்டி வேகமாய்ச் சென்றது. ஒரு பாலத்தின் அருகே செல்லும் பொழுது அங்கே இரண்டு மூன்று பிளாஸ்டிக் பைகள் கிடந்தன. அந்த பைகளின் மேல் வண்டியின் சக்கரம் ஏறும் பொழுது அந்தக் கண்ணிவெடி அங்கு அது தீப்பிழம்பாய் மாறியது. திலகரத்னேயின் திட்டம் முறியடிக்கப்பட்டது என்று குரு மகிழ்ந்தான். ஆனால் திலகரத்னேவிற்கு மட்டுமே தெரியும் அந்தப் பெட்டி காலியானது என்று. விஷம் அவரிடமே இருந்தது. எதிரியை ஏமாற்றுவதில் திலகரத்னே நிகரற்றவர். திலகரத்னே ஜனாதிபதியின் உதவியாளர் மட்டும் அல்ல, இலங்கை உளவுத்துறையின் தலைவரும் கூட. அன்று இரவே ஒரு கவச வண்டியில் அந்த விஷம் அகதிமுகாமிற்குக் கொண்டு செல்லப்பட்டு முகாமிற்குக் குடிநீர் தரும் கிணற்றில் கலக்கப்பட்டது.

இந்தச் செய்தியும் குருவிற்குக் கிடைத்தது. அவரைத் தவறாக எடைபோட்டதை உணர்ந்தான். உடனே "ஜர்மனிக்குத் தொடர்பு கொண்டு விஷம் கிடைத்த தகவலை உறுதிபடுத்திக் கொண்டான். ஆனானும் குருவின் மனதில் பயம் பரவத் தொடங்கியது. மருந்து தயாரிப்பதில் தவறு ஏற்படலாம். அல்லது மருந்து வேலை செய்யாமல் போகலாம். ஹோமாபதியில் மருந்து சிலருக்கு வேலை செய்யலாம் சிலருக்கு வேலை

செய்யாமல் போகலாம். ஆண்களுக்கு வேலை செய்யலாம். பெண்களுக்கு வேலை செய்யாமல் போகலாம். குழந்தைகளுக்கு மட்டும் வேலை செய்யலாம். பெரியவர்களுக்கு வேலை செய்யாமல் போகலாம். ஒரு இனம் தன் கண்முன்னே மெதுவாய் அழிய வாய்ப்பு இருப்பதை உணர்ந்தான். தன்னால் பல தமிழர்கள் திலகரத்னேவால் கொல்லப்படுதைத் தடுக்க முடியாமல் போனது போல் இதிலும் தோற்றுவிட்டால் என்ன செய்வது? ஆண்டவன் விளையாட்டின் முடிவை யார்தான் அறிவார்? முடிவு தெரிந்தால் நாம் விளையாடுவதை நிறுத்திவிடுவோமே! இதற்கு முன் சில இனங்கள் அழிவதை வேடிக்கை பார்த்தவர் தானே இந்த இறைவன்! இலங்கைத் தமிழர்கள் அழிவதை தடுக்காமல் வேடிக்கை பார்த்தால் என்ன செய்வது?

இலங்கையின் தமிழர் அகதிகள் முகாம். வெள்ளி அதிகாலை ஐந்தரை மணி இருக்கலாம். கீழ்வானம் இன்னும் சில நிமிடங்களில் சிவக்கலாம். காற்று சிறிது குளிரை இருந்தது .

திடீரென்று அபாயச் சங்கு ஒலிக்க ஆரம்பித்தது. அனைவரும் அலறி அடித்துக் கொண்டு எழுந்தனர். இளம் தாய்மார்கள் உறங்கும் குழந்தைகளை அள்ளிக்கொண்டு இருந்தனர். அரைத்தூக்கத்தில் இருந்த குழந்தைகள் அழத் துடங்கினார். வயதானவர்கள் எழ முடியாமல் சிரமப் பட்டனர்.

வடக்கே துப்பாக்கி சுடும் சப்தம் கேட்டது. சிங்களக் காவலாளிகள் அலறும சப்தம் கேட்டது. ஒலி பெருக்கியில் ஒரு பெண் பேசத் தொடங்கினால். “நீங்கள் குடிக்கும் நீரில் விஷம் கலந்து உள்ளது. தமிழர் இனத்தை அடியோடு அழிக்கத திட்டமிட்டு உள்ளனர். உயிர் பிழைக்க வேண்டுமானால் தெற்கு முகமாக ஓடுங்கள். அங்கே உங்களுக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. தெற்கு வாசலில் ஒரு தமிழன் வெள்ளைக் கொடியுடன் இருந்தான். அதில் எந்தவித உருவமோ, குறியோ இல்லை. சமாதானக் கொடி போல் தூய்மையாய் இருந்தது. வயதானவர்கள், உடல் நலம் இல்லாதவர்களை மட்டும் ஏற்றிச் செல்ல சில வண்டிகள் மட்டும் நின்று கொண்டு இருந்தன. கர்ப்பிணிப் பெண்களும் அதில் ஏற்றிக் கொள்ளப் பட்டனர்.

பலர் என்ன செய்வது என்று தெரியாமல் தயங்கி நின்றனர். வானத்தில் பறவைகள் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. பலர் குழப்பத்தில் என்ன செய்வது என்று தெரியாமல் அழத் தொடங்கினர். அதிலும் முக்கியமாகப் பெண்கள்.

அப்பொழுது ஒலிபெருக்கியில் குரு பேச ஆரம்பித்தான். அந்தக் குரலில் ஒரு கம்பீரம் இருந்தது. ஒரு கனிவு இருந்தது. தெளிவு இருந்தது. எல்லாவற்றிற்கும் மேல் ஒரு ஈர்ப்பு இருந்தது. "உங்கள் தயக்கம் எனக்குப்,புரிகிறது. துயரங்கலையே சந்தித்த உங்களுக்கு முடிவு எடுப்பது மிகவும் சிரமம். சந்தேகமும் குழப்பமுமே உங்கள் உள்ளங்களில் நிரம்பி இருப்பது எனக்குத் தெளிவாகத் தெரிகிறது. நீண்ட நேரம் பேசி உங்கள் நேரத்தை வீணடிக்கப போவதில்லை. இலங்கை ராணுவத்திடமிருந்து உங்களைக் காப்பாற்றும் பொறுப்பு எனக்கு உள்ளது. வானத்தை பாருங்கள். அங்கு சில பறவைகள் வட்டமிட்டுக் கொண்டு இருக்கின்றன. அவை இப்பொழுது உங்களை நோக்கி கிழே இறங்கி வரும். பின்பு தெற்கு முகமாக உங்களை அழைத்துச் செல்லும். அங்கே உங்களுக்கு அமைதியான, நிமதியான, எளிமையான, பாதுகாப்பான வாழ்க்கை கத்துக் கொண்டு இருக்கிறது. எனது பெயர் குரு என்று கூறி முடித்தான்.

குருவின் பேச்சைக் கேட்டவுடன், மந்திரதிற்குக் கட்டுப்பட்டது போல பலர் தெற்கு முகமாக நடக்கத் தொடங்கினர். கர்பிணிப் பெண்கள், வயதானவர்கள், குழந்தைகள் , நோய்வாய்ப் பட்டோர் வண்டியில் ஏறிக் கொள்ள மீதம் உள்ளோர் நடக்கத் தொடங்கினர். குரு மீண்டும் ஒலி பெருக்கியில், " நீங்கள் போகும் இடத்தை உங்களுக்கு அருவிக்க முடியாத முடியாத நிலையில் இருக்கிறேன். இலங்கை அரசுக்குத் தகவல் தெரிந்தால் இதைத் தடுக்க முயற்சிப்பார். பறைவைகள் உங்களை சரியாக வழி நடத்திச் செல்லும்" என்று குரு கூறி முடித்தவுடன், "குரு வாழ்க. தமிழர் வாழ்க " என்ற கோஷம் சிறிது சிறிதாகப் பெருகி வானை எட்டியது. அக்கோஷம் மக்களின் உடல் எங்கும் பரவி ஒரு சக்தியைக் கொடுத்தது. குருவின் மீது நம்பிக்கையும் பிறந்தது.

குருவின் மனது பயத்தில் நிரம்பி இருந்தது. மூன்று காலமும் உணர்ந்தவன் ஆயினும் , மனித உடலுக்குள் வந்த எந்த உயிருக்கும் சிறிது பயம் வரத்தான் செய்யும். இலங்கை அரசுக்குத் தகவல் போய், அவர்களது விமானப் படை தாக்குதல் நடத்தினால் என்ன செய்வது என்று எண்ணத் தொடங்கினான். தகவல் போய் சேர்ந்து அவர்கள் கூடிப் பேசி நடவடிக்கை எடுக்க எப்படியும் இரண்டு மூன்று மணியாவது ஆகலாம். அதற்குள், மக்கள் தங்கள் இலக்கை அடையலாம்.

அதை தடுக்கத் திட்டமிட்டான் குரு. இந்திய அரசுக்கு ஒரு பொய்யான தகவலை அனுப்பி வைத்தான். இலங்கை அரசு, தமிழர்களில் அகதி முகாமில் தாக்குதல் நடத்தி இலங்கைத் தமிழர்களை அழிக்கத் திட்டமிட்டு இருப்பதாக. நிச்சயமாக இந்திய அரசு கேள்வி கேட்கும். எனவே தாக்குதல் திட்டம் சிறிது தள்ளிப் போகலாம், அல்லது கைவிடப் படலாம். குரு எண்ணியது போலவே, ஜனாதிபதி மாளிகையில் தொலை பேசி ஒலிக்க ஆரம்பித்தன.

நடை சிரமமாய் இருந்தது. வழியில் தாகத்திற்கு வண்டியில் தண்ணீர் இருந்தது. ஆனால் அவை அளவோடு கொடுக்கப் பட்டது. பலவண்டிகள் வேகமாய் முன்பு சென்று மக்களை இறக்கி விட்டு வந்து மீண்டும் பலரை அழைத்துச் சென்றது.

காட்டில் சென்று அடைந்தவர்களுக்குச் சூடாக கஞ்சி இருந்தது. பயத்திலும், குழப்பத்திலும் இருந்தவர்களுக்கு கஞ்சி இதமாக இருந்தது. மனதில் பயமும், குழப்பமும், நிச்சயமற்ற எதிர்காலம் இருந்தாலும், பசுமையான, உயர்ந்த அடர்ந்த காடு ஒரு பாது காப்பான உணர்வைத் தந்தது. குழைந்தைகள் கஞ்சியைக் குடித்து விட்டு ஓடியாட விளையாடத் தொடங்கினர். அவர்கள் ஏற்படுத்திய சப்தம் அனைவரது மனதில் இருந்த இறுக்கத்தை குறைத்தது.

பெரியோர்கள் குழந்தைகள் ஓடியாடி விளையாடுவதைத் தடுக்க முயற்சித்தனர். அப்பொழுது அமிதாப்பும் திரிஷாவும் “ கவலைப் படாதீர்கள், நாடு உங்களை வீழ வைத்தது. காடு உங்களை வாழ வைக்கும். இந்தக் காட்டில் உள்ள விலங்குகள், பறவைகள், புழு பூச்சிகள், இல்லை செடி கொடிகள் அனைத்தும் குருவின் ஆதிக்கத்தில் உள்ளவை. உங்களுக்கு நன்மை தவிர வேறு ஏதும் இங்கு நடக்காது. குழந்தைகள் இங்கு தொலைந்து போவதற்கு வாய்ப்பு இல்லை. எனவே சுதந்திரமாய் அவர்களை விளையாட விடும்கள். வாழ்வின் முழு சுதந்திரத்தையும் அவர்கள் இங்கு அனுபவிக்கட்டும். அவர்கள் இன்று முதல் உங்கள் குழந்தைகள் இல்லை. அவர்கள் இந்த காட்டின் குழந்தைகள், இயற்கையின், இலங்கைத் தமிழர்களின், எல்லாவற்றிற்கும் மேல், குருவின் குழந்தைகள். எனிவே நிம்மதியாக இருங்கள். பயத்திலேய வாழ்ந்த உங்களுக்கு நிம்மதியை அனுபவிப்பது கூட சிரமமாய் இருக்கலாம். இந்தக் காடு உங்கள் அன்னையின் மடிக்குச் சமமானது. இங்கு நிம்மதியாக உறங்கலாம். மக்கள் அனைவரது மனதிலும் ஒரு நிம்மதி பரவுவதை உண்டார, நடந்த களைப்பு தீர அங்காங்கே மக்கள் உறங்கத் தொடங்கினர். தாயை முழுமையாய் நம்பி வாழும் ஒரு சிறு குழந்தையின் உணர்வோடு அனைவரும் உறங்கத் தலைப் பட்டனர்.

அமிதாப், திரிஷா, கண்ணன் மற்றும் மீனா அனைவரும் களைத்துப் போயிருந்தனர். சிறிது உறங்கலாம் என்று நினைக்கும் பொழுது, தூரத்தில் புழுதிப் படலம் தெரிவதைப் பார்த்தனர். அதையே கவனிக்கத் தொடங்கினர். முதலில் பறவைகள் வானில் வட்டமிட்டபடி மெதுவாகப் பறந்து கொண்டிருந்தனர். பின்பு வெள்ளை கோடி தெரிந்தது. எல்லாம் திட்டமிட்டபடிச் செல்வதை உணர்ந்தனர். அதே சமையம் இவ்வளவு போரையும் எப்படிக் காப்பாற்றப் போகிறோம் என்றும் பயந்தனர். அதே சமயம் குருவை நினைக்கும்

பொழுது பயம் பஞ்சைப் பறந்தது.

முதலில் இளைஞர்கள் பலர் வந்து சேர்ந்தனர். இன்னொரு வண்டியில், பெரிய பெரிய பாத்திரங்கள் வந்து இறங்கின. பாத்திரத்தில் ஒரு கல்யாண மண்டபத்தின் பெயர் எழுதி இருந்தது. அந்தக் கல்யாண மண்டபத்திற்கு ஒரு ஓ போட்டுவிட்டு, அவைகளை இறக்கத் தொடங்கினர். அடுப்பு அமைக்கத் கற்களைத் தேடி பலர் அலைய ஆரம்பித்தனர். சிலர் பெண்கள், குடத்தை எடுத்துக்கொண்டு எங்கு செல்வது என்று தயங்கும் பொது, ஒரு நாய் குறைக்கத் தொடங்கியது. நாயின் பின்னே செல்லுமாறு கண்ணன் கூற, பெண்கள் நடையை கட்டினர்.

அமைதியும், பசுமையும், ஒரு கம்பீரமும் நிறைந்த காட்டில் நடக்கும் பொழுது அவர்கள் மனதில் இது காலமும் இருந்த பயமும் குழப்பமும் குறையத் தொடங்கின. அமைதியாய்ச் சென்ற அனைவரும் தண்ணீருடன் திரும்பும்போது பேசிக் கொண்டும், சிரித்திக் கொண்டும் வந்தனர். பலர் இவ்வாறு சிரித்து பல்லாண்டுகள் இருக்கலாம்.

ஒரு வண்டியி இருந்து உணவுப் பண்டங்கள் இறக்கப் பட்டு, சமையல் ஆரம்பிக்கப் பட்டது. இந்த உணவு நிச்சயமாக அனைவருக்கும் போதாது. இருப்பதைப் பகிர்ந்து தான் உண்ண வேண்டும். அதே போல் உணவு பலருக்குப் போதவில்லை. குருவும் அவன் நண்பர்களும், சிறிது கஞ்சி மட்டும் குடித்தார்கள். அப்போழுது மெதுவாக இருட்ட ஆரம்பித்தது. குரு காட்டின் உள்ளே சென்று சிறிது நேரத்தில் திரும்பி பெண் வந்தாள். அப்பொழுது அவள் கையில் ஒரு பெரிய பலாப் பழம் இருந்தது. அதை அங்குள்ள குழந்தைகளும் குரு மற்றும் அவனது நண்பர்களும் உண்டனர்.

குருவும் அவனது நண்பர்கள் பட்டாளமும் நெருப்பைச்

சுற்றி அமர்ந்தனர். நெருப்பின் அனைவரது முகத்திலும் நடனம் ஆடியது. பெரிய மரங்கள் காவல் தெய்வம் கருப்ப சாமி போல் காட்சி அளித்தது. குரு மெதுவாகப் பாடத் தொடங்கினான். களைத்த கசங்கிய, குழம்பிய இதயங்களுக்கு இந்தப் பாட்டு இதமாய் இருந்தது. உடலில் இருந்த சோர்வும் பசியும் சிறிது மறைந்தது. மனம் ஆடத் தூண்டியது. சூழ்நிலை சாதகாய் இருந்தாலும் உடல் களைப்பின் மிகுதியால் ஒத்துழைக்க மறுத்தது. எனவே பலர், மெதுவாக, தலையை ஆட்டியும் கால்களால் தாளமிட்டும் இசையை ரசித்தனர். சில பெண்களும் இவர்கள் அருகில் வந்து குருவின் பாடலைக் கேட்க ஆரம்பித்தனர். பெண்களைப் பார்த்தவுடன் பலரின் உடம்பில் ஒரு புது ரத்தம் ஓட, அனைவரும் ஆடத் தொடங்கினர். கண்ணனும், மீனாவும், திரிஷாவும் அமிதாப்பும் ஒருவரை ஒருவர் பார்த்துப் புன்னகை செய்து கொண்டனர். அவைகளில் ஒருவித வெட்கம் கலந்து இருந்தது. குரு பாடிக்கொண்டு இருக்கும் பொழுது அவனது மனதில் சோகமும் , துயரமும், வேதனையும் கலந்த குரல் ஒலித்தது. பாடுவதை நிறுத்தி விட்டு இரண்டு மூன்று நண்பர்களை அழைத்துக் கொண்டு காட்டில் அங்காங்கே தங்கி இருக்கும் மக்களைக் காணச் சென்றான். குரு எதிர் பார்த்ததுபோல், ஆங்காங்கே பலர் வியாதியின் பிடியில் சிக்கி துயரப் பட்டுக் கொண்டு இருந்தனர். அவர்களை ஒவ்வொருவராய், அவர்களது நாடிப் பிடித்துப் பார்த்து , தனது தெய்வீக சக்தியின் மூலம் அவர்களது வேதனையைக் குறைத்தான். இப்பொழுது காட்டின் உள்ளே சென்று மூலிகைகள் பறிக்க முடியாது. ஏனென்றால் மரம செடி கொடிகள் உறங்கிக் கொண்டிருக்கும். நாளை உங்கள் அனைவருக்கும் , மருந்து செய்து தருகிறேன் என்று கூறிவிட்டு அவர்கள் உறங்க ஏற்பாடு செய்து விட்டு வந்தான். இந்த வேலை முடிந்தவுடன் அனைவரும் ஆங்காங்கே தூங்கிப் போயினர். குருவும் பலநாட்களுக்குப் பிறகு நிம்மதியாகத் தூங்கினான்.

இலங்கை ஜனாதிபதி மாளிகை. காலை ஆறுமணி இருக்கலாம். அவரது அறையில், திலகரத்னே, புதிதாய் நியமிக்கப் பட்ட முப்படைத் தளபதிகள், மற்றும் சில மந்திரிகள் கூடி இருந்தனர். அவசரகாலம் தவிர இந்த மாதிரி அதிகாலைக் கூட்டங்கள் ஏற்பாடு செய்யப் படுவது இல்லை. அகதிகள் முகாமிலிருந்து தமிழர்கள் தப்பித்துச் சென்றதைப் பற்றி விவாதிக்கக் கூடி இருந்தனர்.

ஜனாதிபதி “ எல்லோரும் எங்கே சென்று மறைந்தார்கள்?” என்று வினவ யாரும் எந்த பதிலும் சொல்ல வில்லை. அவர்கள் காட்டிற்குள் சென்றது அனைவருக்கும் தெரியும். ஜனாதிபதி மேலும் சப்தமாகப் பேச ஆரம்பித்தார், “ நமக்கு முன் டெல்லிக்கு எவ்வாறு தகவல் தெரியம்? அவர்களுக்கு எதிராக எந்த வித வன்முறையும் பயன் படுத்தக் கூடாது என்று மிரட்டு கிறார்கள்” என்று மிகுந்த கடுப்புடன் பேசினார். திலகரத்னே “ நாம் செய்ய வேண்டியதை அவர்களே செய்து கொண்டார்கள்” என்று கூற, ஜனாதிபதி அவரைப் பார்த்து முறைக்க, அனைவரும் அமைதி ஆனார்கள். உணவு மற்றும் மருத்துவ வசதி இல்லாமல் அனைவரும் மடியப் போகிறார்கள் என்று கூற, திலகரத்னே, இல்லை, நமது உணவுக கிடங்குகள் அனைத்தும் கொள்ளை அடிக்கப் பட்டு காலியாக இருக்கிறது. நாம்தான் பசியால் வாட வேண்டி வரும். இப்பொழுது நமக்குத்தான் பஞ்சம். அடுத்த அறுவடைக்கு இன்னும் மூன்று மாதங்கள் இருக்கின்றன. உணவு அவசரமாக இறக்குமதி செய்ய வேண்டும்.

திலகரத்னே, “ எத்தனை வண்டிகள் வந்தன, எங்கிருந்து வந்தன, என்று யாருக்கும் தெரிய வில்லை. பல கல்யாண மண்டபங்களில் பாத்திரங்கள் திருடப்பட்டுள்ளன.

மாடுகள் பல திருடப்பட்டதாக புகார்கள் வந்து குவிகின்றன. யாரோ பல மாதங்களாக திட்டமிட்டு இதை நடத்தியது போல் தெரிகிறது. யார், எந்தக் கூட்டம், குழு தீவிரவாதிகள், புலிகள் என்று தெரியவில்லை. நமக்குத் தெரிந்த யாரும் இதைச் செய்து இருக்க முடியாது. எந்த அரசின் துணையோடும் இதைச் செய்ததாகத் தெரியவில்லை தமிழக அரசோ, இந்திய அரசோ இதில் ஈடு பட வில்லை. அப்படி இருந்தால் நமக்கு தகவல் வந்து இருக்கும். தமிழகத்தின் பல கட்சிகள் நம்மிடம் பணம் வாங்குபவை. எனவே நமக்குத் தகவல் வந்திருக்கும். நம்மை எதிர்த்துப் பேசுவார்கள். அனால் அது அங்கு ஒட்டு வாங்க. ஆனால் மறைமுகமாக நமக்கு உதவி செய்வார்கள். “ என்று சொல்லி முடித்தார்.

மற்ற படைத் தளபதிகள் புதிதாகப் பதவிக்கு வந்தவர்கள். பல விபரங்கள் தெரியாது. எனவே அமைதியாக இருந்தனர். ஜனாதிபதி அவர்கள் எதாவது சொல்வார்கள் என்று எதிர் பார்த்து , அவர்கள் பக்கம் பார்வையைத் திருப்பினார். ஆனால், தளபதிகள் சொல்வதற்கு ஏதும் இல்லாததால் கண்களைக் கீழே நோக்க விட்டனர். “எனது படையை அனுப்பி, அவர்களைப் பிடித்து வரவா?” என தரைப் படைத் தளபதி வினவ, ஜனாதிபதி அவரை முறைத்துப் பார்த்தார். தனது யோசனை முட்டாள்தனமானது என்று அவருக்கே புரிந்தது.

“ஒரு பிரச்சினை தானாகவே தீர்ந்து இருக்கிறது. அவர்களுக்கு சாப்பாடு, மருத்துவ வசதி ஏதும் தரத் தேவை இல்லை. இப்படி இருக்கும் பொழுது அவர்களை மீண்டும் அழைத்து வந்து அல்லல் படவா?” என்றார் ஜனாதிபதி.

திலகரத்னே “தொல்லை ஒழிந்தது என்று விட்டு விடலாம்” என்றார். வரவர அவருக்கும் இந்த வேலை பிடிக்க வில்லை. ஜனாதிபதி அவர்களை அப்படி விட்டு

விடக் கூடாது. அங்கே என்ன நடக்கிறது என்று எனக்குத் தெரிய வேண்டும்" என்றார். திலகரத்னே மௌனம் சாதித்தார். ஜனாதிபதி, திலகரத்நேவிற்கு இது பிடிக்க வில்லை என்பதை உணர்ந்தார். எனவே மேலும் வற்புறுத்த ஜனாதிபதி விரும்பவில்லை. அதே சமையம் திலகரத்நேவிற்கு உள்ளுக்குள்ளே ஆசை இருந்தது. உளவுத் துறை தளபதி அல்லவா?

திலகரத்நேவின் ஆட்கள் அடுத்த நாள் காலை காட்டினுள் நுழைய முயற்சித்தனர். ஆனால் அவர்கள் அனைவரும் விஷ வண்டுகளால் கொட்டப்பட்டு, வேதனை தாங்காமல், காட்டை விட்டு வெளியேறி விட்டனர். திலகரத்நேவிர்க்கு எந்த வித தகவலும் கிடைக்க வில்லை. காட்டினுள் யாரும் செல்லவில்லை. யாரும் வெளியே வரவும் இல்லை. ஒன்றிரண்டு தமிழர்களைப் பார்த்துப் பேசினால், தங்கள் சந்தோஷமாக இருப்பதாயும் குறை ஒன்றும் இல்லை என்றும் பதில் வந்தது. வேறு ஏதும் கேள்வி கேட்டால் , ஒரு புன்னகையைப் பதிலாய் கூறிவிட்டு, நகர்ந்து விடுகின்றனர். சிங்களப் போலீசிற்கு அவர்களைக் கைது செய்யவும் பயம். எங்கிருந்து யார் வந்து தாக்குவர்களோ என்று.

சதுரகிரி மலையில் வெற்றிகரமாய் சோதனை முறையில் செய்த பயிரிடு முறை இங்கு அமல் படுத்தப் பட்டு பல தானியங்கள், பருப்பு வகைகள் விளைவிக்கப் பட்டன. இதற்காக காடுகள் ஆங்காங்கே சுத்தப் படுத்தப் பட்டது. மரங்கள் எதுவும் வெட்டப் படவில்லை. இயற்கை உரம் உபயோகிக்கப் பட்டது. அவர்களுக்குத் தேவையான உணவு அங்கே உற்பத்தி ஆனது. சமையல் தேவை குறைக்கப் பட்டது. முடிந்தவரை காய்கறிகள், பழங்கள் பச்சையாகவே உண்ணப் பழகிக் கொண்டனர். மாமிசம் உண்பது தடை செய்யப் பட்டது. எந்த உயிரையும் கொல்வதற்கு இங்கு அனுமதி கிடையாது. ஒரு சிலர் இறந்து கிடந்த பறவைகள் உடலை சுட்டு சாப்பிட்டனர். சில காலத்திற்குப் பின் அந்தப் பழக்கமும் நின்று போயிற்று. இயற்கை உணவை உண்டதால் மக்களிடையே நோய் நொடி இல்லை. அவ்வாறு வரும் சிறு பிரச்சினையைக் கூட மூலிகை மருந்துகளால் குணப் படுத்தினர். பலருக்கு இந்த மருத்துவ முறை சொல்லிக்

கொடுக்கப் பட்டது. தமிழர்கள் காட்டை விட்டு வெளியே சென்று இந்த மருத்துவ முறையை உபயோகப் படுத்தி சிங்களவர்களுக்கும் உடல் நலம் தேற வழி வகுத்தனர். இதன் மூலம் படிப படியாக சிங்களவர்களுக்கும் தமிழர்களுக்கும் இடையில் ஒரு நல்ல உறவு ஏற்பட்டது.

உணவே மருந்து மருந்தே உணவு என்ற எளிய முறை மக்களுக்குப் போதிக்கப் பட்டது. சமைக்காத உணவு பெரும்பங்கு வகித்தது. எனிவே எரிபொருள் தேவை குறைந்தது. எளிமையாய், சுதந்திரமாய், இயற்கையோடி இணைந்து, ஒருவருக்கொருவர் துணையாய், வாழப் பழக்கப் படுத்தப் பட்டனர். காட்டில் உள்ள சொத்துக்கள் அனைவருக்கும் அவர்கள் தேவைக்கு ஏற்ப பகிர்ந்து அளிக்கப் பட்டது. இந்தியாவில் உள்ளது போல் அங்கு யாரும் தேவைக்கு மேல் எதையும் வைத்துக்கொள்ள முடியாது. இதனால் எந்தப் பொருளுக்கும் தட்டுப்பாடு இல்லை. எதுவும் அழிக்கப் படாதலால், காடுகள் வளரத் தொடங்கியது.

அனால இங்கே இந்தியாவில், நிலம் தேவைக்கு அதிகமாக வைத்துக் கொள்ள அனுமதிக்கப் படுகிறது. வீடுகளும் இரண்டு மூன்று என்று வைத்துக் கொள்கிறார்கள். இதனால் அதனின் விலை அளவுக்கு அதிகமாக ஏறி எளிய மக்கள் வாங்க முடியாத நிலை ஏற்பட்டுள்ளது. தனது வாழ் நாள் முழுவதும் சேமித்தாலும் ஒரு வீடு சென்னையில் வாங்க முடியாது.

மனிதன் இயற்கையை அழிக்க முயற்சிக்கும் பொது, அது தனது சீற்றத்தை சுனாமி, நில நடுக்கம், மற்றும் எரிமலை வெடிப்பு மூலம் வெளியிடுகிறது. நாம் இயற்கையைப் பாதுகாத்தால் இயற்கை நம்மைப் பாதுகாக்கும். இது இவ்வுலக நியதி. உலக நியதி கடைப்பிடிக்கப் படும் பொழுது உலகில் அமைதியும் செழிப்பும் நிலவுகிறது. அது மீறப்படும் பொழுது கலவரங்களும், குழப்பங்களும் வெடிக்கின்றன. இதைப் பார்த்து யாருக்கும் பொறாமை

வராது. எனவே யாரும் படையெடுத்து வர ,மாட்டார்கள். எனிவே தனியே ராணுவம் தேவை இல்லை. யாரிடமும், தேவைக்கு அதிகம்மகப் பொருட்கள் இல்லை. எல்லோருடைய தேவைக்கும் பொருட்கள் உள்ளன. எனவே திருட வேண்டிய தேவைய்ம் இல்லை. குரு ஒரு புதிய, நிலையான எளிமையான, ஆசைகளும், ஆதிக்கங்களும், ஆரவாரமும் இல்லாத அமைதியான ஒரு புதிய உலகத்தை நிர்மாணித்தான்.

இலங்கையில் தனது வேலைகளை முடித்தவுடன், அடுத்த வேலை குருவிற்குத் தயாராய் இருந்தது. தனது நண்பர்களிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்பத் தயாராய் இருந்தான். அவனது நண்பர்கள், அங்கு புது வாழ்க்கையைத் தொடங்கிய அனைத்து மக்களின் கண்களிலும் கண்ணீர், அதிகாலைப் பனித்துளியாய் துளிர்த்து நின்றது. யாருக்கும் குருவைத் தடுத்து, தங்களிடம் தங்கவைத்துக் கொள்ள தைரியம் இல்லை. அது முடியாத காரியம் என்றும் தெரியும்,

குருவினால், இலங்கைத் தமிழர்கள் அடைந்த சுதந்திரமும், புதிய, எளிய, நோய் நொடியற்ற, இயற்கையுடன் இணைந்த வாழ்க்கை, உலகில் இன்னும் பல சமுதாயங்களுக்குத் தேவைப்படலாம். உலகில், பல இடங்களில், பல தரப்பட்ட மக்கள் சொல்லமுடியாத துக்கங்களில் மூழகியுள்ளனர்.

இதையறிந்த இலங்கைத் தமிழர்களும், குருவின் நண்பர்களும் குருவைத் தடுக்க நினைக்கவில்லை. அதேநேரம், குருவைப் பிரிந்து வாழவும் தைரியம் இல்லை. குருவின் தன்னலமற்ற சேவையும், அவனது திறமைகளும், சக்திகளும், இயற்கை, பறவைகள், விலங்குகள் குருவிற்கு செய்யும் உதவிகளும் கண் கூடாய்ப் பார்த்தபின் குருவைப் பிரிய மனம் வரவில்லை.

எனவே, அவனது நண்பர்களும், குருவுடன் செல்லத் தீர்மானித்தனர். அமிதாப், “குரு, நீ இல்லாமல் எங்களுக்கு இந்த இடம் பாலைவனமாய்த் தோனறும். எங்கள் மனம் மற்றும் உயிர் உன்னையே எண்ணிச் சுற்றிக் கொண்டிருகக்கும், உடல் மட்டும் இங்கு நடைபிணமாய்த் திரியும், எங்களையும் உன் உடன்

அழைத்துச் செல்.” குருவும் யோசிக்க ஆரம்பித்தான். இராமருக்கு இலங்கேஷ்வரனை வெல்ல அனுமனும், வானரப்படையும் தேவைப்பட்டது, அதுபோல் தனக்கும் இவர்கள் தேவைப்படலாம், என்று எண்ணி, குரு யோசிக்க ஆரம்பித்தான்,

நேரம் மாலைப் பொழுது, கதிரவன் மிகவும் சிரமப்பட்டு தனது கதிர்களை, அந்த இலங்கைக் காடுகளில் உள்ளே செலுத்திக் கொண்டிருந்தான். பறவைகள் அடையும் நேரம் நெருங்குவதை உணர்ந்து, சப்தமிட்டுக் கொண்டு இரையை விரைந்து தேடுவதும், இரை கிடைத்த பறவைகள் குஞ்சுகளுக்கு ஊட்டுவதற்கு கூட்டை நோக்கிப் பறப்பதுமாய் இருந்தன. அருகினில் ஒடையில் நீர் கற்களுக்கு இடையே பாய்ந்து ஓடி, ஓர் இனிமையான இரைச்சலை ஏற்படுத்திக் கொண்டிருந்தது. சிறு குழந்தைகள் மரங்களுக்கு இடையே சப்தமிட்டபடி ஓடி ஆடி விளையாடிக் கொண்டிருந்தனர்.

அப்பொழுது ஒரு பெரியவர் "குரு, நீ நிறந்தரமாய் எங்களை விட்டுப் பிரியப் போகிறாயா?” என்று ஒரு குழந்தை போல் கேட்டார். அவரது கண்களிலும் கண்ணீர். துக்கம் தொண்டையை அடைத்தது. இலங்கை அகதி முகாமில் நோய்வாய்பட்டு, கவனிப்பாரற்று, சாகும் தருவாயில் இருந்த தன்னை இங்கு கொண்டு வந்து, தன்னை மூலிகைகளால் குணப்படுத்தி, உடலுக்கு ஆரோக்கியமும் மனதுக்கு நிம்மதியும் கொடுத்த குருவைப் பிரிய மனம் வரவில்லை. அருகில் வந்து குருவைப் பிடித்துக் கொண்டு கட்டியணைத்து அழத்தொடங்கினார், அதைப் பார்த்த பலரும் ஓடிவந்து குருவைக் கட்டிப்பிடிக்க முயன்றனர். அவர்களது அன்புக்கு கட்டுப்பட்டு குரு ஏதும் பேச முடியாமல், கண்ணீர் மல்க நின்றான். ஒவ்வொருவராய்த் தன்னிலைக்கு வந்து, பிடியைத் தளர்த்த,இறுதியில் குரு விடுபட்டான்.

அதன்பின் பெண்கள் அனைவரும் குருவை முற்றுகையிட்டனர். “குரு மூன்று நாட்கள் தங்கி, எங்கள் கையால் சாப்பிட்டு விட்டுத்தான் நீ கிளம்ப வேண்டும். அதற்குள் நாங்களும் உன்னைப் பிரிந்து வாழ எங்களைப் பழக்கிக் கொள்கிறோம் எனறு ஒரு வேண்டுதலை வைத்தனர். ஆறு மாதமாக குருவின் அன்பில் திளைத்த தாய்மார்கள், தங்களது மகனைப் பிரிவது போன்ற துக்கத்தை அனுபவித்தனர். என்ன செய்வது என்று குரு யோசிக்கும் பொழுது வானில் ஒரு அழகிய பறவை வட்டமடிக்க ஆரம்பித்தது.

முன்று முறை வட்டமடித்துவிட்டு,குருவிற்கு எதிரே ஒரு கிளையில் அமர்ந்தது. அந்தப் பறவையை அனைவரும் கண்டனர். தோற்றத்திலும், அதன் கம்பீரத்திலும், அழகிலும் ஈடு இணையற்ற பறவையாய் இருந்தது. கழுகின் கம்பீரமும், மயிலின் வனப்பும், கிளியின் பசுமையும், புறாவின் மென்மையும், குருவிகளின் குதூகலமும், கலந்ததாய் இருந்தது. குருவும் அந்த பறவையும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர். பறவை மெதுவாகத் தலையை அசைத்தது. குரு "சம்மதம், அனைத்திற்கும் சம்மதம்" என்று கூறி முடிப்பதற்குள், அங்கு கரவோசையும், ஆரவாவமும், இளைஞர்களின் சீட்டி ஒலியும், பறவைகளின் சப்தங்களும், மான், மயில்,மற்றும் முயல்களின் துள்ளல்களும், வானையெட்டின. கதிரவனால் சிவந்திருந்த வானம், இருளின் ஆட்சிக்கு இடம் கொடுத்து ஒதுங்க, நிலவொளி அங்கு வீசத் தொடங்கியது.

காய்ந்த விறகுகளைத் தீயிட்டு,அதனைச் சுற்றிப் பெண்களும், ஆண்களும் நடனமாடத் தொடங்கினர். அவர்கள் நடனத்திற்கு, தாளம் சேர்க்க, குரு, துடும்பு என்னும் ஒரு தாள வாத்தியத்தை வாசிக்க ஆரம்பித்தான். கோகுலத்தில் கண்ணனின் குழலுக்குக் கட்டுப்பட்ட, கோபியர்களும், காளைகளும், பசுக்களும் போல இங்கு குருவின் தாளத்திற்குக் கட்டுப்பட்டு

இலங்கைத் தமிழர்கள் தங்களை மறந்து, ஒரு மோன நிலையில் ஆடத் தொடங்கினர்.

அதிகாலை 4-30 மணி. காடு இன்னும் விழிக்கவில்லை. குழந்தைகள் அம்மாவின் சேலைக்குள் ஒழிந்து கொண்டு தூங்கிக் கொண்டிருந்தன. வயதானோர் ஓரிருவர் அரைத்தூக்கத்தில் இருந்தனர். பறவைகள் அனைத்தும் தங்கள் கூடுகளில் தூங்கிக் கொண்டிருந்தன. மாடுகள், கன்றுகள் ஆடுகள் எதுவும் விழிக்கவில்லை. ஆனால் குருவும் அவனது நெருங்கிய நண்பர்கள் நால்வரும் பயணத்திற்குத் தயாராயினர்.

குரு மெல்லிய குரலில் பேசத் தொடங்கினான். நாம் ஆப்கானிஸ்தான் நோக்கிப் புறப்படுகிறோம். உங்கள் பெயர்கள் மீண்டும் மாறப் போகின்றன. ஏற்கனவே மாம்பலம் மின்ரயில் நிலயத்தில் தங்கள் பெயர் மாற்றப்பட்டதை அனைவரும் நினைவு கூர்ந்தனர். நேற்று நடந்ததுபோல் அனைவரது மனத்திலும் பசுமையாய் இருந்தது. தங்கள் வாழ்கை எப்படியெல்லாம் மாறிப்போனதை உணர்ந்தனர்.

பெயர்கள் மாறியபின், நால்வரும், தங்கள் தாய் தந்தையினரை மறந்தனர். அண்ணன் தங்கைகளை மறந்தனர். சுற்றம், சூழல், நண்பர்கள் கல்லூரி, பள்ளிகளையும் மறந்தனர். குருவும் இலங்கைப் போராட்டமும் தங்களை முழுமையாய் ஆக்கிரமித்து இருந்ததை உணர்ந்தனர். கனவிலும் நினைக்க முடியாத வாழ்க்கையையும், போராட்டத்தையும், இறுதியில் வெற்றியும் குருவின் மூலம் கிடைத்த நிம்மதியும், மகிழ்ச்சியும் தங்களது நாடி, நரம்பு, மனம், இரத்தம், தசை, தோல்களில், எலும்புகளில் பரவிப் பாய்ந்து இருப்பதை உணர்ந்தனர். பயணம் ஆரம்பித்தவுடன் தங்களது பழைய உலகும், வாழ்க்கையும் மெதுவாக நால்வரது மனதிலும் பரவத்தொடங்கியது.

அவரகளது எண்ண ஓட்டத்தை உணர்ந்த குரு "நாம் சென்னை வழியாகத்தான் செல்கிறோம். ஒரு வாரம் உங்களுக்கு விடுமுறை. உங்கள் தாய், தந்தை, குடும்பம் நண்பர்கள் அனைவரையும் சந்தியுங்கள். மகிழ்ச்சியாய் இருங்கள். ஒரு வாரம் முடிந்தவுடன் ஏப்பிரல் 8ஆம் தேதி காலை 8 மணிக்கு மாம்பலம் இரயில் நிலையத்தில் சந்திக்கலாம்" என்று குரு கூறினான். இனைவருக்கும் இது மகிழ்ச்சியைத் தந்தது. இதே சமயம், பழைய உலகிற்குச் செல்ல சிறிது பயமாயும், தயக்கமாயும் இருந்தது. இதுகாறும், தங்களைப் பிரிந்து இருந்த அவர்கள் எப்படியிருக்கிறார்களோ என்ற கவலையும் இருந்தது. பலவித உணர்ச்சிகளால் ஆளப்பட்டு அவர்கள் இலங்கையின் கடற்கரைக்கு வந்தனர். அங்கு ஒரு படகு தயாராய் இருந்தது.

குரு அவர்களைப் பார்த்து உங்கள் பெயர்கள் மீண்டும் மாறப் போகின்றன. அகமது, முகமது, ஆயிஷா, மும்தாஜ் என நால்வருக்கும் பெயரை மாற்றினான். படகோட்டி, ஐவரையும் இனிய முகத்துடன் வரவேற்றான். அப்போழுது இரண்டு பெண்கள், அவர்களை நோக்கி வர குரு அவர்களை வரவேற்றான். அவர்களது கைகளில் பாத்திரங்களும் கூடைகளும் இருந்தன. அம்மாவும் மகளும் போல் காட்சியளித்தனர். தாய் குருவைக் கட்டிப்பிடித்து கன்னங்களில் மாறி மாறி முத்தமிட்டாள். மகள் அண்ணா என்று கூறிக்கொண்டு, குருவைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

தன்னிலைக்கு வந்த தாய், அனைவரையும் ஒரு மர நிழலில் ஒரு போர்வையை விரித்து அமரச் செய்தாள். அதன்பின் தன் கூடைகளில் இருந்த உணவுகளையும், பழங்களையும், அனைவருக்கும் அளித்து, அவர்கள் உண்பதை இரசித்துக் கொண்டிருந்தாள். மகள் ஓடியாடி அவர்களுக்குப் பரிமாறினாள், அன்பும் பாசமும் நிறைந்த அந்த உணவில் சுவைக்குக் குறைவில்லை. வயிறாற அனைவரும் உணடபின், படகில் அனைவரும் ஏற, படகு

கிளம்பியது. பெண்டிர் இருவரும் ஏதும் பேசாமல், பெரு மூச்சுடன் குருவின் பார்வை மறையும் வரை கையசைத்துக் கொண்டு கரையில் நின்றனர்.

## அத்தியாயம் 3

மதுரை இரயில் நிலையம். பாண்டியன் விரைவு வண்டிக்காக காத்துக் கொண்டிருந்தனர். குருவின் கையில் குளிரூட்டப்பட்ட மூன்றாம் வகுப்புக்கான டிக்கெட் கையில் இருந்தது. அந்தப் பெட்டியின் கதவின் அருகே, பயணிகளின் பட்டியலில்

குரு 25
அகமது 26
முகமது 24
ஆயிஷா 23
மும்தாஜ் 25

என்று எழுதி இருந்தது. காலையில் சூட்டப்பட்ட பெயர் அதற்குள் எப்படி இந்த அட்டவணையில் வந்தது என்று சிறிது குழம்பினாலும் குருவின் சக்தியை அறிந்தவர்களாதலால் ஏதும் பேசாமல் வண்டியில் ஏறினர். மறுநாள் காலை ஏப்பிரல் 1 ஆம் தேதி. அனைவரும் அவர்களது குடும்பங்கடிளக் காண ஆவலுடன் விரைந்தனர்.

ஏற்கனவே முடிவு செய்தபடி , ஏப்பிரல் 8 ஆம் தேதி மாம்பலம் இரயில் நிலையத்தில் ஐவரும் ஒன்று கூடினர். 9-15 க்கு சென்ட்ரலிருந்து புது டில்லிக்குப் பயணப்பட வேண்டும். "வாருங்கள் போகலாம்" என்று அவர்களைக் கிளப்பினான். 9 மணியளவில் அவரகளது இருக்கையில் அனைவரும் அமர்ந்து, தங்கள் சாமான்கனளயும், பைகளையும் பத்திரமாக வைத்தனர். வண்டி கிளம்ப இன்னும் 15 நிமிடங்கள் இருந்தன.

இவர்கள் இருந்த பகுதியில் ஆறாவது இருக்கை காலியாக இருந்தது. யாரும் வருதுபோல் தெரியவில்லை. எனவே ஐவரும் சுதந்திரமாகப் பேச முடிந்தது. குருவுடன்

ஒரு நீண்ட பயணம் செய்வது அனைவருக்கும் பிடித்திருந்தது. குருவுடன் இருந்தால் மனதில் ஒரு மகிழ்ச்சி, நிம்மதி, குதூகலம், ஆரவாரம், ஆர்ப்பரிப்பு, சிலிர்ப்பு என்று எவ்வளவோ உணர்ச்சிகள் மாறி மாறி வரும். கூடவே சிறிது பயமும், என்ன நடக்குமோ என்ற எதிர்பார்ப்பும் இருக்கும். ஆனால் இந்த பயங்கள் மற்றும் கவலைகள் குருவின் முகத்தைப் பார்த்தவுடன் பறந்துபோய்விடும்.

மும்தாஜ் கேட்டாள், “குரு, நீ நினைத்திருந்தால் விமானத்தில் எங்களை அழைத்துச் சென்றிருக்கலாம். ஆனால் ஏன் இந்த வண்டியைத் தேரந்தெடுத்தாய்?” குரு “சரியான கேள்வி. நான் உங்களுடன் பல விஷயங்களைப் பேச வேண்டியுள்ளது. ஒரு வாரமாக நான் பல தகவல்களைச் சேகரித்துள்ளேன். அவைகளை உங்களுக்குக் காட்டிப் பல விஷயங்களை விளக்க வேண்டியுள்ளது.” என்றான் ஆயிஷா, “நீ ஓய்வெடுக்கவில்லையா?” என்று கேட்க குரு, “ஓய்வெடுத்தேன். ஒரு நாளுக்கு சில மணி நேரம் வேலையிலேயே இவைகளைச் சேகரித்து விட்டேன்.” என்றான்.

பின்பு குரு, “நீங்கள் என்ன செய்தீரகள்" என்று வினவ, நால்வரும் சிறிது வெட்கத்துடன் பதில் சொல்ல ஆரம்பிக்கும் முன்பே, குரு அவரகளை இடைமறித்து, “ வேணடாம், வேணடாம், எனக்குப் புரிகிறது.” என்றான். அகமதுவும் ஆயிஷாவும், முகமதுவும் மும்தாஜும் ஒருவரை ஒருவர் விரும்புவது அனைவரும் அறிந்ததே.

வண்டி கிளம்பி 20-25 நிமிடங்கள் இருக்கும். சென்னையின் நெரிசலைவிட்டு நீங்கி வண்டி சிறிது வெளியே வந்தது. இலங்கையின் காட்டினுள் இயற்கையுடன் இயற்கையாக வாழந்த இவர்களுக்கு சென்னை சிறிது மூச்சு முட்டுவது போல் இருந்தது.

சூடான டீ வந்து கொண்டு இருந்தது. குரு அனைவருக்கும் கொடுக்கச் சொன்னான். ஆயிஷா பணம் கொடுக்க முற்பட்டாள். அப்பொழுது டீக்காரன், டில்லி வந்தவுடன் மொத்தமாக வாங்கிக் கொள்கிறேன் என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான். தேநீரை அனைவரும் அமைதியாகப் பருகினர். யாரும் அப்பொழுது பேசவில்லை. பருகி முடித்தவுடன் கோப்பைகளை ஒரு பையில் போட்டுவிட்டு குரு பேச ஆரம்பித்தான்.

"யாரேனும் "கைட் ரன்னர்" என்ற ஆங்கிலப் புத்தகத்தைப் படித்திருக்கிறீர்களா?" என்று வினவ நால்வரும் விழித்தனர். “அது பின்பு சினிமாக வந்தது. அதையாவது பார்த்தீர்களா?" என்று வினவ அவர்களது முகம் மேலும் களையிழந்தது. “சரி, நானே எல்லா விபரமும் சொல்கிறேன்." என்று பெருமுச்சு விட்டுக் கொண்டு, ஒரு நீண்ட பயணத்திற்கும் உரையாடலுக்கும் தன்னை ஆயத்தப் படுத்திக் கொண்டான்.

குருவின் முகத்தில் சோகம் படர ஆரம்பித்தது. ஆஃகானிஸ்தான் மக்கள் படும் அவதிகள் அவன் கண் முன்னே தோன்றின. புஸ்தகங்கள் மூலமாகவும், செய்தித்தாள், தொலைக்காட்சி இணையதளம் மூலமாகவும் ஆஃகானிஸ்தானைப் பற்றி பல விபரங்களைச் சேகரித்திருந்தான் குரு. உலக அரசியலில் சிறுவயது முதல் கவனம் செலுத்திய குரு ஆஃகானிஸ்தான் மீது சிறப்பு கவனம் இருந்தது. ஏனெனின் அங்குதான் மனித நேயம் குழி தோண்டிப் புதைக்கப் பட்டு பொது மக்கள், அதிலும் பெண்கள், விலங்குகளை விட மிக மோசமான நிலையில் வாழ்ந்து கொண்டு இருக்கிறார்கள்.

குரு பேச ஆரம்பித்தான். “ஆஃகானிஸ்தான் எங்கு இருக்கிறது என்று உங்களுக்கு தெரிந்து இருக்கலாம். பாகிஸ்தான், ஈரான், இரஷ்யா சீனா முதலிய நாடுகளால்

சூழப்பட்டு கடற்கரையோ துறைமுகமோ இல்லாத நாடாக இருக்கிறது. பழங்காலத்தில் "பட்டுப் பாதை" என்று அழைக்கப்பட்ட வியாபார வழித்தடம் ஆஃகானிஸ்தான் வழியாகச் செல்கிறது. ஐரோப்பா, பாரசீக இந்திய வாணிகம் இதன் வழியாகத்தான் நடந்தன. அலெக்சாண்டர் இந்தியா வந்ததும் ஆஃகானிஸ்தான் வழியாகத்தான். பிரான்ஸ் நாடும், ஆஃகானிஸ்தானும் ஒரே பரப்பளவைக் கொண்டவை. பல நதிகள், ஓடினாலும் பெரும்பகுதி, பாலைவனமாய்த் தான் இருக்கின்றன. இங்குள்ள மலைகள் பனி முடியவை. தட்ப வெட்பம் -15 முதல் 35 டிகிரி வரை இருக்கும்.

ஆஃகானிஸ்தானைப் பார்க்கும் போது, தமிழகம் ஒரு சொர்க்க பூமி போல் தெரியும். நான் கூறிய படத்திலிருந்து ஒரு காட்சியை இங்கு விவரிக்கிறேன். ஆஃகானிஸ்தானின் தலை நகரம் காபூல். கதை இங்கு தான் நடை பெறுகிறது. கதாநாயகன் தான் 8 வயது சிறுவன் முதல் 40 வயது மனிதனாய் வளரும்வரை உள்ள கதை. இந்த காலக்கட்டங்களில் காபூலில் நடக்கும் மாற்றங்களும், கொடூரங்களும் கதையில் அவனுடன் பின்னி வரும்.

காபூல் தாலிபான் ஆட்சியில் இருக்கிறது. தாலிபான் ஒரு தீவிரவாதக் கூட்டம். ஆஃகானிஸ்தான் முழுவதையும் கைப்பற்றி, ஆழுவதே அதன் நேக்கம். ஜனநாயகத்தின் மீது தாலிபான்களுக்கு நம்பிக்கை இல்லை. சர்வாதிகாரத்தில் நம்பிக்கை வைப்பவை. இஸ்லாமியத்தைத் தவறாகப் புரிந்து கொண்டு, பெண்களை விலங்கு போல் நடத்துபவர்கள். தாலிபான் ஆட்சியில் பெண்கள், பள்ளிக்குச் செல்லக்கூடாது, படிக்கக் கூடாது வேலை செய்யக் கூடாது. உடல் முழுவதையும் மறைத்துப பர்தா போட்டுத்தான் வீட்டை விட்டு வெளியை வர வேண்டும், என்று பல கடுமையான சட்டதிட்டங்கள் உண்டு. மீறுபவரகள் தயவு தாட்சண்யம் இன்றி சுட்டுக் கொல்லப்படுவர்.

காபுலின் முக்கிய வீதி. குண்டடி பட்டு தகர்ந்து போன கட்டிடங்கள். தெருவெங்கும் கல்லும் மண்ணும். பொது மக்களில், பாதிக்கும் மேற்பட்டோர் ஏதாவது ஒரு ஊனத்துடன் காணப்பட்டனர். கால்களை இழந்கவர்கள், கைகளை இழந்தவரகள், குருடர்கள், தலையில் அடிபட்டு கட்டுப் போட்டவர்கள், என்று பலவிதமான குறைகளுடன் அங்குள்ள மக்கள் நடந்து சென்று கொண்டு இருந்தனர்.

ஒரு பெண் கூடையில் ஏதோ ஒன்று வைத்து விற்றுக் கொண்டிருந்தாள். அவளிடம் வயதான ஒருவர் அதை வாங்க பேரம் பேசிக் கொண்டிருந்தார். அவர் காது சரியாகக் கேட்காதவர். அப்பெண்மணி சற்று உரக்கப் பேச வேண்டியிருந்தது. அப்பொது அருகில் இருந்த தாலிபான் காவலாளி, அப்பெண்ணின் கன்னத்தில் பளார் என்று அறைந்து, “பெண்கள் சப்தமாகப் பேசக்கூடாது" என்று எச்சரித்து விட்டுச் சென்றான். ஓரளவிற்கு காபூலின் நிலைமை புரியும் என நினைக்கறேன் " எனறான் குரு.

ஆயிஷா மற்றும் மும்தாஜ் கண்களில் சிறிது பயம் ஓடி மறைந்ததை குரு கவனிக்கத் தவறவில்லை. குரு அவர்களைப் பார்த்து உங்களுக்கு அங்கு அதிக வேலை இருக்கலாம் என்று நினைக்கிறேன் "

குரு இருக்கும் வரையில் கவலையில்லை என்று அனைவரும் நிம்மதி அடைந்தனர். ஆனால் குருவினால் அப்படியிருக்க முடியவில்லை. இலங்கைத் தமிழர் பிரச்சனையை விட 10 மடங்கு குழப்பமானவை. புரியாத மொழி. தெரியாத கலாச்சாரம். இஸ்லாமிய மதம். முரட்டுத் தனத்திற்குப் பேர் போனவரகள். கொடூரம் அவரகளின் கூடப் பிறந்தது. ஆஃகானிஸ்தான் மலைகளில் கஞ்சா அதிகமாக விளைகிறது. தீவிரவாதிகள் வருமானம் அதிலிருந்துதான் பெருகிறார்கள். இந்தியா வழியாக, அமெரிக்கா போன்ற மேலை நாடுகளுக்கு

ஏற்றுமதியாகுகிறது. ஒருவழியாகப் பார்த்தால் தீவிரவாதிகளை வாழ வைப்பது அமெரிக்காதான்.

## அத்தியாயம் 4

வெயில் மெதுவாக ஏறிக்கொண்டு இருந்தது. குளிரூட்டப்பட்ட பெட்டியாதலால் உள்ளே இதமாய் இருந்தது. குரு வேகமாய் ஓடும் மின்கம்பங்களைப் பார்த்துக்கொண்டும் எண்ணிக் கொண்டும் இருந்தான். தனது கடிகாரத்தை உபயோகித்து, மின்கம்பங்களில் எழுதப்பட்ட கி,மீ. தூரத்தைக் கொண்டும், வண்டியின் வேகத்தைக் கணக்கிட்டான். வண்டி 110 கி.மீ, வேகத்தில் போய்க்கொண்டிருந்தது. சென்னை டில்லி பாதை இரசனை அற்றது. மத்திய பிரதேசம் வழியாகப் போகும் போது, அடர்ந்த காடுகள் பார்க்கலாம். ஆனால் உயர்ந்த மரங்களோ, பெரிய நதிகளோ இருக்காது.

அழகு பார்க்கும் பொருளிலா இருக்கிறது? நம் கண்களிலும், மனதிலும் அல்லவா இருக்கிறது. குரு கண்ணில் பட்ட காட்சிகளை இரசித்துக் கொண்டிருந்தான். ஆங்காங்கே சில வீடுகள், குடிசைகள், தொழிற்சாலைகள் வந்து ஓடி மறைந்தன. மழை பெய்து வெகு காலமாய் இருக்கலாம். மரத்தில் உள்ள இலைகள் மண்ணினால் மூடப்பட்டு இருந்தன.

இரு சக்கர வாகனங்கள், நான்கு சக்கர வாகனங்கள், கனரக வாகனங்கள் செல்வதையும் வருவதையும் கவனித்துக் கொண்டிருந்தான். மதிய உணவிற்கு ஒருவர் வந்து யாருக்கு என்னென்ன தேவை என்று குறித்துக் கொண்டு சென்றார். வண்டியில் ஓரமாய் இருந்த இரண்டு இருக்கைகளில் எதிரும் புதிருமாய் இளம் ஜோடி ஒன்று அமர்ந்து இருந்தது. ஒரு வயதுக்கும் குறைவான குழந்தை அவர்களின் மடியில் இருந்தது. அக்குழந்தையின் பிஞ்சுக் கால்கள், கைகளின் அழகை குரு இரசித்துக் கொண்டிருந்தான். குரு இரசிப்பதைப் பார்த்த ஆயிஷா, அக்குழந்தையைத் தூக்கிக் கொண்டு வந்து, சிறிது நேரம் கொஞ்சிவிட்டுக் குருவின் கையில் கொடுத்தாள்.

ஆயிஷாவின் கையில் இருக்கும் போது இலேசாகச் சிணுங்கிய குழந்தை குருவிடம் வந்ததும் சிரிக்க ஆரம்பித்தது. குருவும் அதைப்பார்த்து சிரித்தான்.

குழந்தைகளுக்கு அமானுஷ்ய சக்தி உண்டு அம்மாவின் வயிற்றினுள் இருக்கும் போதே , அம்மாவின் மன நிலை அதுக்குப் புரியும். பிறந்த பின் தன்னைச் சுற்றி இருப்பவர்களின் எண்ணங்களைப் புரிந்து கொள்ளும் சக்திகளும் உண்டு. மேலும் இறந்தவர்கள் குழந்தைகளின் கண்களிலும் தெரிவார்கள். சில சமயம், குழந்தைகள் தனியே அமர்ந்து யாருடனோ பேசிக் கொண்டிருக்கும், விளையாடிக் கொண்டிருகக்கும், அப்பொழுது யாரேனும் இறந்தவர்கள் அக்குழந்தையுடன் இருக்கும் வாய்ப்பு உண்டு. ஒவ்வொரு மனிதனைச் சுற்றி ஒரு ஒளிவட்டம் உண்டு. அதன் நிறம் அம்மனிதனின் குண நலன்களைப் பொருத்திருக்கும். ஆன்மீகத்தில் உயர்ந்த நிலையில் உள்ளவர்களுக்கு ஒளிவட்டம் வெண்மையாய் இருக்கும். முன்னேற்றப் பாதையில் இருப்பவர்களின் ஒளிவட்டம் நீல நிறமாய் இருக்கும். கெட்ட குணம் உடையவர்களின் நிறம் கரும் சிவப்பாய் இருக்கும். இன்னிறங்களை வைத்து குழந்தைகள் மனிதனை அடையாளம் கண்டு கொள்ளும்.

குரு அக்குழந்தையை மடியில் போட்டு, அதன் உடன் பேசிக் கொண்டு கை கால்களைப் பிடித்து விட்டுக் கொண்டு இருந்தான். ஐந்தாறு நிமிடங்களில் அக்குழந்தை நிம்மதியாகத் தூங்க ஆரம்பித்து விட்டது. இதைக் கண்ட குழந்தையின் தாய், குருவின் மடியிலிருந்து அதைத் தூக்கிச் சென்றாள்.

அனைவரையும் அருகில் அழைத்து, மீண்டும் பேச ஆரம்பித்தான். “ஆஃகானிஸ்தானின் நிலைமை மிகவும் மோசமாக உள்ளது. ஆஃகானிஸ்தான் மக்களின் நன்மையில் யாருக்கும் உண்மையான அக்கறை இருப்பது போல் தெரியவில்லை. ஆஃகானிஸ்தானுடன் நேரடியாகவும், மறைமுகமாகவும் தொடர்புடையவர்கள், பாகிஸ்தான், ஈரான், சவுதி அரேபியா, முக்கியமாக அமெரிக்காவும் அதன் கூட்டாளிகளான நேட்டோ நாடுகளும் ஆகும்.

20-25 ஆண்டுகளுக்கு முன்னே, இரஷ்யாவின் பார்வை ஆஃகானிஸ்தானின் மீது திரும்பியது. ஆஃகானிஸ்தான் பல எண்ணை வளங்களுக்கு அருகில் உள்ளது. ஆஃகானிஸ்தான் தன் கையில் இருந்தால் எண்ணை வளங்களை கட்டி ஆளலாம் என்று இரஷ்யா கனவு கண்டது. இன்றைய உலகில் யார் எண்ணை வளத்தை கைக்குள் வைத்திருககிறார்களோ அவர்கள் உலகை கைக்குள் வைத்திருப்பதற்கு சமம்.

இரஷ்யாவின் முயற்சிகளை முறியடிப்பதில் அமெரிக்கா எப்பொழுதும் தயக்கம் காட்டியதில்லை. நேரடியாகத் தன் படைகளை அனுப்பாவிட்டாலும் மறைமுகமாக அங்கு பல தீவிரவாத அமைப்புகளைத் தூண்டிவிட்டு, இரஷ்யா படைகளுடன் மோதவிட்டனர். ஆயுதங்களும் பணமும் அவர்களுக்கு நேரடியாகவும் சவுதி அரேபியா மற்றும் பாகிஸ்தான் மூலம் வழங்கப்பட்டது. இந்த காலக்கட்டங்களில் உருவானவர்தான் பின் லாடன். அமெரிக்க உளவுத்துறையின் முழு ஒத்துழைப்புடன் பின் லாடன் இரஷ்யர்களை எதிர்த்து ஆயுதம் ஏந்தினார். அவர் சவுதி அரேபியாவில் உள்ள ஒரு பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவர். பொதுவாக வறுமையில் வாடி நன்கு படிக்க முடியாமல் சிரமப்படும் இளைஞர்கள்

தீவிரவாதத்தில் சேர்வதுண்டு. பின் லாடனும் அவரால் உருவாக்கப்பட்ட அல் கய்தாவும் அப்படியல்ல. பல படித்த வசதியான வேலையில் உள்ள பலரும் அதில் சேர்ந்துள்ளார்கள். பின் லாடன் குடும்பத்தைச் சார்ந்தவர்கள் அமெரிக்க எண்ணைக் கிணறுகளில் முதலீடு செய்துள்ளனர். ஜார்ஜ் புஷ் குடும்பத்தினரும், பின் லாடன் குடும்பத்தினரும் ஒரே நிறுவன நிர்வாகிகள் கூட்டத்தில் பங்கு பெருபவர்கள். எனவே பின் லாடனுக்கும் அமெரிக்க ஜனாதிபதி ஜார்ஜ் புஷ்ஷிற்கும் நேரடியாக நட்புறவு இருக்க வாய்ப்புகள் அதிகம். இந்தத் தகவல்கள் மைக்கேல் மூர் என்பவர் தயாரித்த பாரன்ஹீட் 9/11 என்ற திரைப்படத்தில் பல ஆதாரங்களுடன் சித்தரிக்கப்பட்டுள்ளது. அந்த திரைப்படத்தைக் காணும் யாரும் ஜார்ஜ் புஷ்ஷிற்கும் சேப்டம்பர் 9/11 நிகழ்விற்கும் நெருங்கிய தொடர்பு, பங்கு இருக்கிறது என்ற எண்ணம் வராமல் இருக்காது. அந்தப் படத்திலிருந்து வரும் ஒரு காட்சியை விவரிக்கிறேன்.

ஜனாதிபதி ஜார்ஜ் புஷ், ஒரு சிறிய பள்ளியில் 5-6 வயது நிரம்பிய குழந்தைகளுடன், ஒரு வகுப்பறையில் அமர்ந்திருப்பார். அப்பொழுது ஒரு அரசு அதிகாரி, ஒரு விமானம் இரட்டைக் கோபுரத்தைத் தாக்கியதை அவரது காதுகளில் சொல்லிவிட்டுச் செல்வார். புஷ்ஷின் முகத்தில் எந்தவித மாற்றங்களும் இன்றி, குழந்தைகளுடன் பேசிக்கொண்டிருப்பார். சிறிது நேரம் களித்து இரண்டாவது விமானம் தாக்கியைதையும் புஷ்ஷிற்கு அறிவிக்கப்படும். அப்பொழுதும் இருக்கையில் இருந்து கொண்டு தனது உரையாடலைத் குழந்தைகளுடன் தொடர்ந்து நடத்திக் கொண்டிருப்பார். இந்த காட்சியைப் பார்பவர்கள் அனைவருக்கும் புஷ்ஷிற்கு இந்த தீவிரவாதக் தாக்குதல் நடக்கப் போவது முன்பே தெரிந்து இருக்கலாம் என்ற எணணத்தை உருவாக்கும்.

அன்றைய காலக்கட்டங்களில், புஷ்ஷின் அரசியல்

சூழ்நிலை மிக மோசமாக இருந்தது. தனது பதவி பறிபோகும் நிலையில் இருந்தார். 9/11 நிகழ்வு போல் ஏதாவது ஒன்று நடக்காவிட்டால் புஷ்ஷின் எதிர்காலம் கேள்விக் குறியாய் இருந்தது. இந்தத் தகவலும் அந்தப் படத்திலிருந்து அறிந்ததே. அமெரிக்காவினால் வளர்க்கப்பட்ட அல் கெய்தா ஏன் அமெரிக்காவை எதிர்க்க ஆரம்பித்தது? என்ற கேள்வி எழலாம்.

ஒரு காலக்கட்டங்களில் உலகம் இரண்டாகப் பிரிந்து இருந்தது. அமெரிக்காவும் அதன் நண்பர்களும் ஒரு கட்சி, இரஷ்யாவும் அதன் கூட்டாளிகள் ஒரு கட்சி. இந்தியா போன்ற சில நாடுகள் நடு நிலைமை வகித்தன. அமெரிக்காவின் தீய எண்ணங்களையும் செயல்களையும் இரஷ்யா வெளிப்படுத்தியும் முறியடித்தும் வந்தது. அதே போல் அமெரிக்கா இரஷ்யாவிற்கு எதிராகச் செயல் பட்டது. ஆங்கிலத்தில் இந்த மறைமுக யுத்தம் பனிப்போர் என்று அழைக்கப்பட்டது. இந்தப் பனிப்போர் இரண்டாம் உலகயுத்தம் முடிவடைந்து 40 ஆண்டுகள் நடந்திருக்கும்.

இந்தப் பனிப்போரில் சில நன்மைகள் இருந்தன. விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளில் ஒருவரை ஒருவர் மிஞ்சும் எண்ணத்தில் போட்டி போட்டுக் கொண்டு இரு நாடுகளும் பண முதலீடு செய்வதும் புதியவைகளைக் கண்டுபிடிப்புகளில் ஈடுபட்டன. இதன் விளைவால் உலகெங்கும் தொழில் வளர்ச்சி ஏற்பட்டது. கணணித் துறை வெகு வேகமாக வளர்ந்தது இந்தக் காலக்கட்டங்களில்தான். மனிதன் நிலவில் கால்களை வைத்தது இந்தக் காலக்கட்டங்களில் தான்.

இரு நாடுகளும் இராணுவத் தளவாளடங்கள் உற்பத்தி செய்வதிலும் அணுகுண்டு தயாரிப்பதிலும் மிகுந்த பணத்தை விரையம் செய்தன. இந்த பண விரையத்தைத் தாங்க முடியாமல் இரஷ்யா தளர்ந்து, உடைந்து சிதறியது. அமெரிக்காவிற்கு எதிகளற்ற நிலை ஏற்பட்டது.

மத்தை அடிப்படையாக வைத்து போராட்டங்களும் கொலைகளும் யுத்தங்களும் குறைந்த பட்சம் 2000 ஆயிரம் ஆண்டுகள் நடந்து வரும் ஒன்று. இஸ்லாமிய மதத்தினரும் கிருத்துவ மதத்தினரும் இந்தச் சண்டையை காலம் காலமாக நடந்து வருகிறது. இதில் வேடிக்கை என்ன வென்றால் இரண்டு மதங்களும் அண்ணன் தம்பி உறவு உடையவர்கள். கிருத்தவ மதத்தினர் ஆப்ரஹாம் என்று அழைக்கப்படுபவரும். இஸ்லாமியத்தில் இப்ராஹிம் என்று அழைக்கப்படுபவரும் ஒருவரே. ஆப்ரஹாம்/ இப்ராஹிம்மிற்கு இரண்டு மனைவியர். முதலாவதாக ஒரு பெண்ணை மணக்கிறார். அவர்களுக்கு குழந்தைப் பேறு ஏதும் இல்லை. பின்பு தனது வேலைக்காரியை மணக்கிறார். அதன் பின் இரண்டு மனைவியர்களுக்கும் குழந்தைகள் பிறக்கின்றன. ஒரு குழந்தையும் அதன் வாரிசும் கிருத்தவரகள். மற்றெரு குழந்தையும் அதன் வாரிசும் முஸ்லீம்கள். இரண்டு மதங்களுக்கும் பொதுவான பெயர் உண்டு. ஆப்பிரஹாமிய மதங்கள். அதே சமயம், அன்று முதல் இன்று வரையில் சண்டையிடுவதை நிறுத்தவில்லை.

ஜே. கிருஷ்ணமூர்த்தி என்று ஒரு தத்துவ ஞானி சமீப காலத்தில் வாழ்ந்து மறைந்தவர். அவர் ஒரு கேள்வியை இந்த சமுதாயத்தின் முன்னே வைக்கிறார். “2000 ஆண்டுகளாக மதங்கள் இந்த உலகிற்கு செய்த நன்மைகள் அதிகமா? தீமைகள் அதிகமா?” ஆயிரம் பட்டிமன்றங்கள் வைத்தாலும் தீர்ப்பு சொல்ல முடியாத தலைப்பு இது. அந்த அளவிற்கு கொலைகளும் கொடூரங்களும் மதத்தின் பெயரால் இந்த உலகில் நிகழ்ந்துள்ளன. “டாவின்ஸி கோடு" என்று ஒரு கதைப் புத்தகம் உள்ளது. இதில் இயேசு கிறிஸ்து இறந்ததிலிருந்து கிருஸ்தவர்களுக்கும் பேகன் என்று அழைக்கப்பட்ட ஒரு இரகசிய மதத்தினருக்கும் நடக்கும் யுத்தம் விவரிக்கப்பட்டுள்ளது.

இந்த மத துவேஷம், வெறி, இன்றைய உலக மக்கள், மதம் மற்றும் அரசியல் தலைவர்களின் நாடி நரம்புகளிலும், இரத்தத்திலும் தசையிலும் ஊறி நாறிப் போய் உள்ளது என்பது ஒரு வருந்தத்தக்க உண்மை. இதன் அடிப்படையில் கிருஸ்துவ மதத்தைச் சேர்ந்த அமெரிக்கா, வளைகுடா நாடுகளில் இஸ்லாமியர்களுக்கு எதிராகப் பல சில்மிஷங்களைச் செய்ய ஆரம்பித்தது. இந்தப் பகுதியின் எண்ணை வளம் அமெரிக்காவின் கண்களை உறுத்தியது. எனவே தனது அதிகாரத்தை நிலைநாட்டவும் இஸ்லாமியத்தை வலுவிளக்கச் செய்வதிலும், அமெரிக்கா வளைகுடா நாடுகளின் உள் நாட்டு விவகாரங்களில் தலையிட ஆரம்பித்தது. பல நாடுகள், இந்தியா உள்பட, அமெரிக்கவின் வளைகுடா நடவடிக்கைகளைத் தட்டிக் கேட்கவில்லை. இது அங்குள்ள சில தீவிரவாத அமைப்புகளைத் தோற்றுவித்தது. அமெரிக்காவை எதிர்த்த ஒரே நிறுவனம் அல் கெய்தா போன்ற தீவிரவாத அமைப்பே. அமெரிக்காவை எதிர்க்க தீவிரவாதம் தவிர இன்றுவரை வேறு வழியில்லை. எனவேதான் அல் கெய்தா அமைப்புகள் பல படித்தவர்கள், பண வசதிபடைத்தவர்கள் உறுப்பினர்களாகச் சேர்க்க முடிந்தது.

ஆஃகானிஸ்தான் விவகாரங்களில் இன்று அதிகமாகத் தலையிடுவது பாகிஸ்தான். இரஷ்யாவின் திட்டத்தை முறியடிப்பதற்காக அமெரிக்காவும் பாகிஸ்தானும் சேர்ந்து தாலிபான் தீவிரவாத இயக்கத்திற்கு ஆயுதங்களும் பணமும் தர ஆரம்பித்தன. பாகிஸ்தானும் இந்த நிலைமையை உபயோகித்து அமெரிக்கவிடமிருந்து நிறைய ஆயுதங்களும் பணமும் பெற்றது. ஆனால் அவைகளில் பெரும் பங்கு இந்தியாவிற்கு எதிராகப் பாகிஸ்தான் பயன் படுத்தியது. இந்தியாவின் வளர்ச்சியின் பொறாமை காரணமாகவோ, அல்லது தன்னோடு கூட்டு சேராமல் தனித்து நின்றதைப் பழிவாங்கவோ, பாகிஸ்தானின் போக்கை அமெரிக்கா கண்டு கொள்ளவில்லை.

பின்பு ஒரு காலக்கட்டங்களில் 9/11 நிகழ்ச்சிற்குப் பின் அல் கெய்தா மற்றும் தாலிபான்களின் போக்கு அமெரிக்காவிற்குப் பிடிக்கவில்லை. எனவே ஆஃகான் அரசிற்கு உதவி செய்வதற்காக நேட்டோ படைகள் காபூல் வந்தன. தாலிபான்களுடன் போராடுவதற்கு அமெரிக்கவிற்கு பாகிஸ்தானின் உதவி தேவைப்பட்டது. அமெரிக்காவிடமிருந்து உதவி பெற்றதால், அமெரிக்காவிற்குப் பாகிஸ்தான் உதவி செய்யாமல் இருக்க முடியவில்லை. அதே சமயம் ஆஃகானிஸ்தானின் தனது அதிகாரத்தை நிலைநாட்ட தாலிபான்களுக்கு உதவி செய்வதையும் நிறுத்தவில்லை.

அமெரிக்கா என்னதான் நவீன யுத்த தளவாடங்களையும் யுக்திகளையும் உபயோகித்தாலும் தாலிபான்களை அவர்களது கொரில்லா போர் முறையினால் வெல்ல முடியவில்லை. தாலிபான் போராளிகள், அமெரிக்கப் படை போல் தனியாக உடை ஏதும் அணிவதில்லை. தாலிபான் தீவிரவாதிகளுக்கும்

பொது மக்களுக்கும் எந்தவித வேறுபாடும் கிடையாது. எந்த நேரத்தில், எந்த இடத்தில், எந்தவித ஆயுதங்களோடு தாக்குவார்கள் என்று யாருக்கும் தெரியாது. போர்முனையில் பணி புரியும் நேட்டோ இராணுவ வீரர்களுக்கு உணவும் மருந்துப் பொருட்களும் கொண்டு சேர்ப்பதே நேட்டோ படைக்குப் பெரிய வேலையாய் இருந்தது. இரவில் அவரகளால் ஒரு அங்குலம் கூட நகர முடியாது. பகலில் எவ்வளவு தூரம் போய் வர முடியுமோ, அவ்வளவு தூரமே செல்வர். ஏனெனின் இருளின் உதவியுடன் திடீர் தாக்குதல் நடத்துவது தாலிபான்களுக்கு மிகவும் எளிது. அமெரிக்காவிற்குப் புலி வால் பிடித்த கதையாய் ஆஃகானிஸ்தானின் மாறியுள்ளது. புலியை அடக்கவும் முடியாமல், அதை விட்டு ஓடவும் முடியாமல் அமெரிக்கா மிகவும் திணறுகிறது. 2014 க்குள் தனது படைகள் முழுவதையும் ஆஃகானிஸ்தானிலிருந்து விலக்கிக் கொள்வதாக அமெரிக்கா அறிவித்துள்ளது. அமெரிக்கவின் இன்றைய பொருளாதார நிலை ஆஃகானிஸ்தானின் ஒரு பெரும் படையை நிறுத்தி அதற்கான செலவுகளைச் செய்யும் நிலையில் இல்லை. நாட்டில் உள்ள குடி மக்களுக்கு, இலவசமாக, இநதியாவில் வழங்குவது போல், மருத்துவ வசதி வழங்கக்கூட அமெரிக்காவில் பணம் இல்லை. பல வங்கிகள் நஷ்டத்தில் ஓடி, மூடப்பட்டு வருகின்றன. ஆஃகானிஸ்தானின் அதிகப் பணம் செலவளிக்க, அரசியல் வட்டாரங்களில் எதிர்ப்பு பெருகிவருகிறது.

ஆஃகானிஸ்தானினுடன் நெருங்கிய தொடர்புடைய பாகிஸ்தானினைப் பற்றிப் பார்ப்போம். பாகிஸ்தானில் மூன்று அதிகார மையங்கள் உள்ளன. ஒன்று மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஊழலில் ஊறிப்போன அரசியல் வாதிகள் நடத்தும் அரசாங்கம். இரண்டு பாகிஸ்தான் இராணுவம். மூன்று பாகிஸ்தானின் உளவுத்துறை. இது போக மூவரின் அதிகாரங்களும் பாயாத இடங்களும் பாகிஸ்தானில் உள்ளன. ஆஃகானிஸ்தான் பாகிஸ்தானின் எல்லைப் பகுதிகளில் வாழும்

பழங்குடியினர் அந்தப் பகுதியினை ஆண்டு வருகின்றன. தாலிபான்கள் மற்றும் அல் கெய்தா இந்தப் பகுதிகளில் ஒழிந்து வாழ்வது உண்டு. பின் லாடன் இந்தப் பகுதியில் வசிக்கும் பொழுதுதான் சுட்டுக் கொல்லப்பட்டார்.

பாகிஸ்தானில் உள்ள மூன்று அதிகார மையங்களும் தன்னிச்சையாகச் செயல்படுபவை. யாரும் மற்ற இருவருக்கு அடங்குவது இல்லை. ஜார்ஜ் பெர்ணான்டஸ் இந்தியாவின் பாதுகாப்பு மந்திரியாக இருந்த போது கார்கில் யுத்தம் நடந்தது. அப்பொழுது ஜார்ஜ் பெர்ணான்டஸ், கார்கில் யுத்தத்திற்கும் பாகிஸ்தான் பிரதம மந்திரிக்கும் சம்பந்தம் இல்லை என்று வெளிப்படையாக அறிக்கை விட்டார். இந்தியா பாகிஸ்தான் எல்லைப் பகுதிகளில் நடக்கும் தீவிரவாத இயக்கங்களைப் பற்றியும், பயிற்சி முகாம்களைப் பற்றியும் பேசுகையில் ,"நான் ஊதினால் தீவிரவாதம் நிற்கும் அளவிற்கு என்னிடம் விசில் ஏதும் இல்லை." என்றார். ஏனெனின் இந்திய தீவிரவாதம் உளவுத்துறை மற்றும் இராணுவத்தினரால் நிர்வகிப்படுகிறது. பாகிஸ்தான் அரசிற்கு இதில் நேரடித் தொடர்பு இல்லை. அது இன்றைய பாகிஸ்தானின் நிலைப்பாடு.

வண்டி தில்லியை அடைந்தது. இரயில் நிலையத்திலிருந்து அனைவரும் வெளியே தங்கள் பைகளுடன் வந்ததும், அங்கு இரண்டு ஓட்டுனர்கள் குருவிற்காகக் காத்து நின்றனர். ஒரு வண்டியை குரு எடுத்துக் கொண்டான். மற்று ஓட்டுனரிடம் இவர்கள் தங்குவதற்கும் சாப்பாடு மற்றும், தில்லியைச் சுற்றிப் பார்க்கவும் வேண்டிய ஏற்பாடு செய்யச் சொன்னான். இரவு 10 மணியளவில் மீண்டும் இதே இடத்தில் சந்திப்போம், என்று கூறிவிட்டு யாருடைய பதிலுக்கும் காத்திராமல், குரு கிளம்பி விட்டான்.

நால்வருக்கும் கண்களைக் கட்டி காட்டில் விட்டது மாதிரி இருந்தது. இலங்கைக் காடுகளின் பாதுகாப்பு எங்கே? இந்த தில்லி காங்கிரீட் காடுகளின் பயமுறுத்தல் எங்கே? காடுகளின் நடுவில் வாழும் போது நாம் தாயின் மடியில் உள்ள பாதுகாப்பை உணர்ந்தோம். குருவின் ஆட்சியில் இருந்த காடுகள் நமக்கு நல்ல பாதுகாப்பைத் தந்தது. விலங்குகள், பறவைகள், வண்டு இனங்கள் நமக்கு மிகுந்த உதவியுடன் இருந்தன. ஆனால் மனிதர்களால் நிரம்பியஇந்நகரம் ஒரு நரகம் போல் காட்சி அளிக்கிறது. எங்கு பார்த்தாலும் ஒரே தூசி, புகை, இரைச்சல், பரபரப்பு. மக்களின் முகங்களில் ஒரு கவலை, ஏக்கம், எதிர்பார்பு, மற்றும் பயம்.

தில்லியை இரண்டாகப் பிரிக்கலாம். பழைய தில்லி, புது தில்லி. இந்திய சுதந்திரத்திற்குப் முன் உருவானது பழைய தில்லி. முகலாய காலத்தில் அவர்களது தலைநகரமாய் விளங்கியது. புது தில்லி சுதந்திரத்திற்குப் பின் கட்டப்பட்டது. தில்லி சரித்திரம் விசித்திரமானது. தந்தை மகனைக் கொல்வதும், மகன் தந்தையைக் கொல்வதும் தில்லி சரித்திரத்தில் மிகவும் சகஜமானவை. சுதந்திரத்திற்குப் பின்னும் நேரு குடும்பங்களில்

இன்றுவரை தொடர்வதாகக் கேள்வி. அரசியல் மற்றும் பதவி ஆதாயங்களுக்காக இத்தகைய கொலைகள் மிகவும் இவ்வுலகில் சாதாரணமாகி விட்டது. பொருளாதாரத்தில் அடித்தர மட்டத்தில் வாழும் மக்களின் உயிருக்கு இருக்கும் பாதுகாப்பு பதவியின் உச்சியில் இருப்பவர்களுக்கு இல்லை. உயர் பதவியில் உள்ளவர்கள் அதைத் தக்க வைத்துக் கொள்வதற்காக சில பல தவறுகளைச் செய்கிறார்கள், இந்தத் தவறுகளால் பாதிக்கப்பட்டவர்கள், நேரம் கிடைக்கும் பொழுது பழி வாங்கும் படலத்தில் இறங்கி விடுகிறார்கள். பல நாடுகளில் இயங்கும் உளவுத்துறையின் முக்கிய வேலை, இது போன்ற அரசியல் கொலைகளாகும். இத்தகைய கொலைகளைத் திட்டமிட்டு நடத்துவதில் அமெரிக்க உளவுத்துறை முதல் இடம் வகிக்கிறது.

அமெரிக்கா ஜனநாயக நாடாக இருந்தாலும் , பல சிறிய நாடுகளில் ஜனநாயகம் வளர்வதை விரும்புவதில்லை. தனது கைப்பாவையாகச் செயல்படும் சர்வாதிகாரிகளையும் இராணுவத் தலைவர்களையும் அமெரிக்கா விரும்புவதுண்டு. இதனை அமல் படுத்த பல சிறிய நாடுகளில் பல கொலைகளை நடத்தியுள்ளது. தென் அமெரிக்க நாடுகளில், சுதந்திரத்திற்குப் பாடுபட்ட போராளி சே குருவெராவைக் கொன்றது அமெரிக்க உளவுத்துறையும் இராணுவமும். இந்தியாவில் ஜனநாயகம் அசைக்க முடியாத அளவிற்கு வேரூன்றி இருப்பதால், அமெரிக்காவினால் இங்கு ஒன்றும் செய்ய முடியவில்லை. கடந்த 10-15 ஆண்டுகளாக இந்தியாவில் சி.ஐ.ஏ வின் வேலைகள் குறைந்து காணப்படுகிறது. இது இந்திய உளவுத்துறையின் வெற்றியாகக் கூட இருக்கலாம்.

ஓட்டுனர் நால்வரையும் பார்த்து "வண்டியில் ஏறுங்கள், கரோல் பாக் செல்ல வேண்டும்" என்றார். குருவைப் பிரிந்து சில நிமிடங்கள் தான் ஆனாலும் நால்வரும் எதையோ இழந்ததைப் போல உணர்ந்தனர். ஓட்டுனரின்

குரலைக் கேட்டு அனைவரும் வண்டியில் ஏறினர். வண்டி அவர்களை கரோல் பாக்கில் ஒரு விடுதியில் இறக்கிவிட்டது.

இரண்டு அறைகள் அவர்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்தது. ஆண்கள் இருவரும் ஒரு அறையிலும் பெண்கள் இருவரும் மற்றொரு அறையிலும் தங்கினர். ஓட்டுனர், “அரை மணி நேரத்தில் தயாராகுங்கள். சாப்பிட்டுவிட்டு வெளியே செல்லலாம்" என்றார். அப்பொழுது முகமது "உங்கள் பெயர் என்ன?” என்று கேட்டதற்கு அவர் , “சிவா" என்றார். உண்மையான பெயரா இல்லை குரு வைத்த பெயரா என்று தெரியாமல் விழித்தனர்.

அரை மணி நேரம் கழித்து அனைவரும் ஒன்று சேர சிவா அவர்களை ஒரு பஞ்சாபி உணவு விடுதிக்கு அழைத்துச் சென்றார். யாரிடமும் எதுவும் கேட்காமல், சில உணவு வகைகள் வரவழைக்கப்பட்டன. முதலில் பார்ப்பதற்கு வித்யாசமாய் இருந்தாலும் அவைகளைச் சாப்பிட ஆரம்பித்தவுடன் சுவையை ரசிக்க ஆரம்பித்தனர். அதன் பின் தில்லியில் பல இடங்களைச் சுற்றிப் பார்த்தனர்.

குரு தனது வண்டியை எடுத்துக் கொண்டு நேராக ஆஃகானிஸ்தான் தூதரகம் சென்றான். ஏற்கனவே தனது இணையதள நண்பர்கள் மூலம் தூதரக அதிகாரிகளை நேரில் பார்த்துப் பேசுவதற்கு நேரம் வாங்கியிருந்தான். தூதரக அதிகாரி குருவிற்காகக் காத்திருந்தார். குரு தான் வந்த நோக்கத்தையும் குறிக்கோளையும் மிகச் சுறுக்கமாகச் சொன்னான்.

“உங்கள் நாட்டில் அமைதி நிலவப் பாடுபடப் போகிறேன். அதற்கு உங்களாலான உதவி தேவை” என்றான் குரு. குரு மிக அமைதியாக, உறுதியாக, ஆழமாக, ஆணித்தரமாகச் சொன்னான். குருவின் தோற்றம், கண்களில் கண்ட ஒளி, குரலில் இருந்த தீவிரம், அதிகாரியை ஒரு நிமிடம் அதிரச் செய்தது. தனது தொலைபேசியில், ஆஃகான் தூதுவரைத் தொடர்பு கொண்டு, “உடனே உங்கள் அறைக்கு வருகிறேன்" என்று பதிலுக்குக் கூட காத்திராமல் குருவை அழைத்துக் கொண்டு தூதுவர் அறைக்கு விரைந்து சென்றார்.

அறைக்குச் செல்லும் வரை ஏதும் இருவரும் பேசவில்லை. அறைக்கு வெளியே தூதுவரின் உதவியாளர், ஒரு நிமிடம் காக்கச் சொன்னாள். இவர்களது வருகையை அருவிக்க 10-15 வினாடிகளில், இருவரும் அனுமதிக்கப்பட்டனர். குருவின் இளம் வயதைப் பார்த்து ஆச்சரியப்பட்ட தூதுவர், தனது அதிகாரியைப் பார்த்தார். அதிகாரியின் முகபாவத்தை ஓரளவு படித்த தூதுவர், “சரி, நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று கூறிவிட்டு குருவை அமரச் சொன்னார்.

ஆஃகானிஸ்தான் தூதுவர் 55-60 வயது நிறம்பியவர். ஆஃகானிஸ்தானின் வீழ்ச்சி, எழுச்சி, வளர்ச்சி, கஷ்ட

நஷ்டத்தில் அவருக்கும் ஒரு பங்கு உண்டு. ஆஃகானிஸ்தானின் மீது உண்மையான அக்கறையுள்ளவர். ஓங்கு தாங்கான உருவம். 90 கிலோவிற்குக் குறையாமல் இருப்பார். குரு 55 கிலோவிற்கு மேல் இருக்க மாட்டான். குரு "எனது பெயர் குரு" என்று கையை நீட்டினான். தூதுவரும் கையை நீட்டிக் குலுக்க, குருவின் கை அவரது கையில் காணாமல் போயிற்று. பின்பு இருவரும் அவர்களது இருக்கைகளில் அமர்ந்தனர்.

தூதுவர் சிறிது சந்தேகத்துடன் " இலங்கைக் காடுகள்? " என்று சிறிது தயக்கத்துடன் வினவ, குரு புன்முறுவல் பூத்தான். தூதுவர் தனது இருக்கையை விட்டு ஓடிவந்து குருவைக் கட்டிப்பிடித்து தூக்கிச் சுற்றினார். “எங்கள் நாடு உன்னைப் போல் ஒருவருக்காகக் காத்து இருக்கிறது”. என்று சொன்னார். அவரது குரலில் ஆஃகான் மக்களின் வேதனைகளும், புதிய உலகிற்கான நம்பிக்கையும் கலந்து இருந்தது.

தூதுவர், இலங்கைக் காடுகளில் நடந்தவை, கொழும்பில் நடந்தவைகளைப் பற்றிக் கேட்டறிந்தார். குருவும் அவைகளை விவரிக்காமல் சுருக்கமாகக் கூறிமுடித்தான். பின்பு தூதுவர் "குரு நான் என்ன செய்ய வேண்டும்?” என்று வினவ, “எனது குழு ஆஃகானிஸ்தானில் விரும்பிய காலம் வரை தங்க விசா, காபூலிலும் மற்ற முக்கிய நகரங்களிலும் தாலிபான்கள் அதிக நடமாட்டம் உள்ள பகுதிகளில் வீடுகள், வண்டிகள், உணவுப் பொருட்களும் தேவை" என்று குரு கூறினான். “ஆயுதங்கள் தேவைப்படுமா?” என்று வினவ, குரு “தேவைப்படாது. ஆனால் நாங்கள் தங்கும் இடங்களில் முடிந்தால் பாதுகாப்பு வசதிகளை ஏற்படுத்திக் கொடுங்கள். தேவையில்லாத பிரச்சனைகளை நாங்கள் சந்திக்க விரும்பவில்லை”. தூதுவர் குருவின் வேண்டுகோளைக் கட்டளை என்று எடுத்துக் கொண்டு, குறிப்பு எடுத்துக் கொண்டார். “வேறு

எதுவும் வேண்டுமா" என்று வினவ, குரு, “ஆம், உங்களுக்குத் தெரிந்த தாலிபான்களை எனக்கு அறிமுகப் படுத்தி வையுங்கள். ஆனால், என்னைப் பற்றி ஏதும் அவரகளிடம் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை”. "சரி, பார்க்கிறேன்" என்றார் தூதுவர். “தாலிபான்களை எதிர்த்துப் போராடும் பெண்கள், அவர்களது நிறுவனங்கள் அறிமுகம் தேவை”. “ இவையெல்லாம் ஒரு வாரத்தில் தயாராகி விடும். உங்கள் உதவிக்கு காபூலில் யாரும் தேவையா?" என்று வினவ குரு அதற்கு "தேவைப்படாது" என்று பதில் அளித்தான். தூதுவர் "இன்று வேறு வேலை ஏதும் இருக்கிறதா?” என்று வினவ, குரு "இரவு 10 மணியளவில் இரயில் நிலையத்திலிருந்து எனது நண்பர்களுடன் ஹரித்வார் நோக்கிப் பயணம் செய்கிறேன்". தூதுவர் "அப்படியென்றால் எனது விருந்தினர் மாளிகையில் சிறிது ஓய்வு எடுங்கள். 6-15 க்குள் நான் வந்துவிடுகிறேன். நான் 10 மணியளவில் உங்களை இரயில் நிலையத்தில் இறக்கி விடுகிறேன்" என்று கூறினார்.குரு "சரி" என்று கூறிவிட்டு அறையை விட்டு வெளியே வந்தான். கைபேசி மூலம் தனது வண்டியை அனுப்பிவிட்டு உதவியாளருடன் விருந்தினர் மாளிகைக்குச் சென்றான்.

தூதுவர் கூறியபடி 6-15 மணியளவில் குருவின் அறைக்கு வந்தார். இது வழக்கத்திற்கு மாறானது. பொதுவாக தூதுவரைப் பார்க்கத்தான் யாரும் செல்ல வேண்டும். தூதரகத்தின் உள் தூதுவர் யாரையும் பார்க்கச் செல்வதில்லை. ஆனால் குருவிடம் ஏதோ ஒரு ஈர்ப்பு இருப்பதை அவர் உணர்ந்தார்.

தூதுவருக்கு தனது மகன் அப்துல் காசாயின் ஞாபகம் வந்தது. ஐந்து ஆண்டுகளுக்கு முன் வீட்டை விட்டுச் சென்றவன் இன்றுவரை வீடு திரும்பவில்லை. தாலிபான்களால் கடத்தப்பட்டிருநத்தால், தனக்கு தகவல் வந்திருக்கும். ஏதேனும் விபத்தில் இறந்திருந்தால் காவல் துறை மூலம் தகவல் வந்திருக்கும். ஆனால் எந்தவித தகவலும் அவருக்குக் கிடைக்க வில்லை. ஆஃகானிஸ்தானில் இவ்வாறு காணாமல் போவது சர்வ சாதாரணமாகி விட்டது. தனக்குத் தேவையான இளைஞர்களைத் தாலிபான்கள் கடத்திச் சென்று, பயிற்சி அளித்து தீவிரவாதிகளாக மாற்றி விடுகிறார்கள். இப்பொழுது அவன் இருந்திருந்தால் குருவைப் போல இருந்திருப்பான். எனவேதான் தூதுவருக்கு குருவைப் பார்த்தவுடன் ஒரு பாசம் வந்தது. இந்தக் கதையைக் கூறியபடி தூதுவர், குருவைத் தனது வீட்டிற்கு அழைத்துச் சென்றார். அங்கு அவரது மனைவி மகனை இழந்த சோகத்தில் ஒரு நடை பிணம் போல் காணப்பட்டாள். தூதுவர் குருவை ஒரு இருக்கையில் அமரச் செய்து விட்டு, தேநீர் வரவழைத்தார். குரு இரு நிமிடங்கள் கண்களை மூடி அமைதியாக இருந்தான். பின்பு விழித்து தூதுவரின் மனைவியின் இரு கைகளுயும் தன் இரு கைகளால் பிடித்துக் கொண்டு "உங்கள் மகன் மீண்டும் வருவான். அவனை உங்களிடம் சேர்ப்பது என் பொறுப்பு.” என்று உறுதியாகச் சொன்னான். அத்தாய் குருவைக் கட்டிப்பிடித்துக்

கொண்டு விம்மி விம்மி அழத் தொடங்கினார்கள். தூதுவர் இதைப் பார்த்துக் கொண்டு செய்வதறியாமல், பெருமூச்சு விட்டார். தனது மனதின் சோகத்தினை, இம்மூச்சு மூலம் வெளியேற்றிய உணர்வு ஏற்பட்டது. ஏனெனின் அவருக்குக் குருவின் திறமையில் முழு நம்பிக்கை இருந்தது.

குருவிற்கு அவரிடம் பல விஷயங்களை அறிய வேண்டியிருந்தது. இணையதளத்திலும் செய்தித் தாளிலும் தொலைக்காட்சியிலும் தெரிந்து கொள்வது என்பது ஒன்று, நேரடியாக ஒருவர் மூலம் அறிவது மற்றொன்று. இரண்டிற்கும் ஏராளமான வித்யாசம் உண்டு. முன்னையதில் பாதி உண்மைதான் இருக்கலாம். விலைபோகாத தகவல்கள் வெளியே வருவதில்லை. சுவாரசியமற்ற தகவல்கள் வெளியே வருவதில்லை.

குரு தூதுவரிடம் பெண்கள் அமைப்புகள் பற்றியும், அவரகள் போராட்டங்கள் பற்றியும் கூறச் சொன்னான். தூதுவர் பின் வருமாறு கூறினார். “பெண்கள் பல வழிகளில் தாலிபான்களால் அடக்கி ஆளப்பட்டாலும், எதிர்ப்புகளும் போராட்டங்களும் ஆங்காங்கே நடந்து வருகின்றன. இவைகளைப் பற்றிய முழு விபரம் எனக்குத் தெரியாது. காபூலைத் தாண்டி செய்திகள் சேகரிப்பதற்காக யாரும் நாட்டின் உள் பகுதிக்குச் செல்வதில்லை. தாலிபான்களின் அதிகாரம் அங்கு அதிகம். எனவே தகவல்கள் அதிகம் வெளி வராது. தாலிபான்கள் பெண்களை அடக்கும் முகமாக பல சட்டங்களை விதித்துள்ளது. அவைதளில் சிலவற்றை இணையதளத்தில் பார்க்கலாம். ஆனால் யார் இந்தப் பெண்கள்? தாலிபான்களின் அம்மா, அக்கா, தங்கை, மனைவிமார்கள் தானே? எனவே அவரகளது அடக்குமுறை ஓரளவிற்குத்தான் செல்லுபடியாகும். பொதுவாக வெளி உலகத்திற்கு முரடனாகக் காட்டிக் கொள்பவன், உள்ளுக்குள்ளே ஒரு கோழையாகத்தான் இருப்பான். இதில் தாலிபான்களும் விதிவிலக்கல்ல.

கிராமப் புறங்களில் வெளிப்படையாக அடங்குவது போல் பெண்கள் நடந்தது கொண்டாலும் தாலிபான்களுக்கு முழுதும் கட்டுப்பட்டு வாழ்வது இல்லை. குரு இதை ஓரளவிற்கு எதிர்பாரத்து இருந்தான். இது மாதிரியான தகவல்கள்தான் குரு தூதுவரிடம் எதிர்பார்த்து இருந்தான்.

தூதுவர் மேலும் தொடர்ந்தார், “பல இடங்களில் தையல் பள்ளிகள் என்ற பெயரில் பெண்களுக்கு கல்வி புகட்டப் படுகிறது. அதோடு மட்டும் இல்லாமல் சிறிது கைத்தொழிலும் கற்றுத் தரப்படுகிறது. இன்னும் சில இடங்களில் தாலிபான்கள் தகவல் தொடர்பிற்காக இணையதள வசதிகளை எற்படுத்தியுள்ளனர். இவைகளைப் பெணகள் உபயோகப்படுத்தி, தங்கள் கல்வியின் தரத்தை மேம்படுத்திக் கொள்கிறார்கள். இணையதளம் மூலம் குழுக்கள் தங்களுக்குள் தகவல்களைப் பறிமாறிக் கொள்வதாகக் கேள்விப் பட்டேன். ஃபேஸ் புக், ட்விட்டர் போன்ற இணையதள வசதிகள் சில குழுக்களிடம் இருக்கலாம்".

குரு, “பெதுவாக எல்லா தீவிரவாதக் குழுக்கு ஒரு போதகர், மதத்தலைவர், ஆலோசகர் என்று யாரேனும் ஒருவரோ, அல்லது ஒரு குழுவோ இருப்பது வழக்கம். அது போல் தாலிபான்களுக்கு யாரேனும் உண்டா?” தூதுவர் "நல்ல கேள்வி. இதற்குப் பதில் இல்லை என்பதுதான் ஆச்சரியமானது. சில வதந்திகள் உள்ளன. அவர்கள் மாதத்தில் முதல் வெள்ளிக் கிழமை காலை 5 மணியளவில் தொழுகையை முடித்து விட்டு, ஒரு குகையில் தாலிபானின் முக்கிய தலைவர்களும் வேறு சில ஆலோசகர்களும் சந்தித்துப் பேசுவதாகக் கேள்விப் பட்டேன். அவர்கள் சந்தக்கும் குகை எங்குள்ளது? யார் யார் அங்கு வருகறார்கள் என்பது இதுவரை யாராலும் கண்டு பிடிக்கப்படவில்லை. ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு இடத்தில் சந்தக்கலாம். இந்தச் சந்திப்புகளில் என்ன பேசப்படுகிறது என்று இதுவரை எந்தத் தகவலும்

இல்லை. இது வதந்தியா, இல்லை இதில் உண்மையிருக்க வாய்ப்பிருக்கிறதா என்று கூடத் தெரியவில்லை. மேலும் இது மிகவும் பழைய தகவல். இன்றுவரை இது நடைமுறையில் உள்ளதா என்று தெரியவில்லை” என்றார் தூதுவர்.

அப்பொழுது அவரின் மனைவி குருவிடம் வந்து "சாப்பிட என்ன வேண்டும்? உங்கள் நாட்டு உணவு ஏதாவது தேவையா?” என்று வினவ, “எனக்கு உங்கள் நாட்டு உணவு தான் தேவை . அங்கு பல மாதங்கள் வாழ வேண்டியது இருக்கும். அதற்கு முதல் படியாக இனறைய உணவு அமையட்டும். ஆனால் நான் மாமிசம் உண்பதில்லை" என்று குரு கூறியவுடன் அத்தாயாரின் முகம் சிறிது வாடியது. “பரவாயில்லை, அதன்படியே தயார் செய்கிறேன், எங்கள் உணவைச் சாப்பிட்டுவிட்டுச் செல்” என்றாள் அந்த அம்மையார். குருவின் வார்த்தைகளும் உறுதிமொழிகளும் அந்தக் குடும்பத்தினருக்கு ஒரு புதிய உற்சாகத்தைக் கொடுத்தது. அது அவர்களது நடையிலேயே தென்பட்டது. காணாமல் போன அந்தப் பையனின் படத்தை குரு உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். பின்பு தூதுவரிடம் ஒரு பிரதியைக் கேட்டு வாங்கிக் கொண்டான். இரவு உணவு முடியும் பொழுது 9 மணியாகி விட்டது. தூதுவர் கிளம்பலாம் என்றார். குரு கைபேசி மூலம் சிவாவைத் தொடர்பு கொண்டு, அவர்கள் இருக்கும் இடத்தைத் தெரிந்து கொண்டான். இரயில் நிலையத்தை அடைந்த பின்னரும் தூதுவர் குருவுடன் வெளியே காத்து நின்றார். குருவின் நண்பர்களைக் காண ஆசைப்பட்டார். சிறிது நேரத்தில் அவர்களும் வர குரு அவர்களை தூதுவரிடம் அறிமுகப் படுத்தி வைத்தான். பின்பு அனைவரும் இரயில் நிலையத்திற்குள் செல்ல, தூதுவரும் தன் வண்டியில் சென்று விட்டார்.

ஆயிஷா குருவிடம், “ஏற்கனவே அவரைத் தெரியுமா?” என்று வினவ, “இன்று தான் பழக்கம்.

ஆஃகான் பிரச்சனையில் நேரடியாகப் பாதிக்கப்பட்டவர்களில், இவரும் ஒருவர். இவரது பையன் காணாமல் போய் 5 வருடங்கள் ஆகின்றன. அவரது பையனைத் தேடித் தருவதாக வாக்கு அளித்துள்ளேன். மேலும் இவருக்கு நமது இலங்கைப் போராட்டத்தைப் பற்றித் தெரிந்து இருக்கிறது. எனவேதான் என்னை வழியனுப்ப இவ்வளவு தூரம் வந்துள்ளார். இரவு உணவு அவரது வீட்டில் தான் சாப்பிட்டேன். அவரது மனைவியையும் பார்ததேன். மகனைப் பிரிந்து மிகவும் வாடியுள்ளார்."

அனைவரும் அவர்களது இருக்கைகளில் அமர்ந்தனர். வண்டி ஹரித்வார் கிளம்ப, இன்னும் 15 நிமிடங்கள் இருந்தன.

"ஆஃகானிஸ்தான் போக வேணடிய நாம் ஹரித்வார் போகத் தேவையென்ன?” என்ற கேள்வி நால்வர் மனத்திலும் இருந்தது. அதைப் புரிந்து கொண்ட குரு "உங்களுக்குப் பயிற்சி தேவைப்படுகிறது. பஷ்டோ, தாரி மொழியைச் சரளமாகப் பேச உங்களுக்கும் எனக்கும் பயிற்சி தேவைப் படுகிறது. நமக்குத் தேவையான ஆசிரியர் இரிஷிகேஷில் இருக்கிறார். தயானந்தர் ஆஸ்ரமத்தில் நாம் தங்க ஏற்பாடுகள் செய்யப் பட்டுள்ளன. எனவேதான் இந்தப் பயணம். குறைந்த பட்சம் 2 மாதங்கள் இங்கு தங்க வேண்டியது இருக்கலாம். அதற்குள் கோடை காலமும் முடிந்து விடும். அதன் பின் ஆஃகானிஸ்தானில் சுற்றித் திரிய பருவம் ஏற்றதாய் இருககும். நான் மட்டும் தனியே ஆஃகானிஸ்தான் முதலில் செல்லப் போகிறேன். அங்குள்ள நிலைமையை ஆராய்ந்து, அதற்குள் ஏற்றவாரு திட்டமிட்டு, பின் உங்களை அழைத்துச் செல்கிறேன். அதுவரை இரிஷிகேஷில் நீங்கள் தங்கியிருக்கலாம். “நாங்களும் கூட வருகிறேம்" என்று நால்வரும் சொல்ல, “இப்பொழுது கூட வந்தால் எனக்குப் பாரமாக இருப்பீர்கள். எனக்கு பக்க பலமாக நீங்கள் மாறியபின் நானே உங்களை அழைத்துக் கொள்கிறேன்” என்றான் குரு. குருவின் முடிவை யாரும் மாற்ற முடியாது என்று அறிந்த நால்வரும் அமைதியாக இருந்தனர்.

அதிகாலையில் வண்டி, ஹரித்வார் அடைய அங்கிருந்து ஒரு வண்டி எடுத்துக் கொண்டு இரிஷிகேஷ் வந்தடைந்தனர். இரிஷிகேஷும் ஹரித்வாரரும் 20 கி.மீ. தூரத்தில் உள்ளவை. அரை மணி நேரப்பயணத்தில் தயானந்தர் சரஸ்வதி ஆஸ்ரமத்திற்கு வந்து சேர்ந்தனர். அலுப்பு தீரக் குளித்து, வெளியே வரும் பொழுது, குரு கங்கையைப் பார்த்த வண்ணம் அமர்ந்திருப்பதைக் கண்டனர்.

கங்கையில் என்னதான் ஈர்ப்பு என்று தெரியவில்லை. அதன் கரையில் அமர்ந்தவர்கள், அதன் அழகிலும், கம்பீரத்திலும் மயங்காமல் இருக்க முடியாது. கோடைகாலமானதால் ஆற்றின் அகலம் சுருங்கியிருந்தது. ஆனாலும் வேகம் அதிகமாய் இருந்தது. சிவப்பு வண்ணப் பாதுகாப்பு உடைகள், தலைக்கவசம் அணிந்து ஒரு நீள்வட்ட வடிவப் பரிசலில் துடுப்புகயை உபயோகித்து, வந்து கொண்டிருந்தனர். சுற்றுலாப் பயணிகள், பொழுது போக்கிற்காகச் செல்லும் பயணம் இது. அந்தப் படகு பாறைகளில் மோதியும் விலகியும் ஆடி ஆடிப் போய்க் கொண்டருந்தது. அது மறைந்ததும், தூரத்தில் மற்றொன்று தெரிநதது. இந்தப் படகில் அனைவரும் மஞ்சள் நிற உடையணிந்திருந்ததனர்.

மாலை மயங்கிக் கொண்டருந்தது. கங்கையில் சிலர் விளக்குகளை மிதக்க விட்டுக் கொண்டருந்தனர். தமிழகத்தில் காணப்படும் கோயில்கள் போல், கம்பீரமாக, உயரந்த கலை நுணுக்கங்கள் நிறைந்த, கோபுரங்கள், கோயில்கள் வட இந்தியாவில் கிடையாது. பல கோயில்கள் மொகலாயர் ஆட்சியின் போது அழிக்கப் பட்டுள்ளன. தெய்வச் சிலைகள் பளிங்குக் கற்களால் வடிக்கப்பட்டு, தத்ரூபமாய்க் காட்சியளிக்கும். கங்கைதான் வட இந்தியரகளுக்கு தெய்வமாய் இருந்து காத்து வருகிறது. கங்கையைப் பற்றி ஒரு காவியமே எழுதலாம். அவ்வளவு சிறப்புகளை உள்ளடைக்கி அமைதியாக ஓடிக் கொண்டருக்கிறது.

தயானந்தர் ஆஸ்ரமத்தில் ஒரு சிறிய கோயில் உள்ளது. தினமும் காலையிலும் மாலையிலும் பூஜைகளும் பஜனைகளும் நடைபெறும். அதற்கான நேரம் வந்ததை உணர்த்த, கோயில் மணி ஒலிக்கத் தொடங்கியது. மக்கள் ஏறத்தாள 200 பேர் சேர்ந்தவுடன் பஜனைகள் பாட ஆரம்பித்தனர். குரு மற்றும் அவனது நண்பர்கள்

பஜனையில் கலந்து கொண்டனர். குரு மென்மையாகப் பாட ஆரம்பித்தான். ஆன்மீக சக்தி அவ்விடத்தில் பிரவாகமாக ஓட ஆரம்பித்தது. நணபர்கள் உடலில் அது புகுந்து அது புதிய அனுபவத்தை ஏற்படுத்தியது. ஒரு மணி நேரம் தங்களை மறந்த நிலையில் இருந்தனர். பூஜைகள் முடிந்து பிரசாதம் வழங்கப்பட்டது. அனைவரும் அதைப் பெற்றுக் கொண்டனர். அப்பொழுது ஒருவர் குருவின் தோளை மெதுவாகத் தட்டினார். குரு திரும்பிப்பாரத்துப் புன்னகைத்தான்.

குரு தன் நண்பர்களைப் பார்தது "இவர் சந்தோஷ்" என்று அறிமுகப் படுத்தினான். ஆனால் அனைத்து நண்பரகளும் இது அவர் பெயர் அல்ல என்பதைப் புரிந்து கொண்டனர். சந்தோஷ் நல்ல உயரம். ஆஃகானிஸ்தானைச் சேர்ந்தவர். நீண்ட அங்கி, தலைப்பாகை முதலியன அணிந்திருந்தார். வயது 40ஐ அடுத்திருக்கும். தீரக்கமான கண்கள். எப்பொழுதும் ஒரு சிறிய புன்னகை, அவரது தாடி மீசைகளைத் தாண்டிப் பிரகாசித்தது. பெருநத்தலைவர் காமராஜர் போல் நீண்ட கைகள். பட்டான் என்று அழைக்கப்படும் இனத்தைச் சேரந்தவர். ஆறு பேரும் மீண்டும் கங்கைக் கரைக்கு வந்தனர். "உங்கள் நால்வருக்கும் இவர் ஆஃகானிஸ்தானைப் பற்றிச் சொல்லிக் கொடுப்பார். அம்மொழி பேசக் கற்றுக் கொடுப்பார். அங்குள்ள கலாச்சாரம், வாழ்க்கை முறை, பேசும் முறை, நடந்து கொள்ளும் விதம் முதலியன உங்களுக்கு இவர் கற்றுக் கொடுப்பார். இரண்டு அல்லது மூன்று மாதங்கள் உங்களுக்கு பயிற்சி நடைபெறும். நான் உங்களுடன் ஒருவாரம் பயிற்சியில் கலந்து கொள்வேன். பின்பு நான் தனியே கண்டஹார் பயணம் மேற்கொள்ள இருக்கிறேன். பயிற்சி முடிந்தவுடன் நீங்களும் என்னுடன் சேரலாம். ஒரு வாரத்தில் குருவைப் பிரியப் போகிறோம் என்றறிந்தததும் நால்வருக்கும் சிறிது வருத்தம் ஏற்பட்டது. பயிற்சி நாளை காலை 5 மணிக்கு ஆரம்பிக்கும். உங்கள் அறையில் தயாராய் இருங்கள்" என்று குரு கூறினான்.

அதன்பின் குருவும் சந்தோஷும் தனியே எங்கோ புறப்பட்டுச் சென்றனர். நண்பரகள் நால்வரும் இரவு உணவு முடித்துவிட்டு படுக்கச் சென்றனர்.

குருவும் சந்தோஷும் கங்கைக் கரையோரமாய் நடந்து சென்றனர். பௌர்ணமிக்கு இன்னும் ஓரிரு தினங்களே இருக்க வேண்டும். நிலவொளி கங்கையில் பட்டு வெள்ளியென மின்னிக் கொண்டிருந்தாள். அந்தி சாயும் நேரத்தில் விட்ட ஒன்றிரண்டு விளக்குகள் கங்கையில் மிதந்து வந்து கொண்டிருந்தன. அக்கரையில் உள்ள கடைகளின் வெளிச்சம் தண்ணீரில் பட்டு பிரதி பலித்தன. நடக்க நடக்க கடைகளும் குறைந்து நிலவொளி மட்டும் கங்கையில் மின்னிக் கொண்டிருந்தன. காதல் வயப்பட்ட இளம் பெண் போல் அழகுடன் கங்கை காட்சியளித்தாள். குருவிற்கு சந்தோஷை அறிமுகப் படுத்தியது ஆஃகான் தூதரகம். குரு அவரிடம் நீண்ட நேரம் பேசி, ஆஃகானிஸ்தானின் உண்மை நிலவரத்தைத் தெரிந்து கொண்டான். ஆஃகானிஸ்தானின் சரித்திரம், கலாச்சாரம், மக்கள் வாழ்க்கை முறை, பொருளாதாரம், முதலியவற்றை நுணுக்கமாகத் தெரிந்து கொண்டான். பின்பு ஆஸ்ரமத்திற்கு இருவரும் திரும்பினர். அவரவர் அறைகளுக்குச் செல்லும் முன் சந்தோஷ் குருவிடம், “எதற்காக ஆஃகானிஸ்தானிற்காகப் பாடுபடுகிறாய்?” என்று வினவ குரு, “இது எனது கடமை. இதற்காகவே பிறந்துள்ளேன்", என்று கூறிவிட்டு குரு தனது அறைக்குச் சென்றுவிட்டான். சந்தோஷ் குரு போவதையே சில நிமிடங்கள் பார்ததுக் கொண்டிருந்தார்.

மறுநாள் காலை 5 மணி. குரு சந்தோஷ், அகமது, முகமது, ஆயிஷா, மும்தாஜ் அனைவரும் மலைப்பாதைகளில் ஏற ஆரம்பித்தனர். நேற்று குரு வந்த பாதையிலேயே சிறிது தூரம் சென்றுவிட்டு பின்பு மலைகளில் ஏற ஆரம்பித்தனர். சந்தோஷ் முதலில் வெகமாக ஏறிச் சென்றார். ஆஃகானிஸ்தான்

மலைகளிலும் குகைகளிலும் பல வருடங்கள் வாழ்ந்திருக்கலாம். எனவே பழக்கத்தின் காரணமாக வேகமாயும் , சிரமமின்றி இலகுவாக ஏறிச் சென்றார். குரு அவருக்கு ஈடு கொடுத்தது அவருடன் சென்றான். ஆனால் மற்ற நால்வரும் சிறிது பின் தங்கினர். முந்திச் சென்ற இருவரும் ஒரு பாறையில் அமர்ந்து ஓய்வு எடுத்தனர். அப்பொழுது குரு ஆஃகானிஸ்தான் மொழிகளில் பயிற்சி எடுத்துக் கொண்டருந்தான்.

ஆஃகானிஸ்தான் மலைகளிலும் குகைகளிலும் பயணம் செய்யவே இந்தப் பயிற்சி. தினமும் 2 மணி நேரம் இது நடைபெறட்டும் என்று சந்தோஷிடம் குரு கூறினான். பின்பு 2 மணி நேர ஓய்விற்குப் பின் பாடங்கள், மொழிப் பயிற்சி. அதாவது காலை 9 மணி முதல் மதியம் 1 மணி வரையும் மீண்டும் மாலை 3 மணி முதல் 5 மணி வரை பயிற்சி. 5 முதல் 7 வரை பஜன் பூஜைகள். 9 முதல் 11 மணி வரை இணையதளத்தில் ஆஃகானிஸ்தானைப் பற்றித் தனித் தனியே தகவல்களைச் சேகரித்து, தங்களுக்குள் பகிர்ந்து கொள்ள வேண்டும். பின்பு தூக்கம். இன்னும் 2 - 3 மாதங்களுக்கு இதுதான் வேலை .

கண்டஹாரில் விமானம் மெதுவாகத் தரையிறங்கியது. குரு தன் சிறிய பையைத் தூக்கிக் கொண்டு வெளியே வரும் பொழுது ஆஃகானிஸ்தானின் காற்றை முதல் முறையாகச் சுவாசித்தான். அதில் பல சோக்கதைகள் கலந்திருப்பதை உணர்ந்தான். மக்களின் கஷ்டங்களையும் துயரங்களையும் தாங்கித்தான் இருந்தது அந்தக் காற்று. மாலை 7 மணியாய் இருந்தும் இன்னும் வெளிச்சம் இருந்தது. வடக்கே செல்லச் செல்ல கோடைகாலங்களில் சூரியன் மெதுவாகத்தான் மறைந்து, விரைவில் எழுந்து விடுவான். பகல் நேரம் அதிகமாயும் இரவு நேரம் குறைந்தும் காணப்படும். குளிர் காலங்களில் இது மாறி பகல் குறைவாயும் இரவு அதிகமாயும் இருக்கும். பகல் 10மணி நேரமும் இரவு 14 மணி நேரமும் இருககும். வடக்கே செல்லச் செல்ல பகல் சில நிமிடங்கள் வரை குறைந்து விடும். வட துருவத்தில் இவ்வாறு இருப்பதைக் காணலாம்.

தூதரகம் ஏற்பாடு செய்திருந்த வண்டி குருவிற்காக வெளியே காத்து இருந்தது. வண்டி கண்டஹாரின் வீதிகளின் வழியே சென்றது. யுத்தத்தின் கொடுமை அங்குள்ள கட்டிடங்களிலும் மக்களின் உடலிலும் தெளிவாக எழுதப்பட்டிருந்தது. குண்டடி படாத கட்டிடங்கள் எதுவும் இல்லை. மக்களில் பெரும்பாலோர் ஏதேனும் ஒரு குறையுடன் காணப்பட்டனர். பர்தா அணிந்தவர்கள் பெண்களாக இருக்க வேண்டும். அவரகள் தனியாக யாருடனும் பேசாமலும் தனியாகவும் சிறு குழுக்களாகவும் சென்று கொண்டருந்தனர்.

அரை மணி நேரப் பயணத்தின் பின் வண்டி ஒரு சிறு வீட்டின் முன் நின்றது. வீடு சில இடங்களில் பழுது அடைந்ததிருந்தது. அது ஊரின் ஒதுக்குப் புறமாய் இருந்தது. சில நிமிடங்களில் ஊரைத் தாண்டிச் சென்று

விடலாம். யாரையும் அறியாமல் வெளியே போய் வரவும், யாரும் வந்து போகவும் வசதியாக இருந்தது. ஓட்டுனர் குருவையும் வண்டியையும் விட்டு விட்டு வணக்கம் சொல்லிவிட்டுச் சென்று விட்டார். குரு அவருக்கு சிறிது பணம் கொடுக்க முயற்சி செய்தபோது, அவர் அதை வாங்க மறுத்து விட்டார். குரு அவரது கண்களைப் பாரத்த போது, அதில் மீள முடியாத சோகத்தைக் கண்டான். குருவும் அந்த உணர்சியால் பாதிக்கப்பட்டவனாய், மௌனமாய் வீட்டின் உள்ளே சென்றான்.

கைகால்களைக் கழுவி விட்டு சமயலறையின் உள்ளே சென்றான். சில ரொட்டித் துண்டுகளை எடுத்துக் கொண்டு, மொட்டை மாடிக்கு வந்தான். சூரியன் மறைந்தது வானில் இன்னும் சிறிது வெளிச்சம் இருந்தது. வானை குரு இரசித்துக் கொண்டு இருந்த போது, வானில் இருந்து ஒரு பறவை அவன் தோளில் இறங்கியது. குரு அதன் இறக்கைகளை மெதுவாகத் தடவிக் கொடுத்தான். சில ரொட்டித் துண்டுகளை அதற்குக் கொடுத்தான்.

அந்தப் பறவை குருவை ஒரு வட்டம் அடித்துவிட்டு மேற்கு திசையில் நகரின் வெளிப்புறமாகக் காட்டிற்குள் பறந்து சென்றது. ஒரு மரக்கிளையில் அமர்ந்து குருவின் வருகைக்காகக் காத்து இருந்தது. குரு அந்தப் பறவை சென்ற திசையில் நடந்து சென்றான். குரு வருவதைப் பார்தது மீண்டும் பறந்து வந்து அவன் தோளில் அமர்ந்தது. இருவரும் காட்டின் உள்ளே சென்றனர். நிலவொளி மெதுவாகப் பரவத் தொடங்கிய நேரம். தூரத்தில் மெல்லிய விளக்கொளி தெரிந்தது. ஒரு கூடாரமும் காணப்பட்டது. பறவை குருவைக் கூடாரத்தின் அருகில் விட்டு விட்டு பறந்து சென்றது. குரு அதற்கு கையசைத்து வழியனுப்பி வைத்தான்.

கூடாரத்தின் வாசலில் குரு நின்று கொண்டு இருந்த பொழுது ஒரு இளம் பெண் வெளியே வந்து குருவை

உள்ளே அழைத்துச் சென்றாள். உள்ளே 80 வயது மதிக்கத்தக்க ஒரு பெரியவர் அமர்ந்து இருந்தார். அவர் ஆன்மீகத்தில் உயர் நிலையை அடைந்த ஒரு மகான் போலக்காணப் பட்டார். கண்களிருந்து அன்பும் கனிவும் கங்கையனப் புரண்டன. குருவை அமரச் செய்து வைத்த விழி வாங்காமல் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தார்.

"நாம் இதற்கு முன்பு சந்தித்திருக்கிறோமா?" என்று வினவ குரு, “இருக்கலாம், ஏதேனும் பிறவியில் நீங்கள் என் தந்தையாயும் நான் உங்கள் மகனாயும் வாழ்ந்திருக்கலாம்". குருவின் பதிலைக் கேட்டு பெரியவர் சிரித்தார். குரு அவரகளது மொழியைச் சிரமப்பட்டு பேசுவகதக் கண்டு அந்தப் பெண் சிறிது தூரத்தில் அமர்ந்தவாறு சிரித்துக் கொண்டிருந்தாள்.

பெரியவர் அப்பெண்ணைப் பார்க்க, அப்பெண் கூடாரத்தின் பின் புறம் சென்றாள். சிறிது நேரத்தில் 3 தட்டுகளில் உணவுப் பொருள்களும் தண்ணீரும் கொண்டு வந்தாள். ஏதும் பேசாமல் குரு உணவைச் சாப்பிடாமல் இருக்க "அனைத்தும் சைவ உணவே" என்று பெரியவர கூறியபின் குரு உணவைச் சாப்பிட ஆரம்பித்தான். அப்பெணின் கைமணமும், பெரியவரின் அன்பும் கலந்து உணவு சுவையாக இருந்தது. உணவு உண்டபின் அந்தப் பெண் தூங்குவதற்கு படுக்கை ஒன்றைத் தயார் செய்து குருவை அதில் தூங்கச் சொன்னாள். விளக்குகளைக் குறைத்துவிட்டு அவளும் பெரியவரும் கூடாரத்தின் இன்னொரு கோடியில் தூங்கினர்.

காலை 5 மணியிருக்கும். பறவைகளின் சப்தம் கேட்டு எழுந்த குரு கூடாரத்தின் இன்னும் சிலர் இருப்பதைப் பார்த்தான். பெரியவர் அவர்களையும் எழுப்பித் தேநீர் கொடுத்தார். அறையில் புதிதாகச் சில துப்பாக்கிகளும் வெடி குண்டுகளும் இருந்தன. பெரியவர் குருவைத் தன் அருகில் அமரச் செய்தார். மற்ற இருவரையும் கூடாரத்தின் வெளியே நிற்கச் சொன்னார். பின்பு ஆஃகானிஸ்தானின் இன்றைய நிலையை விளக்க ஆரம்பித்தார்.

ஒரு நீண்ட பெரு மூச்சுடன் தன் உரையாடலை ஆரம்பித்தார். அவரது பெரு மூச்சில் ஆஃகானிஸ்தானின் துயரம் கலந்து இருந்தது. கண்களை மெதுவாக மூடிக் கொண்டார்.

"இந்தியா போல் அமைதியை விரும்பும் நாடு இல்லை இது. ஆனால் இங்கு அமைதி பரவ வேண்டும். பன்னாடுகளின் விளையாட்டுத் தளமாகயும், அவர்கள் தயாரிக்கும் ஆயுதங்களின் சோதனைக் கூடமாயும் ஆஃகானிஸ்தான் மாறிவிட்டது. இப்பொழுது இங்கு யார் ஆட்சி செய்கிறார்கள் என்று யாருக்கும் தெரியாது. தாலிபான்கள் ஒரு பக்கம், வெள்ளைக்காரப் படைகள் ஒரு பக்கம், ஆஃகான் போலீஸ் ஒரு பக்கம். இவர்கள் மூவர் படியிலும் ஆஃகானிஸ்தான் சிக்கிச் சின்னாபின்னமாகி விட்டது. மூவருக்கும் இந்நாட்டின் மீது அக்கறையில்லை.

தாலிபான்கள் சர்வாதிகாரத்தின் மூலம் இந்நாட்டை ஆள முயற்சி செய்கின்றனர். அவர்களுக்கு மக்களாட்சி மீதோ, மக்களின் நலனிலோ அக்கறையில்லை. அவரகளின் வளர்ச்சிக்கும் வர்த்தக நலனிற்கும் ஆஃகானிஸ்தானின் நலம் விலை பேசப்படுகிறது. இங்கு பள்ளிக்கூடங்கள் இல்லை. தொழிற்சாலைகள் இல்லை.

மருத்துவ வசதிகள் கிடையாது. கிராம நிர்வாகம் கிடையாது. வர்த்தகம் இல்லை. மக்கள் போக்குவரத்து இல்லை. கஞ்சா இங்கு அதிகமாய் விளைவதாலும் எளிதாகக் கிடைப்பதாலும் போதைப் பழக்கம் இங்கு கலைவிரித்தாடுகிறது. மது அருந்துவதை தாலிபான்கள் தடை செய்து விட்டதால் கஞ்சாவின் உபயோகம் அதிகரித்து விட்டது. பெண்கள் வேலை செய்ய தடை செய்யப் பட்டுள்ளது. அவர்கள் பள்ளிகளில் சென்று படிக்க அனுமதி கிடையாது. எனவே நாட்டின் பொருளாதாரம் நலிவடைந்து உள்ளது. எங்களுக்கு அமெரிக்கா போன்ற மேலை நாடுகளின் ஆடம்பர வாழ்க்கை தேவையில்லை. இலங்கைத் தமிழர்களுக்கு நீ அளித்த அமைதியான எளிமையான வாழ்க்கை எங்களுக்குப் போதும். சுருக்கமாகச் சொல்லப் போனால் இந்த நரக வாழ்க்கையிலிருந்து எங்களுக்கு விடுதலை கொடு.”

அதே நேரத்தில் சில நல்ல செய்திகளும் உனக்கு உண்டு. தாலிபான்களின் கொடுங்கோல் ஆட்சியில் மக்கள் அதிருப்தி அடைந்துள்ளனர். மதத்தின் பெயரால் தங்கள் அடிப்படை உரிமைகள் பறிக்கப் படுவதையும் தங்கள் பொருதார வளர்ச்சிக்குத் தடை விதிப்பதையும் ஆஃகான் மக்களால் தொடர்ந்து சகித்துக் கொள்ள முடியவில்லை. ஆங்காங்கே மக்கள் தாலிபான்களுக்கு தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்து வருகின்றனர்.

தாலிபான்கள் பள்ளிகளை மூட உத்தரவு இட்ட போது, பொது மக்கள் அதனை எதிர்த்து தாலிபான்களை துரத்தியடித்துள்ளனர். குறிப்பாகப் பெண்கள் இடையே மிகுந்த வெறுப்பு உள்ளது உனக்கு தெரிந்ததே. பெண்களின் முன்னேற்றத்தை தாலிபான்கள் அனுமதிப்பதில்லை. அவர்கள் படிப்பதற்கோ, அலுவலகங்களில் வேலை பார்பதற்கோ தாலிபான்கள் அனுமதிப்பதில்லை. பெண்கள் பள்ளிககூடங்கள் பலவற்றைத் தாலிபான்கள் மூடியுள்ளனர்.

தாலிபான்கள் பெண்களை ஆடுமாடுகள் போல் நடத்துகின்றனர். எனவே அவர்கள் தங்கள் குழந்தைகளை தாலிபான்கள் கண்ணில் படாமல் மறைத்து வளர்க்கின்றனர்". குரு தாலிபான்களுக்குப் பண உதவி எங்கு இருந்து கிடைக்கிறது? யார் யார் கொடுக்கிறார்கள்?"

பெரியவர் தொடர்ந்தார், "வெளி நாடுகளில் வசிக்கும் எங்கள் நாட்டவர் நன்கொடை தருகின்றனர். ஆனால் இது அவரகள் தேவையில் மிகச் சிறிய அளவே. இதை நாம் கண்டு கொள்ளத் தேவையில்லை. இந்த நாடு கஞ்சா பயிர்களுக்குப் பெயர் போனது. கஞசாவை அமெரிக்கா போன்ற மேலை நாடுகளுக்குக் கள்ளத் தனமாய் கடத்திப் பெரும் பணம் ஈட்டுகின்றனர். தாலிபான்களின் முக்கிய வரமானம் இதுவாகும். கஞ்சா கடத்தும் தொழிலில் அமெரிக்காவின் உளவுத் துறை பெரும் பங்கு வகிக்கிறது. உளவுத் துறைக்கு அமெரிக்காவின் நிதி ஒதுக்கீடு பற்றுவதில்லை. பல இடங்களில் டாலர் நோட்டுகளாக இலஞ்சம் கொடுக்க வேண்டியுள்ளது. அதற்கு கடத்தல் தொழிலில் வரும் வருமானம் பெரும் உதவியாய் இருக்கிறது.

பாகிஸ்த்தான் அரசு, அமெரிக்காவிடமிருந்து நிதி உதவி பெறுகிறது. இந்த உதவி இராணுவத் தளவாடங்கள் வாங்குவதற்கு, பாகிஸ்தான், இராணுவத்திற்கு ஒதுக்குகிறது. இதில் ஒரு பகுதி தாலிபான்களுக்கு பணமாயும், ஆயுதங்களாயும் தாலிபான்களுக்குப் போய் சேர்கிறது. வெளி நாட்டு நிறுவனங்கள் இங்கு சில வேலைகளை எடுத்துச் செய்து வருகின்றன. உதாரணமாக, வெளி நாட்டுப் படைகளுக்குத் தேவையான பொருட்களை வாங்கி, அவர்கள் சொல்லும் இடத்திற்கு வண்டிகள் மூலம் எடுத்துச் செல்ல வேண்டும். சாலைகளில் இந்க வண்டிகளைத் தடை செய்யாமல் இருக்க தாலிபான்களின் பணம் வசூலிக்கிறார்கள். அமெரிக்கா அரசு பல வழிகளில் தாலிபான்களுக்கு

உதவியாய் இருககிறது”.

பல விஷயங்கள் குருவிற்கு ஏற்கனவே தெரிந்ததுதான். என்றாலும் உள்ளூரில் இருப்பவர் கூறுபவை மிகவும் துல்லியமாயும் தெளிவாகவும் இருக்கும். தாலிபான்களை ஒடுக்க வேண்டும் என்றால் அவர்களுக்குக் கிடைக்கும் பண உதவியைத் தடை செய்ய வேண்டும்.

பெரியவர் "இங்குள்ள இரண்டு பேர் உனது உதவிக்கு ஏற்பாடு செய்துள்ளேன். இவர்கள் தாலிபானைச் சேர்ந்தவர்கள். என்னிடம் மரியாதையும் மதிப்பும் உள்ளவர்கள். உன்னுடைய பணிக்கு இவர்கள் உதவியாய் இருப்பார்கள். நாளைக் காலை கிளம்பத் தயாராய் இரு” என்று கூறிவிட்டு கூடாரத்தின் வெளியே நின்ற இருவரையும் உள்ளே வரச் சொன்னார். அவர்கள் இருவரையும் குருவிற்கு அறிமுகம் செய்து வைத்தார். “என்னிடம் இருக்கும் யாருக்கும் நான் புதிதாகப் பெயர் வைப்பது உண்டு. அதேபோல் உங்கள் பெயர்கள் தாரிக், பாரிக். இரண்டு மூன்று வாரங்கள் இந்த நாட்டைச் சுற்றிப் பார்க்கப் போகிறோம். நீங்கள் தான் எனக்கு வழிகாட்டி” என்று அரைகுறையாக அவர்களது மொழியில் பேசியது அவர்களுக்கு சிரிப்பையும் சந்தோஷத்தையும் கொடுத்தது. அங்கிருந்த பெண் அனைவருக்கும் உணவு பரிமாறினாள்.

அதன் பின் அடுத்த நாள் காலை, குரு தனது இடத்திற்குப் பயணப்பட்டான். தாரிக் பாரிக் இருவரும் குருவுடன் வந்தனர். தாரிக் பாரிக் இருவரும் தங்களது துப்பாக்கிகளையும் குண்டுகளையும் எடுத்துக் கொண்டு வரச் சென்ற போது, "என்னுடன் இருக்கும் வரை அவை உங்களுக்குத் தேவைப்படாது. அவைகளை எங்கேனும் காட்டில் ஒளித்து வையுங்கள். இந்தப் புனிதமான பெரியவர் இருக்கும் இடத்தில் ஆயுதங்கள் இருப்பது நன்றாக இருக்காது" என்று குரு கூறினான். ஆனால் இருவருக்கும் ஆயுகங்களை விட்டு வருவது சிறிது கடினமாய் இருந்தது. ஆஃகானிஸ்தான் போன்ற நாடுகளில் ஆயுதம் இன்றி நடமாடுவது பாதுகாப்பற்றது. பெரியவர் அவ்விரண்டு பேரிடமும் ,"குரு சொல்வதைப் போல் நடந்து கொள்ளுங்கள், உங்களுக்கு எவ்வித ஆபத்தும் வராது" என்று உறுதி கூறினார். அதன்பின் தாரிக் பாரிக் இருவரும் ஆயுகங்களையும் குண்டுகளையும் ஒரு மூட்டையில் கட்டி ஒரு புதருக்குப்பின் ஒழித்து வைத்தனர். குரு அவையிருக்கும் இடத்தை அடையாளம் கண்டுபிடிக்க உதவியாக, அங்கிருந்த மரங்களில் சில அடையாளங்களைப் போட்டான்.

தாரிக் உருவத்தில் குள்ளம், பருமன். பாரிக் அதற்கு நேர் எதிர்மறை, உயரம் ஒல்லி. உடல் அமைப்பைப் பார்த்தால் கரடு முரடானவர்கள் போலத் தோன்றினாலும், பழகுவதில் மென்மையானவர்கள். இருவருக்கும் வயது 25-30க்குள் இருககும். கடந்த 10 ஆண்டுகளாக தாலிபான்களுக்காக உழைத்து வருகிறார்கள். தினமும் குரான் படிப்பதிலும் ஐந்து முறை தொழுவதிலும் தவறுவதில்லை. குரானின் அர்த்தத்தைத்தான் தவறாகப் புரிந்து வைத்திருக்கிறார்கள். பெண்களைத் தரக்குறைவாக நடத்த எந்த மறை நூலும் போதிக்காது.

போதைப் பொருட்களை விற்று வாழ்க்கை நடத்தவும் போதிக்காது.

அரபு நாடுகளில் கலாச்சாரம் இந்தியா போல் பழமையானது அன்று. பண்பட்டதும் அல்ல. முகமது வாழ்ந்த காலங்களில் மக்கள் ஒருவருக்கொருவர் போரிட்டுக் கொண்டும், கொலை, கொள்ளை என்றும் வாழ்ந்து வந்தனர். அவர்களது முக்கிய தொழில் கால்நடை வளர்த்தல், சிறு சிறு விவசாயம் என இருந்தது. எனவே அவர்களது வருமானம் குறைந்த அளவிலேயே இருந்தது. கங்கை பொன்ற பெரிய ஆறுகள் அப்பகுதியில் கிடையாது. நாட்டின் பெரும்பான்மையான இடங்கள் பாலைவனங்களாயும், கரடு முரடான மலைப் பகுதிகளாயும் இருக்கும். இப்படிப் பட்ட மக்களை நெறிப்படுத்த சில கடுமையான போதைனைகளைச் சொல்லியிருக்கலாம். மக்களை மதம் என்னும் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர சில கடுமையான நடவடிக்கைகளை எடுத்திருக்லாம். ஆனால் 2000 ஆண்டுகளுக்குப் பின் பொருந்தும் என்று சொல்ல முடியாது. அத்தகைய சில வாசகங்களை எடுத்துக் கொண்டு தாலிபான்களும் மற்ற தீவிர வாதிகளும மக்களைத் தவறான வழியில் இட்டுச் செல்கின்றனர். மதத்தலைவரகளும் மித வாதிகளும் என்ன செய்வது என்று தெரியாமல் குழம்பியுள்ளனர்.

குரு, தாரிக், பாரிக் மூவரும் கண்டஹாரில் உள்ள வீட்டை அடைந்தனர். குரு இருவரையும் பார்த்து, “என்னுடன் இருககும் வரை யாரும் மாமிசம் உண்ணக் கூடாது. மது அருந்துவது இஸ்லாமில் தடை செய்யப்படடுள்ளது. எனவே அதுவும் கிடையாது. கஞ்சா, புகையிலை, சிகரெட், சுருட்டு எதுவும் கிடையாது”. குருவின் வாரத்தைகளில் உறுதியிருந்த அளவிற்கு கனிவும் இருந்தது. தாலிபான்களுக்கு தங்களது தலைவர் தவிர வேறு யாரும் உத்தரவு போடுவது பிடிக்காது. அவர்களது பயிற்சி அப்படி. ஆனால் குருவின்

வார்த்தைகளை மீற முடியவில்லை. தாலிபான்கள் முஸ்லிம் அல்லாதவர்தளை மதிப்பதில்லை. ஆனால் குருவிடம் அப்படி நடக்க முடியவில்லை. குரு அவர்களைவிட வயதில் இளையவனாய் இருந்தாலும், குருவின் கட்டளைளை மீற முடியவில்லை.

தாரிக் பாரிக் இருவரும் தங்களுக்குள் குசு குசு வென்று பேச ஆரம்பித்தனர். அப்போழுது குரு "எது பேசுவதென்றாலும் சப்தமாகப் பேசுங்கள். சிறிது பொறுமையாகப் பேசுங்கள். இன்னும் ஒன்றிரண்டு வாரங்களில் நான் உங்கள் மொழியைச் சரளமாகப் பேசக் கற்றுக்கொள்ள வேண்டும். அதற்கு நீங்கள் தான் பயிற்சி தர வேண்டும்" திக்கித் திக்கி அவரகளது பாஷையில் பேசினான். குருவின் நோக்கம் அவரகளுக்கு அப்பொழுதுதான் புரிய ஆரம்பித்தது. தங்கள் நாட்டின் மீது அக்கறை கொண்டு எங்கிருந்தோ வந்து நமது மொழியைக் கற்கப் பாடுபட்டு. இந்தக் காடு மலை, பாலைவனங்களை நம்முடன் சுற்றி, தாலிபான்களுடன் வாதாடிப் போராடி ஜெயிக்க ஒருவன் வந்துள்ளான். இதைத் தைரியம் என்பதா அல்லது முட்டாள் தனம் என்பதா? ஆனால் இந்தியா மகாத்மா காந்தி பிறந்த நாடு. அந்நாட்டவர்களை எளிமையாய் எடை போட முடியாது. குருவின் மீது அவர்களது மதிப்பும் மரியாதையும் பக்தியும் பெருக ஆரம்பித்தது.

கண்டஹார் வீட்டிற்கு வரும் போது மணி 1 இருக்கும். மூவருக்கும் பசிக்க ஆரம்பித்தது. தாரிக் வெளியே ஓடி சில காய்கறிகளை வாங்கி வந்தான். அடுப்பை ஏற்றி, ஒரு மணி நேரத்தில் சமையலை முடிக்க, அனைவரும் உண்டு களைப்பு நீங்க உறங்க ஆரம்பித்தனர்.

தாரிக் பாரிக் எழும்பொழது, குரு கணணியில் ஏதோ வேலை பார்த்துக் கொண்டருந்தான். இருவரும் குருவின் முதுகுப் புறமாய் எட்டிப்பார்தனர். தங்களது நாட்டைப்பற்றிப் படித்துக் கொண்டருந்ததைப்

பார்த்தனர். "அது என்ன?" என்று இரவரும் கேட்க குருவும் ,"அடுத்த 3 ஆண்டுகளுக்கு ஆஃகானிஸ்தான் வளர்ச்சிக்குத் தேவையான செயல் திட்டமும், பொருளாதாரத் தேவைனளையும் தயாரித்து வருகிறேன். ஜூலை மாதத்தில் ஜப்பானில் ஆஃகானிஸ்தான் வளர்ச்சியும் பாதுகாப்பும் என்ற தலைப்பில் பன்னாடுகளின் தலைவர்கள் கூடுகின்றனர். நிதி நிறுவனங்கள், வங்கிகள் அதில் பங்கு பெறுகின்றன. உங்கள் முதல்வர் அதில் பங்கு பெற்று இந்நாட்டின் தேவையை எடுத்துக்கூறப்போகிறார். அதற்குத் தேவையான தகவல்களைச் சேகரித்து வருகிறேன். தில்லியில் உள்ள உங்கள் நாட்டுத் தூதுவர் எனது நண்பர். அவர் மூலம் பிரதம மந்திரிக்கு அனுப்பி வைக்கப்படும்"

"இந்தத் திட்டம் தீட்டுவதில் பல சிக்கல்கள் உள்ளன.

1. இது ஆஃகான் அரசு ஏற்கத்தக்கதாய் இருக்க வேண்டும். இல்லையென்றால் இது மாநாட்டில் சமர்க்கப்படாது.
2. பண உதவி செய்யும் மேலை நாடுகள் நிதி நிறுவனங்கள் வங்கிகள் முதலியன ஏற்கத்தக்கதாய் இருக்க வேண்டும். ஆஃகானிஸ்தானில் முதலீடு செய்வதன் மூலம் அவர்களுக்கு இலாபம் கிடைக்க வேண்டும்.
3. தாலிபான்கள் ஏற்கத்தக்கதாய் இருக்க வேண்டும். இன்றைய சூழ்நிலையில் தாலிபான்களின் உதவியில்லாமல் எந்த வளர்ச்சிப் பணியும் இங்கு நிறைவேற்ற முடியாது. எனவே இதில் அவர்களுக்கும் ஆதாயம் இருக்க வேண்டும்.

கூடிய விரைவில் இ தயாராகி விடும். இன்னும் மூன்று வாரங்களில் இதை நான் உங்கள் தூதுவருக்கு அனுப்பி வைக்க வேண்டும். அதற்குள் நான் உங்கள் நாட்டைச் சுற்றிப் பார்க்க வேண்டியுள்ளது. கிளம்பலாமா?" தாரிக், "10 நிமிடங்கள் இதோ வந்து விடுகிறேன்" என்று

கூறிவிட்டு, கைப்பேசியை எடுத்துக் கொண்டு மொட்டை மாடிக்கு ஓடினான்.

தாரிக் பேசி முடித்து விட்டு கிழே இறங்கி வரும் பொழுது ஒரு பல்லி கத்தியது. குரு அதனிடம் , “தெரியும், நான் எதிர்பார்த்தது தான்" என்று கூறிவிட்டு வண்டிச் சாவியை எடுத்துக் கொண்டு அவர்கள் இருவரையும் ஏற்றிக்கொண்டு வண்டியைக் கிளப்பினான்.

வண்டி கண்டஹாரின் முக்கிய வீதிகளில் ஓடிக்கொண்டிருந்தது. கூட்டத்தின் நடுவே வண்டியை எந்தவித சிரமமும் இல்லாமல் மிக நேர்த்தியாயும் வேகமாயும் ஓட்டிச் சென்றான். ஒலிப்பான் அடிக்கும் தேவையில்லாமல் மக்கள், வாகனங்கள் இந்த வண்டிக்கு வழிவிட்டு ஒதுங்கினர். குரு தாரிக்கிடம், “தாரிக் என்ன அமைதியாய் வருகிறாய்? உங்கள் தலைவர் என்ன சொன்னார்?”. தாரிக் பொய் சொல்லி மழுப்பப் பார்த்தான். குரு சிறிது கோபத்துடன், “என்னிடம் பொய் சொல்வது வீண். நமது நேரத்தை வீண் அடிக்காதே. இன்னும் அரை மணி நேரத்தில் உனக்குத் தகவல் வரும். எனக்கும் தகவல் வரும். இப்போதே சொல்கிறாயா அல்லது அப்புறம் சொல்கிறாயா?” என்று வினவ, “உன்னுடைய திட்டத்தைப் பற்றிப் பேசினேன். உன்னைப் பற்றியும் பேசினேன். நீ சொன்னது போல் என்னிடம் பேசுவதாக உறுதியளித்தார்”. தாரிக்கின் குரலில் சிறிது பயம் இருந்தது. தான் மொட்டை மாடியில் பேசியது குருவிற்கு எப்படித் தெரியும் என்று வியந்து பாரிக்கைப் பார்க்க, அவனும் ஏதும் அறியாதவன் போல் வழித்தான்.

அதற்குள் வண்டி நகரின் நெருக்கமான பகுதிகளை அடைந்தது. வண்டியை ஒரு ஓரமாக நிறுத்திவிட்டு மூவரும் நடக்க ஆரம்பித்தனர். சில கடைகளுக்குள் சென்று பொருட்களின் விலையை விசாரிக்க, அவை இந்தியாவில் கிடைப்பதை விட பல மடங்காய் இருந்தது. கொஞ்சம் சாக்லேட் மட்டும் வாங்கிக் கொண்டு, மீண்டும்

வண்டிக்கு வந்தனர். குரு ஆளுக்கு ஒரு சாக்லேட் எடுத்துக் கொடுக்க, அதைப் பிரித்து உண்ண ஆரம்பித்தனர். குரு அதை அவர்கள் மிகவும் இரசித்து உண்பதைப் பார்த்தான். பாரிக் பேசினான், "குரு நாங்கள் சாக்லேட் சாப்பிட்டு, வெகு காலமாகிவிட்டன. எங்களுக்கு கிடைக்கும் பணம் எங்கள் குடும்பத்தைக் காப்பத்தான் சரியாக இருக்கும். இந்த மாதிரி நகருக்கு வரவும், வாங்கிச் சாப்பிடவும் எங்களுக்கு பணமும் கிடையாது, நேரமும் கிடையாது". அவர்கள் கூறியது உண்மைதான். சாக்லேட்டின் விலை அவ்வளவு அதிகமாய் இருந்தது. தாரிக் பாரிக் இருவர் கண்களும் சிறிது பனித்தன.

எதிர்பார்த்தது போல் தாரிக்கின் கைபேசி ஒலித்தது. பேசிவிட்டு, குருவிடம் வந்து, "எங்கள் தலைவர் உங்களைச் சந்திக்க விரும்புகிறார்". குரு சிறிது யோசித்து விட்டு, "இப்போழுது முடியாது, பிறது பார்க்கலாம்". என்றான். குருவின் பேச்சு இருவருக்கும் தூக்கிவாரிப் போட்டது. தாலிபான்களின் கருத்துக்கு, உத்தரவிற்கு எல்லோரும் கீழ்படிந்தாக வேண்டும். என்ன செய்ய வேண்டும் என்று தெரியாமல், இருவரும் குருவின் கைகளைப் பிடித்துக் கொண்டு, "வண்டி அடுத்த தெருவில் நம்மைக் கூட்டிச் செல்லத் தயாராய் உள்ளது. நீ வந்துதான் ஆக வேண்டும். இல்லையென்றால் பெரும் பிரச்சனையாகிவிடும். இங்கு தாலிபான்களின் ஆட்சிக்குக் கட்டுப்பட்டுத்தான் ஆக வேண்டும்" என்று கூறிவிட்டு குருவை வலுக்கட்டாயமாக இழுக்க முயற்சித்தனர். "தாலிபான் ஆட்சி நேற்றோடு முடிந்து விட்டது. இன்று முதல் குருவின் ஆட்சி" என்று கூறிவிட்டு, வர்மக்கலை மூலம் அவர்களை நடைபிணமாய் ஆக்கிவிட்டு, இருவரையும் வண்டியில் ஏற்றிக்கொண்டு, தன் வீட்டிற்கு வண்டியைத் திருப்பினான். அப்பொழுது ஒரு பறவை குருவின் தோளில் அமர்ந்து, ஏதோ கூறிவிட்டுப் பறந்தது.

குரு வண்டியைத் திசைதிருப்பி நகரைவிட்டு வெளியே வந்தான். பாலைவனம் முட்புதர்கள் நிறைந்து காணப்பட்டது. வண்டியை சாலையின் பார்வையிலிருந்து மறைத்து புதர்களுக்குப் பின் நிறுத்தினான். தாரிக் பாரிக் இருவரையும் வர்மக்கலை மூலம் மீண்டும் சகஜ நிலைக்குக் கொண்டு வந்தான்.

இப்போழுது நன்றாக இருட்டியிருந்தது. அருகில் உள்ள சாலையில் ஒன்றிரண்டு வாகனங்கள் சென்று கொண்டிருந்தன. நிலவு வெளிச்சத்தில் முட்புதர்களின் இலைகள் மின்னின. தாரிக் பாரிக் இருவரும் தப்பித்து ஓடினால், உடம்பு புண்ணாகிவிடும் என்று உணர்ந்தனர்.

குரு பேச ஆரம்பித்தான். “சற்றுமுன் உங்கள் கனவில் ஒரு பறவை வந்ததும், என்னிடம் பேசியதையும் பார்த்திருப்பீர்கள். அது கனவல்ல. உண்மையில் நடந்தது. நீங்கள் இருந்த நிலையில் உங்கள் கண்களில் படுபவை அனைத்தும் கனவாய்ப் பதிவாகும். தாரிக்கும் பாரிக்கும் பயத்தில் உறைந்தனர்.

குரு தொடர்ந்தான், “நமது வீட்டை, உங்கள் படையினர் சூழ்ந்துள்ளனர். நமது வண்டியைத் தாக்க கண்ணிவெடி வைக்கப்பட்டிருக்கிறது. வெடித்தால் நாம் மூவரும் சாவோம். இது உங்கள் தலைவரின் திட்டம். என்னைக் கொல்வதற்கு உங்களையும் சேர்த்துப் பலியிடத் தாலிபான் தலைமையகம் திட்டமிட்டுள்ளது. இந்தத் தகவல்தான் அந்தப் பறவை என்னிடம் சொல்லியது.இன்னும் 10 நிமிடங்கள் நேரம் தருகிறேன். நீங்கள் உங்கள் தலைவரிடம் சொல்லி, வெடிகளை அகற்றி, அவர்களை வெளியேறச் சொல்லுங்கள். முடியாவிட்டால் உங்கள் தலைவரின் இமெயில் முகவரியைத் தாருங்கள். இங்கிருந்து கொண்டே, அங்கு

நடப்பதை நாமும், உங்கள் தலைவரும் வேடிக்கைப் பார்க்கலாம். தனியே பேச வேண்டும் என்றால் வண்டியை விட்டு இறங்கிச் செல்லலாம். தயவு செய்து ஓட முயற்சி செய்யாதீர்கள் ." என்று கூறிவிட்டு, குரு கீழே இறங்கி நடக்க ஆரம்பித்து விட்டான். இன்னும் 10 நிமிடங்களுக்கு குருவிற்கு வேலை ஏதும் இல்லை.

தாரிக் பாரிக் கைப்பேசியில் தங்களது தலைவரைத் தொடர்பு கொண்டு பேச ஆரம்பித்தனர். "நான் இது பற்றி முடிவு எடுக்க முடியாது. இணைப்பைத் துண்டியுங்கள். நான் மறுபடியும் அழைக்கிறேன்" என்றார். அடுத்த ஒரு நிமிடத்தில் பாரிக்கின் கைபேசி ஒலித்தது. இருவரும் மாறி மாறி இதுவரை நடந்தவைகளையும், குருவைப் பற்றியும் விபரமாகக் கூறிவிட்டு, குரு கடைசியாகச் சொன்ன வாக்கியத்தையும் கூறினார்கள். "தாலிபான்களின் ஆட்சி முடிந்து விட்டது, குருவின் ஆட்சி ஆரம்பித்து விட்டது" - இந்த வாக்கியம் தலைமையகத்திற்கு மிகுந்த கோபத்தைத் தந்தது. கண்ணிவெடியைப் பற்றி ஞாபகப் படுத்த, தலைமையகம் அங்கிருந்து ஓடிவிடுமாறு உத்தரவிட்டது. தாரிக் பாரிக் ஓட முயற்சிக்கும் பொழுது அவர்களுக்கு எதிரே இருட்டில், தரையிலிருந்து ஒரு அடி உயரத்தில், ஏதோ ஒன்று மின்னுவது போல் தெரிய சற்று உற்றுப் பார்த்தனர். அது கொடிய விஷமுள்ள நாகமாய் இருந்தது. மெதுவாக அது தங்களை நோக்கி நகர ஆரம்பிக்க இருவரும் தலைதெறிக்க ஓடிவந்து வண்டிக்குள் ஏறிக் கதவை மூடிக் கொண்டனர். பயத்தில் அவர்களது நாக்கு செயலற்று வாயின் மேலே ஒட்டிக் கொண்டது.

குரு திரும்ப வண்டிக்கு வந்து அதில் சாய்ந்து நின்றான். அப்பொழுது பாரிக் வண்டியின் கண்ணாடியைத் தட்டிக் குருவைக் கூப்பிட்டான். தனது கைப்பேசியைக் காட்டி, தலைமையகத்தின் இமெயில் முகவரியைக் கொடுத்தான். சிறிது நேரத்தில் அப்பறவை குருவின் தோழில் அமர, குரு அதற்குத் தன் கட்டளைகளைத் தெரிவித்தான்.

அப்பறவை மீண்டும் வானில் ஏறிப் பறந்து சென்றது.

குரு வண்டியில் ஏறி, “வீட்டிற்குப் போகலாமா?” என்று வினவ, இருவரும் மரணபயத்துடன் , “வேண்டாம் வேண்டாம், இங்கேயே இருப்போம்" என்றனர். குரு தனது கணணியைத் திறந்து, தாலிபான் தலைமையகத்திற்கு, ஒரு இணையதள முகவரியைக் கொடுத்தான். தானும் அதே முகவரியைத் திறந்து அவர்களுக்குக் காட்டினான். குரு வீட்டிற்கு வெளியே நடப்பவை ஒளிபரப்பாகிக் கொண்டிருந்தது.

வீட்டிற்கு வெளியை 10-15 தாலிபான்கள் ஆயுதம் ஏந்திக் காவல் இருந்தனர். “நான் சிறிது நேரம் காலாற நடந்து வருகிறேன். முடிந்தால் அவர்களைக் காப்பாற்றப் பாருங்கள். உங்கள் கைபேசிகள் உங்கள் கைகளில் தான் இருக்கின்றன. ஓடிப்போக முயற்சித்தால் உங்கள் உயிருக்கு நான் உத்தரவாதம் தர முடியாது" என்று பயமுறுத்திவிட்டு, குரு நடக்கத் தொடங்கினான்.

தாரிக் பாரிக் இருவரும் மரணபயத்தில் உறைந்து போயிருந்தனர். வண்டிக்குள் இருக்கும் வரை குருவின் பேச்சை மீறாத வரை, தமக்கு இந்தவித ஆபத்தும் இல்லை என்பதையும் உணர்ந்தனர்.நேரம் மிக மெதுவாக நகர்ந்து கொண்டிருந்தது. அரை மணி நேரம் போவது அரை நாள் போவது போல் உணர்ந்தனர். தங்களது தலைவரிடம் பேசலாம் என்று நினைத்தால். அவர் இவர்களுடன் பேசத் தயாராய் இல்லை. இணைப்பைத் துண்டிக்கிறார்கள். கணணியில் சீட்டு விளையாட நினைத்தால், பயத்தில் தப்புத் தப்பாய் விளையாண்டு சீக்கிரம் தோற்றுப் போகிறார்கள். இணையதளத்தில் கொஞ்சம் பாட்டுக் கேட்டார்கள். அழகய பெண்களின் படங்களைப் பார்த்தனர். பயத்தில் பெண்களின் படங்கள் கூடப் பிசாசுகளாய்த் தோன்றின. நமக்கு பயத்தில் தான் இவ்வாறு தோன்றுகிறதா இல்லை குருதான் ஏதாவது

செய்கிறானா என்றும் தெரியவில்லை. கீழே இறங்கி நடக்கலாம் என்றால் பாம்பைப் பற்றிப் பயம். குருவாவது கண்ணில் படுகிறானா என்று எட்டிப் பார்தால், அவனும் அங்கு இல்லை. தூரத்தில் ஒன்றிரண்டு வண்டிகள் போவது மட்டும் தெரிந்தன.

குரு தங்களை இங்கு விட்டு விட்டுப் போய்விட்டால் என்ன செய்வது? வண்டியில் சாவி இருக்கிறா என்று பார்க்க அது அழகாய் அதில் தொங்கிக் கொண்டிருந்தது. தாரிக் "வண்டியை ஓட்டிச் சென்றுவிடலாமா?" என்று கேட்க "குருவை நம்மால் எதிர்க்கமுடியாது. வீணாக நாம் குருவிடம் கெட்ட பெயர் வாங்க வேண்டாம். ஒரு நல்ல காரியத்திற்காக இங்கு வந்துள்ளான். தாலிபான்களின் எதிரியாக இருந்தாலும் நமது நாட்டின் நனலின் அக்கறையுள்ளவன். பத்து வருடங்களாய்ப் போராடி என்ன பலனைக் கண்டோம்? குருவிடம் சேர்ந்த நேரம் முதல் நம்மிடம் ஒரு நிம்மதி தோன்றியிருப்பதைக் கவனித்தாயா? நம் கைகளில் ஆயுதம் இருந்தவரை நம்மிடம் பயம் இருந்தது. இன்று நிராயுதபாணி. ஆனால் நெஞ்சில் இனம் தெரியாத தைரியம். இவையெல்லாம் குருவினால் வந்தவை. எனவே நாம் குருவிடம் உண்மையாய் இருப்பதுதான் நல்லது" என்று பாரிக் பேசி முடித்தான்.

இதைக் கேட்ட தாரிக் மிக ஆச்சரியப்பட்டான். பாரிக் ஒரு நாளும் இவ்வாறு பேசியதே இல்லை. இந்த அளவு கோர்வையாய் பேசும் திறன் அவனுக்குக் கிடையாது. சப்தம் இல்லாமல் தாரிக் பாரிக் சொல்வதை ஆமோதித்தான்.

ஏதோ ஒரு புதுமையான சப்தம் வருவதை இருவரும் கேட்டனர். அது கணணியிலிருந்து வருவதை குரு ஏற்கனவே திறந்து வைத்திருந்த இணையதளப் பக்கத்திற்குச் சென்றனர். தாலிபான்கள் குருவிற்காகக் காத்துக்கொண்டு அங்கும் இங்கும் நடந்து

கொண்டிருந்தனர். ஆனால் ஓரிருவர் ஏதோ சப்தம் கேட்பதை உணர்ந்து, சற்று உன்னிப்பாகக் கவனிக்கத் தொடங்கினர். நேரம் செல்லச் செல்ல அனைவரும் அந்தச் சப்தத்தைக் கேட்டனர். ஒருவன் தலைமையகத்துடன் தொடர்பு கொண்டு பேசினான். ஒருவன் தரையில் காது வைத்து ஏதேனும் வண்டி வருகிறதா என்று உணரப் பாரத்தான். இன்னொருவன் ஆகாயத்தைப் பாரத்தான். இரண்டு மூன்று பேர் வீட்டிற்கு வெளியே வந்து, கண்ணிற்கு எட்டிய தூரம் வரை நோட்டம் விட்டனர். இரவில் பார்க்கும் பைனாகுலர் மூலம் ஏதேனும் உள்ளதா என்று சுற்றுப் புரத்தை நன்கு ஆராய்ந்தனர். ஆனால் சப்தம் மட்டும் பெருகிக் கொண்டே வந்தது. யாரும் இருவரை கேட்காத ஒன்று. எந்த விமானமோ ஹெலிக்காப்டரோ, பீரங்கியோ இந்த மாதியான சப்தத்தை உண்டு பண்ணாது. பின்பு எங்கிருந்துதான் வருகிறது?

மீண்டும் தலைமையகத்திற்குத் தொடர்பு கொண்டு பேசும் போது அவர்கள் சொன்னது ஏதும் காதில் விழவில்லை. அந்த அளவிற்குச் சப்தம் வெளியே கேட்டது. இங்கிருந்து ஓடிவிடலாம் என்று எண்ணி வண்டியில் ஏறினார்கள். தலைமையகத்திலிருந்து அழைப்பு வந்து ஓட வேண்டாம், "தைரியமாய் போராடுங்கள்" என்று உத்தரவு வந்தது. ஆனால் குருவின் வீட்டில் இருந்த யாருக்கும் அங்கிருக்கக் தைரியம் இல்லாமல் வண்டியில் ஏறி, கண்ணி வெடிகளில் சிக்காமல், தப்பித்துச் சென்றனர்.

தாரிபான் தலைமையகம் சிறிது ஏமாற்றம் அடைந்தது. குருவின் சக்தியை அறிய ஒரு நல்ல வாய்ப்பை இழந்ததாக உணர்ந்தனர். தாரிக்கிற்குப் போன் செய்து, தாங்கள் குருவைச் சந்திக்க விரும்புவதாகக் கூறினார்கள். அதற்கு தாரிக், “அதைக் குருதான் முடிவு செய்ய வேண்டும். எங்கள் அழைப்பிற்காகக் காத்திருங்கள்" என்று கூறிவிட்டு இணைப்பைத் துண்டித்தனர்.

தாலிபான் தலைமையகத்திற்கு பெருத்த அவமானமாய்ப் போய்விட்டது. இணைப்பை அவர்கள் தான் துண்டிக்க வேண்டும். மறுமுனையில் இருப்பவரகள் அதுவரை காத்து இருக்க வேண்டும். தாரிக் இணைப்பைத் துண்டித்ததை அவர்களால் ஜீரணிக்க முடியவில்லை. தங்களது படையில் இருவர் குறைந்ததை உணர்ந்தனர். குருவின் வீட்டிலிருந்து தப்பித்து ஓடியவர்கள் மீண்டும் வருவார்களா என்றும் தெரியவில்லை. ஏனெனின் இருவரை நமது கட்டளைகளை மீறியவர்களை உயிருடன் விட்டு வைத்ததில்லை. தாலிபான் தலைமையகம் தங்களது படை வலுவிளக்கத் தொடங்கியதை உணர்ந்தனர்.

அடுத்த நாள் காலை தாரிக் பாரிக் எழும் போது காலை எட்டு மணியாய் இருந்தது. மிக அதிக நேரம் தூங்கியதை உணர்ந்து குருவிடம் மன்னிப்புக் கேட்க வந்தனர். “பரவாயில்லை, சீக்கிரமாய் குளித்துச் சாப்பிட வாருங்கள், இன்று எனது சமையல். உங்களுக்கு உணவு தயாராய் இருககிறது. சிறிது காரமாய்த் தோன்றினாலும் சமாளித்துச் சாப்பிடுங்கள்” என்று குரு கூறினான். அதேபோல் இருவரும் தயாராகி குருவைச் சாப்பிட அழைத்தனர். குரு இன்று வெண்பொங்லும் சாம்பாரும் சமைத்திருந்தான். மேஜைமீது அமர்ந்த பின் குரு சாப்பிடுவதைக் கவனித்து அதேபோல் இருவரும் சாப்பிட ஆரம்பித்தனர். மூவரும் வயிறாரச் சாப்பிட்டனர். அதன் செயல் முறைகளை தாரிக் கவனமாகக் குருவிடம் கேட்டுத் தெரிந்து கொண்டான். குருவிற்கு இனி தான்தான் சமையல்காரன், இனி என்னுடைய சமையல்தான் என்று தாரிக் கூற , மெதுவாகக் குரு சிரித்தான். அந்தச் சிரிப்பின் அர்த்தம் இருவருக்கும் புரியவில்லை.

பாரிக் கேட்டான், "நேற்று அந்தச் சப்தம் எங்கிருந்து வந்தது?” குரு "வெளியே சென்று பாருங்கள்" என்றான்.

இருவரும் வீட்டின் வெளியே வந்து சுற்றிப் பார்ததுவிட்டு, மீண்டும், வீட்டின் உள்ளே வந்து குருவைப் பார்க்க, குரு "காட்டைப் பாருங்கள்." என்றான். ஓடிச் சென்று பார்த்தனர்.

காட்டில் உள்ள எல்லா மரங்களிலும் இலட்சக் கணக்கான வெட்டுக்கிளிகள் அமர்ந்து அதில் உள்ள இலைகளைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தன. குருவிடம் அவர்கள் ஓடிவந்து, "அவர்கள் ஓடாவிட்டால் என்ன நடந்திருக்கும்?" என்று வினவ, குரு, "இலைகளுக்குப் பதிலாக அவர்களது தோல் வெட்டுக்களிகளுக்கு உணவாகியிருக்கும்". தாரிக் மீண்டும், "பொதுவாக வெட்டுக்கிளிகள் இரவில் பறப்பதில்லையே?" குரு, "எனக்குத் தெரியும். இன்று நீங்கள் பார்த்ததை தலைமையகத்திற்குத் தெரியப்படுத்த வேண்டாம். நேரம் வரும் பொழுது சொல்லிக்கொள்ளலாம். எப்படி மேல் நாட்டுப் படைகள் உங்கள் திறமைக்குத் தாக்குப்படிக்காமல் திணறுகிறதோ, தாலிபான்கள் திணரும் நேரம் வந்துவிட்டது. வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு என்று தமிழில் ஒரு பழமொழி தமிழில் உண்டு. உடனே தாரிக், "உனக்கு ஒரு வல்லவன் இருக்க வேண்டுமல்லவா?" என்று வினவ, குரு, "முதலில் நான் வல்லவன் இல்லை. நல்லவன். என்னை ஒருவன் கருவியாக்கி, ஆட்டுவிக்கிறான். நான் ஒரு சாவி கொடுக்கப்பட்ட பொம்மை. அவ்வளவே," என்று கூறிவிட்டு சாவியை எடுத்துக் கொண்டு, வீட்டைப் பூட்டிவிட்டு, வெளியே கிளம்பினான். இன்று வண்டி வேறு திசையில், கண்டஹாருக்கு எதிர் புறமாய் ஓடியது.

குரு காலையிலேயே தான் செல்ல வேண்டிய இடத்தை இணையதள வரைபடத்தில் பார்த்து, முடிவு செய்திருந்தான். கஞ்சா அதிகமாய் விளையும் உங்கள் மலைப்பிரதேசத்திற்குச் செல்கிறோம். பாரிக் "அது வெகு தூரத்தில் அல்லவா உள்ளது!" என்று கூற, ஆம், ஆனால் அது இந்த நாட்டின் தானே உள்ளது? இன்று இரவுக்குள் நாம் அங்குப் போய்ச் சேர வேண்டும்" என்றான் குரு.

பாதை கரடு முரடாக இருந்தது. நல்ல சாலைகள் இல்லை. பீரங்கிகள் அதிகமாய் நடமாடியதால், சாலைகள் தகர்ந்து இருந்தன. போகும் இடம் எல்லாம் மிகுந்த வரட்சியாயும் பாலைவனங்கயாயும் இருந்தன. ஆங்காங்கே சிறு சிறு ஆறுகள் ஓடின. அவைகளில் பளிங்கு போல் நீர் சிறிது ஓடிக்கொண்டிருந்தது. ஆஃகானிஸ்தானில் பனி படர்ந்த மலைகள் உண்டு. கோடைகாலத்தில் இப்பனி உருகி ஆறுகளாய் ஓடும்.

மதிய வேளையில் ஒரு ஆற்றில் இறங்கிக் குளித்துவிட்டு, தாங்கள் கொண்டு வந்த உணவை உண்டனர். நேற்று இரவு தாரிக் பாரிக் இருவரும் சரியாக உண்ணவில்லை. பயத்தில் ஒட்டிய நாக்கு பசியைத் தூண்டவில்லை. காலையிலும் இந்திய நாட்டு உணவு. சீக்கிரமாய்ச் செரித்துவிட்டது. எனவே இரவுவரைக்கும் வைத்திருந்த உணவை இப்பொழுதே சாப்பிட்டு விட்டனர். மேலும் சாப்பிட அமர்ந்த நேரம் மதியம் இரண்டரை மணி. அவரகள் சாப்பிட்டுக் கொண்டிருந்த நேரத்தில் குரு அரை மணி நேரம் தூங்கி எழுந்தான் .

மீண்டும் அவர்கள் பயணத்தைத் தொடர்ந்து இருட்டும் பொழுது மலையடிவாரத்தை அடைந்தனர். சிறிது குளிரும் இருந்தது. தாரிக் பாரிக் இருவரும் கீழே இறங்கி தாலிபான் படைவீரர்கள் யாரும் இருக்கிறார்களா என்று

விசாரிக்க ஆரம்பித்தனர்.

"இப்பொழுது இங்கு யாரும் இல்லை.ரு இரண்டு மூன்று மாதங்களுக்கு முன் இருந்தனர். அவர்களது தொல்லை தாங்க முடியாமல் ஒரு நாள் நாங்களே அவர்களை விரட்டியடித்து விட்டோம். மலைக் குகைகளில் அவர்கள் வாழலாம். சில சமயங்களில் சமையல் சாமான்கள் கேட்டு இங்கு வருவது உண்டு. உங்களுக்கு ஏதேனும் உதவி வேண்டுமா?" என்று ஒரு பெரியவர் கேட்டார்.

அப்பொழுது பாரிக் "மூன்று பேர் கண்டஹாரிலிருந்து வந்திருக்கிறோம். நாங்கள் தங்குவதற்கு இடமும், இரவு உணவும் தேவை". பெரியவர் "தாலிபான்கள் தங்கியிருந்த வீடு சும்மாதான் இருககிறது. நீங்கள் தங்கிக் கொள்ளலாம். எவ்வளவு நாள் தங்குவீர்கள்?" எனக் கேட்டார். அப்பொழுது பாரிக், "ஒன்றிரண்டு நாள் தங்குவோம்" என்றான். அதற்குள் குரு வண்டியை ஒரு ஓரமாக நிறுத்திவிட்டு, இவர்களுடன் சேர்ந்து கொண்டான். அவர் மூவரையும் ஒரு வீட்டிற்கு அழைத்துச் சென்றார். பக்கத்து வீட்டிலிருந்து சாவி வாங்கி வீட்டைத் திறந்து விட்டார். குரு அப்பெரியவரிடம், "நாளைக் காலை உங்களிடம் பேச வேண்டும்" என்று அவர்களது மொழியில் சொன்னான். பெரியவர் தாரிக் பாரிக் இருவரையும் மாறி மாறிப் பார்க்க , "ஆம் இவர் நம் நாட்டவர் இல்லை. இந்தியாவிலிருந்து வந்திருக்கிறார். நாளைக் காலை எல்லாவற்றையும் விபரமாகப் பேசலாம்" என்றான் பாரிக்.

"வேறெதுவும் உதவி தேவையா" என்று பெரியவர் வினவ "ஒரு நிமிடம்" என்று பாரிக் சொல்லிவிட்டு தாரிக்கிடம், "சமையலுக்கு வேறு ஏதாவது வாங்க வேண்டுமா?" என்று கேட்டான். "இங்கு என்னென்ன இரவு வேளையில் கிடைக்கும் என்று தெரியவில்லை. இருப்பதை வாங்கி வா. குருவிடம் கொஞ்சம் பணம் வாங்கிக் கொள்" என்றான். பாரிக்கும் அதுபோல குருவிடம் பணம்

வாங்கிக் கொண்டு, அப்பெரியவருடன் நடந்து சென்றான். குரு வண்டியிலிருந்து சாமான்களை இறக்கிக் கொண்டு வந்தான். தாரிக் வீட்டைச் சுத்தம் செய்து, சமையலுக்கு ஏற்பாடு செய்தான்.

பெரியவர் பாரிக்கிடம் "நீங்கள் தாலிபான்களா?” என்று வினவ "இப்பொழுது இல்லை. அதிலிருந்து விலகி வெளியே வந்துவிட்டோம். நம் நாட்டை தாலிபான்களிடமிருந்து மீட்டு முன்னேற்றப் பாதையில் கொண்டு வர ஒரு இந்தியர் பாடுபடுகிறார். அவரது பெயர் குரு. பல அற்புத சக்திகள் கொண்டவர். நாளை காலை நீங்களே புரிந்து கொள்வீர்கள்” என்று கூறினான். பெரியவர் பதிலேதும் சொல்லவில்லை.

மறு நாள் காலை 8 மணி. மூவரும் தயாராகி வெளியே வந்தால் வீட்டின் முன் ஒரு சிறிய கூட்டம் காத்திருந்தது. பெரியவர் ஊருக்குள் சென்று என்ன பேசினார் என்று தெரியவில்லை. குருவைக் காண பலர் அங்கு கூடத்தொடங்கினர். நேற்று பார்த்த பெரியவர் இன்னும் வரவில்லை. ஒவ்வொரு வீடாகப் போய் எல்லோரையும் இங்கு அனுப்பிக் கொண்டிருக்கிறாரோ என்னவோ?

நேற்று இரவு இங்கு வரும் பொழுது இருட்டியிருந்ததால் கிராமத்தைச் சரியாகப் பார்க்க முடியவில்லை. இந்தக் கிராமத்திற்கு பெயர் எதுவும் இருககிறதா என்று தெரியவில்லை. 21 ஆம் நூற்றாண்டின் நாகரீகம் எட்டாத இடம். மின்சாரம், பள்ளிக் கூடம் சாலைகள், குடிநீர் வசதி முதலியன இங்கு கிடையாது. கிராமத்திற்கு வட புறம் பனிமூடிய சிகரங்களைக் கொண்ட மலை ஒன்றிருந்தது. அந்தப் பனி உருகி ஒரு சிறிய ஆறு அந்தக் கிராமத்தின் வழியே ஓடியது. மலைமீது சிறு சிறு செடிகள் தவிர பெரிய மரங்கள் ஏதும் இல்லை.

கிராமத்தில் 20-30 வீடுகளே இருக்கும். வீடுகள் சிறியதாயும் வசதிகள் இன்றியும் இருந்தன. கிராமத்தைச் சேர்ந்த அனைவரும் குரு வீட்டின் முன் கூடிவிட்டனர். தெருக்கள் சுத்தமாயும் அழகாயும் இருந்தன. நாகரீகம் இங்கு எட்டாததினால் குப்பைகளும் பிளாஸ்டிக்கும் இங்கு இல்லை. தூரத்தில் நேற்று பார்த்த பெரியவர் வந்து கொண்டு இருந்தார். அவர் இன்னொரு பெரியவரை உடன் அழைத்து வந்து கொண்டிருந்தார். குருபொறுமையாய் காத்துக்கொண்டு இருந்தான்.

ஒரு குழந்தை, 3 வயது இருக்கும், ஒரு உலர்ந்த திராட்சைப் பழத்தை குருவிடம் கொடுத்துவிட்டுச் சிரித்தது. குரு அதைத் தூக்கிக் கொண்டு மடியில்

வைத்துக் கொஞ்சிக் கொண்டு இருந்தான். அப்பொழுது ஒரு வயதான பாட்டி, குருவின் கையைப் பிடித்துக் கன்னத்தில் முத்தம் இட்டாள். குரு இதை சற்றும் எதிர்பார்க்கவில்லை. கூட்டத்தில் இருந்த அனைவரும் "ஹோ" என்று கத்தினர். தாரிக்கும் பாரிக்கும் பலமாகச் சிரித்தனர். குருவும் சிரித்துவிட்டான். பாட்டி கைகளை ஆட்டிக்கொண்டு, நடனமாடும் பாணியில் உடலையும் ஆட்டிக்கொண்டு கூட்டத்திற்குள் சென்றுவிட்டாள்.

குரு வீட்டின் வாசலில் தானும் அமர்ந்து, வந்திருந்த அனைவரையும் அமரச் செய்தான். ஆண்களும் பெண்களுமாய் மொத்தம் 50-60 பேர் கூடியிருந்தனர். தங்களுக்குள் பேசிக் கொண்டும், சிரித்துக் கொண்டும், குருவைப் பார்த்து ஏதோ சொல்லிக் கொண்டும் இருந்தனர். அதற்குள் நேற்றுப் பார்த்த பெரியவர், தான் அழைத்து வந்தவரைக் குருவின் அருகில் அமரச்செய்தார். அவர் இந்த ஊர் தலைவராய் இருக்க வேண்டும். குரு அவரிடம் நலம் விசாரிக்க, பெரியவர் மகிழ்ச்சியுடன் தலையாட்டினார். குரு ஏதோ சந்தேகம் வந்தவனாய், “இங்கு வர முடியாமல் நோய் வாய்ப்பட்டு யாரேனும் வீட்டில் இருக்கிறார்களா?" என்று கேட்டதற்கு கூட்டம் மீண்டும் சிரித்தது. குருவிற்குப் புரிந்துவிட்டது. மக்களிடம் ஏதோ ஒரு வித்தியாசத்தை உணர்ந்த குரு இப்பொழுது புரிந்து கொண்டான். அவர்களது உடலில் நோய் வந்துபோன எந்தவித அறிகுறியும் இல்லை. தனக்கு முத்தமிட்ட பாட்டியின் அங்க அசைவுகளிலிருந்தும் தோலின் தன்மைகளிலிருந்தும் குரு இதைப் புரிந்து கொண்டான். யாரும் அளவுக்கு அதிகமாய்ப் பருமனாகவோ, இல்லை மிகவும் ஒல்லியாகவோ காணப்படவில்லை.

குருவிற்கு சில விஷயங்கள் இப்பொழுது புரிய ஆரம்பித்தன. நேற்று கண்டஹாரிலிருந்து கிளம்பும் போது தான் செல்ல நினைத்த இடம் ஒன்று, ஆனால் காலையில் தான் காணும் காட்சி வேறு. மாலையில்

வெளிச்சம் மங்கியபின் பாதை மாறியிருக்கலாம் என்று உணர்ந்தான்.

சில வினோதமான அனுபவங்கள் குருவிற்கு ஏற்படுவது உண்டு. வண்டி ஓட்டிச் செல்லும் பொழுது, திடீரென்று தூக்கத்தில் இருந்து விழிப்பது போல் உணர்வு ஏற்படுவது உண்டு. கடந்த கால் மணி நேரமோ, அரைமணி நேரமோ, எப்படி வண்டி ஓட்டினோம், எந்தப் பாதையில் வந்தோம், எதை எதைப் பார்த்தோம் என்று எதுவும் நினைவில் இருக்காது. பல நேரங்களில் போக வேண்டிய பாதை ஒன்று, போய்க் கொண்டிருக்கும் பாதை வேறென்றாய் இருப்பதைக் கண்டிருக்கிறான். அப்படி விழிக்கும் பொழுது சுற்றும் முற்றும் பார்த்து தற்பொழுது தான் இருக்கும் இடத்தை அறிந்து கொள்ள வேண்டிவரும். நேற்று இது போல் ஒன்று நடந்திருக்கும். இல்லையென்றால் நான் எப்படி இங்கு வந்து சேர்ந்தேன்?

இரண்டு மணி நேரம் அம்மக்களிடம் பொதுவாகப் பேசிக்கொண்டிருந்தான். அவர்களது வாழ்க்கை முறை, கலாச்சாரம், திருமணம், கல்வி, மதம் முதலியவைகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தான். சிறு சிறு தலைவலி, காய்ச்சல், வயிற்றுவலி போன்றவை தவிர வேறு வியாதிகள் இவர்களை அண்டியது இல்லை. வைத்தியம் என்றால் என்னவென்று தெரியாமல் இருந்தனர். சிறு வியாதிகள் தாக்கும் போது உணவைக் குறைத்து, ஓய்வை அதிகப் படுத்தி நோயை வென்றனர். மதிய வேளையில் அவர் அவர் வீடுகளில் சமைத்திருந்த உணவைக் கொண்டு வந்து அனைவரும் பகிர்ந்து உண்டனர்.

குரு "நாளை நான் உங்கள் மலையைச் சுற்றிப் பார்க்கப் போகிறேன். எனக்குத் துணைக்கு இருவர் வேண்டும்" என்று கூற, குருவிற்கு முத்தமிட்ட பாட்டி, “நான் வரவா?” என்று கத்த, மீண்டும் சிரிப்பொலி மலையில் பட்டு எதிரொலித்தது.

மறுநாள் காலை 5 மணிக்குக் கிளம்பி மலையில் ஏற ஆரம்பித்தனர். அக்கிராமத்தின் வருமானம் அம்மலையில் விளையும் கஞ்சா செடி. அவற்றைப் பறித்து உலர்த்தி வைத்திருப்பர். வியாபாரிகள் அவ்வப்பொழுது வந்து ஒரு சிறிய தொகையைக் கொடுத்து வாங்கிச் செல்வர். சில சமையங்களில் அவர்கள் நகரங்களிலிருந்து பலவிதப் பொருட்களைக் கொண்டு வந்து பண்டமாற்று முறையில் வியாபாரம் செய்வது உண்டு. உலக சந்தைகளில் அவை விற்கப்படும் விலையைக் கேட்டால் அவர்கள் மயக்கம் போட்டு விழுந்து விடுவர். இந்தக் கஞ்சா அமெரிக்கா போய்ச் சேர்வதற்குள் ஆயிரம் மடங்காகிவிடும். தாலிபான்களுக்கு முக்கிய வருமானம் இதிலிருந்து தான் வருகிறது. வேறு வியாபாரிகள் இங்கு வந்து வாங்க முடியாது. அவர்கள் கொடுத்ததே விலை. இது ஓரளவிற்கு இங்கு உள்ளவர்களுக்குத் தெரிந்தே இருந்தது. இவர்களது வாழ்க்கைக்கு வேறு வழியில்லை. இவ்வளவு நாளும் கஷ்டப் பட்ட இவர்கள், இப்பொழுது தாலிபான்களை எதிர்க்கத் துணிந்து விட்டனர். எவ்வளவு நாட்கள் இந்த வாழ்க்கை வாழ்வது? இந்த ஊரைச் சேர்ந்தவர்கள், பக்கத்து ஊருக்குச் சென்று தங்களது போராட்த்திற்கு ஆதரவு திரட்டினர். இந்தக் காலக்கட்டங்களில் தான் குரு இங்கு வந்துள்ளான். எனவேதான் குருவிற்கு இப்படிப்பட்ட வரவேற்பு கொடுக்கப்பட்டுள்ளது.

மலையில் கஞ்சா செடி தவிர வேறு சில செடிகளும் புதர்களுக்கும் நிரம்பியிருந்தன. அவைகளில் சிலவற்றைக் கீரைபோல் சமைத்து உண்பதாக, கூட வந்தவர்கள் கூறினர். அந்த மலையில் பல குகைகள் இருப்பதைக் குரு கவனித்தான். தீவிரவாதிகள் ஒளிந்து வாழ மிகத் தகுதியான இடம். இவர்களைத் தேடி நடந்துதான் வர வேண்டும். அப்படி எதிரிகள் யாரேனும்

வந்தால் அவர்களைச் சுட்டுக் கொல்வது மிகவும் எளிது. தீவிரவாதத்திற்கு நெருக்கடி ஏற்படும் காலங்களில் இங்கு வந்து வாழ்வது அவர்களது வழக்கம். அப்பொழுது அவர்கள் கிராம மக்களுக்கு மிகுந்த தொல்லைகள் கொடுப்பது உண்டு. மலையை நன்கு சுற்றிப் பார்த்துவிட்டு, மாலையில் ஐவரும் வீடு திரும்பினர்.

மறுநாள் காலை, ஊரின் முக்கியமானவர்களை மட்டும் குரு அழைத்துப் பேசினான். குருஇ "இந்த வீடு குறைந்த பட்சம் 2-3 மாதங்களுக்குத் தேவைப்படும்" என்றான். அதற்கு கிராமமக்கள், “சும்மாதான் இருக்கிறது. உன்னால் எங்களுக்கு நன்மைகள் ஏற்படும் பட்சத்தில் இதைக் கொடுப்பதில் எந்தவித ஆட்சேபணையும் இல்லை. இது போக வேறு ஏதும் உதவி தேவையா?” என்று வினவினர்.

குரு, “எனது நண்பர்கள் ஐந்து பேர் இங்கு வந்து தங்குவர். அவர்கள் இந்த மலைகளில் கிடைக்கும் கிடைக்கும் செடி கொடிகளிலிருந்து மருந்துகள் செய்ய முயற்சி செய்வர். நிச்சயமாக இங்கு மருத்துவ குணமுள்ள செடி ஒன்றிருக்கிறது. அதுதான் உங்கள் ஆரோக்கியத்திற்குக் காரணம். அது அனேகமாக நீங்கள் கீரையாகச் சாப்பிடும் அந்தச் செடியாக இருக்கும். நேற்று குருவுடன் வந்தவர்கள் அதன் பெயரைக் கூற, கிராமமக்கள் புரிந்து கொண்டனர்.

குரு மேலும் தொடர்ந்தான், “அவர்கள் இங்கு வந்து இந்த மண்ணில் வேறு ஏதும் விளையுமா என்றும் ஆராய்ச்சி செய்வர். குறைந்தபட்சம் உங்களுக்குத் தேவையானவைகளை இங்கு விளைவிக்க முடியும். உங்கள் செலவைக் குறைத்து வருமானத்தைக் கூட்டப் பார்ப்பார்கள். பக்கத்து கிராமங்களுக்கும் அவர்களைக் கூட்டிச் செல்லுங்கள்.

வியாபாரிகளிடம் உங்கள் கஞ்சாவிற்கு அதிகப் பணம் கேளுங்கள். தர மறுத்தால் விற்காதீர்கள்.பக்கத்துக்

கிராமங்களிலும் அவ்வாறே செய்யச் சொல்லுங்கள். உங்கள் கிராமத்தைச் சுற்றி அகழி ஒன்று தோண்டி அதில் தண்ணீர் நிரப்பி வையுங்கள். வண்டிகள் ஏதும் உள்ளே வராதவாறு சிறிய அளவில் இருந்தால் போதும். யாரும் எதற்கு என்று கேட்டால் பாம்புத் தொல்லை அதிகமாக இருக்கிறது, அதற்காகத் தோண்டியுள்ளோம் என்று கூறிவிடுங்கள். வியாபாரிகள் யாரையும் அகழியைத் தாண்டி உள்ளே அனுமதிக்காதீர்கள். நீங்களும் அகழியைத் தாண்டி தேவையில்லாமல் வெளியே போகாதீர்கள். தாலிபான்கள் தொந்தரவு உங்களுக்கு இருக்காது. இன்று மாலை நான் இங்கிருந்து கிளம்புகிறேன்.

அப்பொழுது ஒருவன் ஓடிவந்து வியாபாரிகள் வந்துள்ளதாகக் கூறினான். குரு, “எத்தனை பேர்?” என்று கேட்க, அவன், “மூவர்" என்றான். குரு, “நானும் வருகிறேன்" என்று அவர்களுடன் புறப்பட்டான். விலையை இரண்டு மடங்காகக் கூறும்படி கிராம மக்களிடம் குரு கூறினான். கிராம மக்கள் சிறிது தயங்கினர். குரு தைரியம் கூறி, நான் "பார்த்துக் கொள்கிறேன்" என்றான். அதேபோல் வியாபாரிகளிடம் இரண்டு மடங்கு விலை சொல்லப்பட்டது. அவர்கள் ஒத்துக்கொள்ளவில்லை. துப்பாக்கியைக் காட்டிப் பேச ஆரம்பித்தனர். அப்பொழுது குரு, “சரி, பணத்தைக் கொடுங்கள், மீதி சரக்கை எடுத்து வருகிறோம்" என்று சொல்லிவிட்டு கிராமத்தாரை அழைத்துக் கொண்டு, பணத்தை வாங்கிக் கொண்டு கிராமத்திற்குள் வந்தனர். கிராமத்தினர் "எங்களிடம் வேறு சரக்கு இல்லையே" என்று பயத்துடன் கூற, குரு, “தேவைப்படாது" என்று சொல்லிவிட்டு, அவர்களுடன் பேசிக் கொண்டே கிராமத்திறகுள் வந்தனர். அப்பொழுது தூரத்தில் இருவர் மரண வேதனையில் அலறுவதும், சிறிது நேரத்தில் வண்டி புறப்படும் சப்தமும் கேட்டன. கிராம மக்கள் ஓடிச் சென்று பார்க்கையில், இருவர் பாம்பு கடித்து விஷம் ஏறி, மரணத்தின் வாயிலில் கிடக்க, தப்பித்த மூன்றாவது

ஆள், கிடைத்த சரக்கை எடுத்துக் கொண்டு வண்டியுடன் கிளம்பிவிட்டான். கிராம மக்களுக்கு குருவின் சக்திகளும் திறமைகளும் புரிய ஆரம்பித்தன.

தாலிபான் தலைமையகம். தலைவர் முல்லா ஓமர் அலுவலகம். அவரது நெருங்கிய உதவியாளர்கள், படைத்தளபதிகள், ஆலேசகர்கள் என கிட்டத் தட்ட 10 பேர் கூடியிருந்தனர். முல்லா ஓமர் இன்னும் கூட்டத்திற்கு வரவில்லை. எதற்காக இந்த அவசரக் கூட்டம் என்றும் யாருக்கும் புரியவில்லை. பாதுகாப்பு தேவை கருதி, முல்லா ஓமர் பலரை ஒன்று திரட்டுவதில்லை. அமெரிக்காவின் குண்டுகள், தாலிபான்கள் முழுவதையும் அழித்து விடும்.

ஆஃகானிஸ்தானின் வடகிழக்குப் புறமாக பனிபடர்ந்த மலைகளில் காணப்படும் ஒரு குகை. இன்னும் 10கி.மீ. கிழக்கே சென்றால், பாகிஸ்த்தான். பாகிஸ்த்தானின் வடமேற்குப் பகுதி, பாகிஸ்த்தானின் அரசாங்கமோ, இராணுவமோ, உளவுத் துறையோ நுழைய முடியாத இடம். தீவிரவாதிகள் ஒளிந்து வாழ சிறந்த இடம்.

மாலை எட்டு மணியிருக்கும். சிறிது இருட்டத் தொடங்கிவிட்டது. தலைவர்கள் வந்த வண்டிகள் அவர்களை இறக்கிவிட்டுவிட்டு மீண்டும் வேறு வேறு இடங்களில் மரம் செடிகளுக்கு நடுவே நிறுத்தப்பட்டன. மேலே ஆகாயத்திலிருந்து விமானம் மூலமாகவோ, அல்லது விண்கோள்கள் மூலமாகவோ யாரும் பார்ததுவிட்டால் குண்டு மழை பொழியத் தொடங்கிவிடும். அதே நேரம் இந்த குகைகளை எந்தக் குண்டுகளும் தகர்க்காது. எனவேதான் தீவிரவாதிகள் இந்தப் பகுதிகளில் ஒளிந்து வாழ முடிகிறது. இந்தப் பகுதிகளில் பழங்குடி மக்கள் வாழ்கின்றனர். இவர்களுக்குச் சில தலைவர்கள் உண்டு. இந்தத் தலைவர்களின் ஆட்சிதான் இங்கு நடைபெறுகிறது. இந்தத் தலைவர்களின் உதவியோடு தீவிரவாதிகள் பத்திரமாக ஒளிந்து வாழலாம்.

தரை வழியாகவும் இவர்களை நெருங்க முடியாது. மலைப்பாங்கான பகுதி. அடர்ந்த காடுகள், பெரிய மரங்கள் கிடையாது. நடந்து வந்தால் எளிதாகக் கண்டு பிடிக்க முடியும். மலைப்பாங்கானதால் பீரங்கிகளைக் கொண்டு வர முடியாது. எனவேதான் இப்பகுதிகளில் உள்ள தீவிரவாதிகளை எளிதாக அழிக்க முடிவதில்லை.

முல்லா ஓமர் அறையுனுள் வந்தார். அவரது முகத்தில் கவலை படர்ந்திருந்தது. என்றும் இவ்வாறு கவலையுடன் இருந்ததில்லை. பல இக்கட்டான காலக்கட்டங்களில் மிக உறுதியாகவும், திறமையாகவும் பல சவால்களைச் சமாளித்தவர். ஒரு காலக்கட்டங்களில் பின் லாடனுன் அமெரிக்காவின் உதவியோடு இரஷ்யாவை எதிர்த்துப் போராடியவர். அப்படைகளை வெற்றிகரமாக விரட்டியடித்து, காபூலில் தாலிபான்களின் ஆட்சியை நிலைநாட்டியவர். அப்படிப் பட்டவர் இன்று கலங்கி நிற்கிறார்.

அனைவரும் மேற்கு முகமாகத் திரும்பி, மெக்காவை நோக்கி, இரண்டு நிமிடங்கள் மௌனமாய்த் தொழுதனர். பின்பு கூட்டம் தொடங்கியது. முல்லா ஓமர் பேசத் தொடங்கினார். “தாலிபான்களின் அழிவுகாலம் நெருங்கிவிட்டது” என்று கூறிவிட்டு அமைதியாக இருந்தார். ஒரு நீண்ட பெருமூச்சிற்குப் பின் பேச ஆரம்பித்தார். “இந்த நாட்டை ஆட்சி செய்யும் ஆவலையும், ஆசையையும் கைவிட வேண்டிய நேரம் வந்துவிட்டது. அதற்கான அறிகுறிகள் தோன்றத் துடங்கிவிட்டன. நமது கொரில்லா போர் முறைகளும், ஆயுதங்களும், வெடிகுண்டுகளும், வன்முறைகளும், கடத்தல்களும் இனி நமக்கு உதவாது” என்று கூறிவிட்டு கண்டஹாரிலும், மலையோரக் கிராமத்திலும் நடந்தவைகளை விவரித்தார்.

இதைக் கேட்டு முடித்தவுடன் கூட்டத்தில் இருவர்

கடகடவென்று சிரித்தது விட்டனர். “ஒரு சிருவனைப் பார்த்து தலைவர் இப்படிப் பயப்படுவது மிக ஆச்சரியமாக இருக்கிறது. ஒரு காலத்தில் இரஷயப் படைகளையும், இன்று அமெரிக்கா மற்றும் அவர்களது தோளமைப்படைகளையும் எதிர்த்து, திறமையாயும், வெற்றிகரமாயும், தந்திரமாயும் போராடிவரும் போது, ஒரு சிறுவனைப் பார்த்து பயப்படுவது சிரிப்புதான் வருகிறது” என்று கூறி முடித்தார்.

முல்லா ஓமர் தொடர்ந்து பேச ஆரம்பித்தார், “நமது நோக்கம், சுயநலமானது. ஆஃகானிஸ்தானின் ஆட்சியைப் பிடிப்பதே நமது நோக்கம். நமது வழிமுறைகளும் வன்முறையாய் இருககிறது. அதே நேரம் நமது எதிரிகள் இரஷ்யா, மற்றும் அமெரிக்காவின் நோக்கங்களும் சுயநலமானவை. வன்முறையின் அடிப்படையில் போராடுபவர்கள். எனவே நம்மால் அவர்களை எதிர்த்துப் போராட முடிகிறது.”

“ஆனால் இந்த புதிய எதிரி குரு, எந்தவித சுயநலமில்லாதவன். வன்முறையைத் தீண்டாதவன்.
ஆஃகானிஸ்தான் மக்களின் நல்வாழ்வே இவனது நோக்கம். இங்கு ஆட்சியைப் பிடிக்கும் நோக்கம் அவனுக்கு கிடையாது” என்று கூறிமுடித்தார்.

“இந்தத் தகவல்கள் உங்களுக்கு எப்படி தெரியும்?” என்று ஒருவர் கூட்டத்தில் வினவ, முல்லா ஓமர், "நம்மிடமிருந்து இருவர் அவனுடன் சேர்ந்துள்ளனர். அவர்கள் நம்மைப் பிரிவதற்கு முன்பு கூறியவை”.

"தாலிபான்களிடமிருந்து பிரிந்தால் மரணம் என்று அவர்களுக்குத் தெரியாதா?” என்று வினவ, “நன்றாகவே தெரியும். நானும் மிரட்டிப் பார்த்தேன். பயன் இல்லை. நம்மை விட்டு ஓடி இன்றுவரை உயிருடன் இருக்கிறார்கள்"
முல்லா ஓமர் மேலும் தொடர்ந்தார், “எனக்கும் வயதாகி

வருகிறது. போராடும் சக்தியை இழந்து வருகிறேன். எனது உடலும் நோயினால் வாடுகிறது. எனவே உங்களில் யாரும் எனது பொறுப்பை எடுத்துச் செய்யுங்கள். வெளி உலகிற்கு நான் தலைவனாய் நடிக்கிறேன். உண்மையான தலைவனை நீங்களே தேர்ந்தெடுங்கள்” என்று கூறிவிட்டு அமைதியானார். முல்லா ஓமர் தவிர மற்ற அனைவரும் தீவிரமாகப் பேச ஆரம்பித்தனர். சிறிது நேரம் கூச்சலும் குழப்பமும் நிலவியது. கிட்டத்தட்ட இரண்டு குழுக்கழாகப் பிரிந்து சண்டையிட்டனர்.முல்லா ஓமர் கையமர்த்தி அவர்களை அமைதிப்படுத்தினார். இரண்டு குழுக்களையும் தனித்தனியே அமரச்செய்தார். இரண்டு குழுக்களுக்கும் இரண்டு தலைவர்கள் உருவாகிவிட்டனர். "குருவை எதிர்ப்பதற்கு உங்கள் திட்டங்களைக் கூறுங்கள். உங்கள் திட்டங்களின் அடிப்படையில் தலைவர் தேர்ந்தெடுக்கப்படுவரார். மீண்டும் நாம் ஒரு மணி நேரம் கழித்து இங்கு கூடலாம். அதற்குள் உங்கள் உணவை முடித்துக் கொள்ளுங்கள்” என்று கூறிவிட்டு கூட்டத்தை ஒத்திவைத்தார்.

மீண்டும் ஒரு மணி நேரம் கழித்து கூட்டம் துவங்கியது. முதலில் ஒரு குழுவின் தலைவரையழைத்து தனது திட்டத்தை விவரிக்கச் சொன்னார். முதல் குழுவின் தலைவர் பேச ஆரம்பித்தார்.

பேச்சு வார்த்தைகள் நம் ஊரில் நடக்கும் பட்டிமன்றம் போல் காட்சி அளித்தது. முல்லா ஓமர் நடுவராகச் செயல்பட இரண்டு அணிகள் குருவை வெல்வதில் தங்களது வழிமுறையே சிறந்தது என்று வாதிட ஆரம்பித்தனர். வாதம் பிரதிவாதம் சூடு பிடித்தன.ஒரு குழு வன்முறை, வஞ்சம் , உறவாடிக் கெடுத்தல் ஆகிய முறைகளைப் பரித்துரைத்தது. மற்றொரு குழு தீய சக்திகளை எழுப்பி வெல்லலாம் என்று பரித்துரைத்தது. முல்லா ஓமருக்கு இரண்டுமே தோல்வியைத் தழுவும் என்று நன்றாகப் புலப்பட்டது. ஆனால் அவருக்கும் வேறு வழி தெரியவில்லை. இரண்டு கட்சிகளையும் அவரவர்

கொள்கைகளைப் பின்பற்றி, குருவை எதிர்க்குமாறு பரிந்துரை செய்துவிட்டு, கூட்டத்தைக் கலைத்து விட்டார்.

பாதுகாப்பு நிமித்தம் கருதி குகையிலிருந்து ஒவ்வொருவராக வெளியே வந்தனர். சிறிது தூரம் நடந்து தங்கள் வண்டிகளை வரவழைத்து அங்கிருந்து புறப்பட்டனர். அனைவரும் கிளம்பியபின் ஒரு பெரிய ஆந்தை அந்தக் குகையிலிருந்து வெளியே வந்து பறந்து வானில் உயரே கிளம்பியரது.

குரு கிராமத்து மக்களை அழைத்து பாம்பினால் கடிபட்ட இருவரையும் தூக்கிக் கொண்டு, கிராத்தின் உள்ளே கொண்டு வரச் சொன்னான். குரு விரைந்து மலைக்குச் சென்று, சில இலைகளைக் கொண்டு வந்து, அதன் சாறைப் பாம்பு கடித்த இடத்தில் தேய்த்தான். சிறிது குடிக்கவும் கொடுத்தான். பின்பு அவர்களைப் படுக்கச் செய்து, தலையிலிருந்து பாதம் வரை உடலுக்கு 2 செ.மீ உயரத்தில் கைகளை வைத்துக் கொண்டு, விஷத்தைக் கீழே இறக்கினான். கால் மணிநேரம் கழித்து, மெதுவாக கண்விழிக்க, அவர்களுக்கு உணவளிக்குமாறு கேட்டுக் கொண்டான்.

பின்பு குரு தாரிக் பாரிக் இருவரையும் அழைத்து அந்தத் தாலிபான்களுடன் பேசச் சொன்னான். அவர்கள் தங்களுடன் சேருகிறார்களா அல்லது மீண்டும் தாலிபான்களுடன் சேருகிறார்களா என்று கேட்கச் சொன்னான். உயிர் கொடுத்த குருவிற்குத் தங்களது உயிரைக் கொடுப்பதாகச் சூளுரைத்தனர். புதியதாய்ச் சேர்ந்த இருவருக்கும் அஹமது, முஹமது என்று பெயரிட்டான் குரு.

பின்பு தாரிக், அஹமது இருவரையும் அந்தக் கிராத்தில் தங்கச் சொன்னான். இந்தக் கிராத்தில் நடந்தவைகளை பக்கத்து கிராமங்களிலும் பரப்பச் சொன்னான்.இந்த கிராத்திலிருந்து சிலரை அழைத்துக் கொண்டு, ஒவ்வொரு கிராமமாகப் போகச் சொன்னான். தாலிபான் வண்டிகள் ஊருக்குள் வராதவாறு அகழிகளைத் தோண்டச் சொன்னான்.அவரகளுடைய பொருட்களுக்கு இரண்டு மடங்கு விலை சொல்லச் சொன்னான்.

இதன் மூலம் கிராமங்களின் வருமானம் அதிகரக்கும். தாலிபான்களுக்கு கிடைக்கும் வருமானம் குறையும்.

தாலிபான்களை எதிர்க்கும் தைரியத்தை மக்களுக்குக் கொடுக்கச் சொன்னான். பல இடங்களில் இதற்கு எதிர்ப்பு இருக்கலாம். அதே நேரம் தங்கள் வருமானம் கூடுவதால் இதற்கு ஆதரவு இருக்கலாம். இதன் மூலம் நமது நடவடிக்கைகள் தாலிபான்களுக்குத் தெரியட்டும்.

தாலிபான்கள் நடமாட்டம் தடை பட்டால் மீண்டும் பள்ளிகளைத் திறக்க ஏற்பாடுகள் செய்யச் சொன்னான். பெண்களை ஆசிரியர் வேலைகளில் அமர்த்த ஏற்பாடுகள் செய்யச் சொன்னான். பள்ளிகளை நிர்வகிக்கும் பொறுப்பை அவர்களிடம் ஒப்படைக்கச் சொன்னான். பள்ளிகளில் தையல், பூ வேலைப்பாடுகள், கூடை பின்னுதல் போன்ற சிறு தொழில்கள் கற்பிக்க ஏற்பாடுகள் செய்யச் சொன்னான். கிராம மக்களிடம் வரி வசூலித்து கிராத்தின் நிர்வாகத்திற்குச் செலவிடச் சொன்னான். 10-15 கிராமங்களுக்கு ஒரு மருத்துவ மனை நிறுவச் சொன்னான். எளிய முறையில் மூலிகைகளை உபயோகித்து வைத்தியம் பார்க்க பயிற்சிகள் அளிக்க ஏற்பாடுகள் செய்யச் சொன்னான்.

குரு இரண்டு நாட்கள் தங்கலாம் என்று எண்ணி வந்தவன், ஒரு வாரம் வரைத் தங்கும்படியாகிவிட்டது. இலங்கையிலிருந்து சதுரகிரி குழு வருவதற்கு 2-3 நாட்கள் ஆகிவிட்டன. இந்த ஒரு வாரகாலத்தில் குரு அக்கம் பக்கங்களில் உள்ள கிராமங்களுக்குப் போய் வந்தான்.

குரு தனது வேலைகளை முடித்து கண்டஹார் திரும்புவதற்குத் தனது வண்டியில் ஏறினான். குருவை வழியனுப்ப ஊரே திரண்டு இருந்தது. அப்பொழுது மாலை 8 மணி. மெல்லியதாக இருட்ட ஆரம்பித்தது. பாரிக் முஹமது இருவரையும் அழைத்துக் கொண்டு வண்டியில் ஏறினான். தாரிக்கின் முகம் வாடுவதைக் குரு கவனித்தான். வண்டியைவிட்டுக் கீழே இறங்கிவந்து, அவனைக் கட்டிப்பிடித்தான். தூரத்தில் கிழவி நடனமாடுவது தெரிந்தது. கிழவி குருவின்அருகில் வந்து

கட்டிப்பிடித்து முத்தமிட்டாள். பின்பு குருவிடம், " கொஞ்சம் முந்தி வந்திருந்தால், உன்னைக் கல்யாணம் செய்திருப்பேன்" என்றாள். குரு, “எவ்வளவு முன்பு?” என்று கேட்கஇ கிழவி, “60 வருடங்கள் முன்பு" என்று கூற, ஊரே சிரித்தது.ஒரு வாரம் தான் ஆனாலும் குருவைப்ப பிரிய அந்த ஊருக்கு மனம் வரவில்லை. வண்டியைப் போகவிடாமல் தடுத்து, இன்று இரவு தங்களுடன் தங்க வேண்டும் என்று கட்டாயப் படுத்தி அழைத்துச் சென்றனர்.

குருவையும் மற்ற இரண்டு நண்பர்களையும் ஊரின் மத்திய பகுதிக்குத் தூக்கிச் சென்றனர். அன்று இரவு வெகு நேரம் வரை ஆட்டம், பாட்டம், பேச்சு, கேலி, கூத்து, கொண்டாட்டம் முகலியன நடந்தன. குருவும் பாட்டியும் ஆடிய நடனம் எல்லோரையும் கவர்ந்தது. வெகு நேரம் கழித்தே அனைவரும் உறங்கினர்.

காலையில் எழுந்திருக்கும் பொழுது குரு பாட்டியின் மடியில் படுத்திருப்பதை உணர்ந்தான். பாட்டி அவனது தலையைக் கோதுவதும், கை கால்களைப் பிடித்து விடுவதுமாய் இருந்தாள். குரு விழித்தவுடன் மீண்டும் அவனுக்கு நெற்றியில் முத்தமிட்டாள். பாட்டியின் கண்கள் தூக்கம் இல்லாமல் சோர்ந்திருந்தன. குரு பாட்டியைத் தன் மடியில் கிடத்தித் தூங்க வைத்தான். குரு பின்பு கிளம்பி கண்டஹார் நோக்கிப் பயணம் செய்தான்.

வண்டி சாலையில் சீராக ஓடிக் கொண்டிருந்தது. எங்கு பார்தாலும் மணல் வெளி, பாலைவனம். ஆங்காங்கே சிறுசிறு ஓடைகள் இருந்தன. மலையின் பனி உருகி, பளிங்கு போல் நீர் ஓடிக் கொண்டிருந்தது. அனைவரும் அமைதியாக இருந்தனர். குரு, முஹமதிடம், “என்னுடைய பையை எடு" என்றான். தாரிக் பாரிக் இருவரிடம் கேட்டதிலிருந்து, குருவிடம் நெருங்கிப் பழகுவதா வேண்டாமா என்று குழம்பியிருந்தான். குரு கூறியது போல் பையை எடுத்துக் கொடுத்தான். குரு, பையைக் காண்பித்து, அதில் ஒரு புகைப் படம் இருக்கும், எடுத்துப்பார்" என்றான். முஹமதிறகுத் தூக்கிவாரிப் போட்டது. தான் சிறு வயதாய் இருந்த பொழுது, தாய் தந்தையருடன் வாழ்ந்த பொழுது எடுத்த படம். முஹமது குருவைப் பார்த்து, “எப்படி உங்களுக்கு இது கிடைத்தது?” என வினவ, “உனது தந்தை கொடுத்தார். எனது கைபேசியை எடுத்து உனது தந்தையிடம் பேசு" என்றான்.

முஹமது தந்தையின் பெயரைத் தேடியெடுத்து அவரை அழைக்க, அவர், குருதான் அழைப்பதாக எண்ணிக் கொண்டு, “குரு எப்படி இருக்கிறாய்? என்று வினவ, முஹமது, குரு இல்லை, நான்தான் பேசுகிறேன்" என்றான். தனது குழந்தையின் குரலைக் கேட்டவுடன், அவரால் அழுகையைக் கட்டுப்படுத்த முடியவில்லை. தனது அறையிலிருந்த தனது உதவியாளரை வெளியே இருக்கச் சொல்லிவிட்டு, தனது மனைவியை அழைத்து மூன்று பேரும் பேசம்படி ஏற்பாடு செய்தார். சில நிமிடங்களுக்கு யாராலும் ஏதும் பேச முடியவில்லை. குரு கைபேசியை வாங்கி, “விரைவில் கண்டஹார் வாருங்கள்" என்று கூறிவிட்டு கைபேசியை முஹமதிடம் கொடுத்தான்.

முஹமது கைபேசியை வாங்கும் பொழுது இணைப்பு துண்டிக்கப்பட்டு இருந்தது. ஆனால் அடுத்த சில

நொடிகளில் வேறொரு எண்ணிடமிருந்து அழைப்ப வர முஹமது பேச ஆரம்பிக்க அது அவனது அம்மாவின் அழைப்பாக இருந்தது. கைபேசியில் மின்சக்தி தீரும் வரை இருவரும் பேசித் தீர்த்தார்கள். கைபேசியை வண்டியில் மாட்டி, சக்தி ஏற்றியபின், அப்பா பல முறை கூப்பிட்டிருந்தது தெரிந்தது.

குரு அப்பாவை அழைத்து, “நீங்கள் கண்டஹாரில் நீங்கள் ஏற்பாடு செய்த வீட்டிற்கே வாருங்கள்" என அழைத்தான். அதற்கு அவர், “நீ அங்கு தங்குவது ஆபத்து. தாலிபான்கள் உன்னைத் தேட ஆரம்பித்து விட்டார்கள். குரு அதற்கு, “எதிர்பார்த்தேன், அவர்கள் என்னை ஆஃகானிஸ்தான் முழுவதும் தேடிக் கொண்டு இருப்பார்கள். அவர்கள் என்னை எதிர்பாராத இடம் எனது கண்டஹார் வீடு. அங்கு காவலும் தேடுதலும் குறைவாக இருக்கும். இன்னும் சிறிது நேரத்தில் வீட்டின் நிலைமை தெரிந்துவிடும். நீங்கள் கண்டஹார் வந்து என்னைத் தொடர்பு கொள்ளுங்கள்" என்று கூறிவிட்டு கைபேசியை முஹமதிடம் கொடுத்தான்.

. மதிய உணவிற்காக ஒரு ஆற்றங்கரையில் வண்டியை நிறுத்தி மூவரும் இறங்கினர். கிராத்தினர் கொடுத்த உணவுப் பொட்டணத்தைப் பிரித்துச் சாப்பிட ஆரம்பித்தனர். அப்பொழுது அருகில் இருந்த மரத்தில் ஒரு நீல நிற வண்ணத்தில் ஒரு பறவை வந்து அமர்ந்தது. குரு சிறிது ரொட்டித் துண்டுகளை எடுத்துக் கொண்டு, மரத்தின் அருகில் செல்ல அந்தப் பறவை குருவின் தோளில் அமர்ந்தது. குரு அதற்குச் சாப்பிட சில ரொட்டித் துண்டுகளைக் கொடுத்தான். குரு அதனிடமிருந்து கண்டஹார் வீட்டின் நிலைமையைப் புரிந்து கொண்டான்.

வண்டி கண்டஹார் வீட்டை அடையும் பொழுது மாலை 7 மணியாயிருந்தது. குரு வீட்டில் நுழையும் பொழுது, ஒருவன் துப்பாக்கியுடன் குருவையும் அவனுடன்

இருந்தவர்களையும் துரத்த ஆரம்பித்தான். மூவரும் பின்னங்கால் பிடறியில் தெறிக்க, வேகமாய் ஓடினர். குரு ஓடிய திசையில் மற்ற இருவரும் பின் தொடர்ந்து ஓடினர். குரு தான் முதலில் சந்தித்த பெரியவர் வீட்டை நோக்கி ஓடினான். விரட்டி வந்தவன் பல முறை சுட முயற்சி செய்து குறி தவறியது. தனது கடைசி குண்டையும் வீணாக்கிவிட்டு என்ன செய்வது என்று தெரியாமல் குழம்பி நின்றான். அதற்குள் குருவின் தலை மறைய ஆரம்பிக்க, வேறு வழியில்லாமல் தொடர்ந்து ஓடினான். ஒரு கத்தியை மட்டும் தனது பாதுகாப்பிற்காக உருவிக்கொண்டு, குருவையும் அவனத கூட்டாளிகளையும் தொடர்ந்து துரத்தினான். குரு பெரியவரின் வீட்டின் உள்ளே நுழைந்தான்.

பெரியவர் உள்ளே இருந்த பெண்ணிடம், “உனது விருந்தாளிகள் வந்து விட்டார்கள், சமைத்துவிட்டாயா?” என்று வினவ, மற்ற மூவரும் ஒருவர் பின் ஒருவராக வீட்டினுள் நுழைந்தனர். குரு அந்தப் பெண்ணின் பின் ஒளிந்து கொண்டான். கடைசியாகக் கத்தியுடன் ஓடி வந்தவன், “இதில் குரு யார்?” என்று கூறிக்கொண்டு கத்தியை ஓங்க, அந்தப் பெண் அவனது கையைப் பிடித்துக் கன்னத்தில் ஓங்கி அறைந்தாள். அறைவாங்கியவன் தன்னிலைக்கு வந்தவுடன், அக்கா என்று அவளைக் கட்டிப்படித்துக் கொண்டான். இருவரும் ஏதும் பேசாமல் விம்மி அழுதனர்.

பெரியவர், “இங்கு சிலர் பட்டினியால் செத்துக் கொண்டு இருக்கிறார்கள்" என்று அந்தப் பெண்ணின் தோளைத் தொட்டுச் சொல்ல, அந்தப் பெண்ணும், “தாத்தா இவரகளுக்காகத்தான் இன்று அதிகமாகச் சமைக்கச் சொன்னீர்களா?” என்று கேட்டுவிட்டு, தாத்தாவையும் கட்டிப் படித்துக் கொண்டாள். “இவர்கள் வருவது உங்களுக்கு எப்படித் தெரியும்?” என்று அந்தப் பெண் கேட்க, “சுவரில் இருக்கும் பல்லிகளின் பாஷை எனக்குப் புரியும்” என்றார். அதை ஆமோதிப்பது போல் பல்லி

மீண்டும் கத்தியது.

தாலிபானின் முதற்குழு, குரு வீட்டில் காவலுக்குப் போடப்பட்டிருந்தவனிடம் தொடர்பு கொள்ள முயன்று தோல்வியுற்றனர். எனவே குருதான் அவனை ஏதாவது செய்திருக்க வேண்டும் என்று முடிவு செய்து, உடனே குருவின் வீட்டைத் தாக்க 10 பேர் கொண்ட ஒரு சிறு படை ஒன்று அனுப்பப் பட்டது. இரண்டு வண்டிகளில் வந்தவர்கள் குருவின் வீட்டை முற்றுகை இட்டனர். முடிந்தால் உயிருடன் பிடிக்க அவர்களுக்கு உத்தரவு வந்து இருந்தது. எனவே ஐந்து பேர் வீட்டின் வெளியே காவல் இருக்க, மீதம் ஐந்து பேர் வீட்டின் உள்ளே சென்று குருவையும் அவன் கூட்டாளிகளையும் தேடினர். யாரும் இல்லாமல் ஏமாந்து நின்றனர். வெளியே குருவின் வண்டி நிற்பதையும் கண்டனர். அக்கம் பக்கத்தில்தான் எங்காவது இருக்க வேண்டும் என்று தேட ஆரம்பித்தனர். ஆனால் குரு எங்கும் கிடைக்கவில்லை. எனவே மீண்டும் வண்டியில் எறிச் சென்றனர்.

பெரியவர் வீட்டில் அனைவரும் வயிறாற உண்டனர். பாத்திரங்களை எடுத்து வைக்கும் பொழுதுதான் அப்பெண்ணிற்கு மூளை வேலை செய்தது. “தனது தம்பி திடீரென்று எங்கிருந்து ஓடி வந்தான்? ஏன் கத்தியைத் தூக்கிக் கொண்டு குருவை விரட்ட வேண்டும்?” என்று எண்ணிக் கொண்டு அவள் குருவிடம், “இங்கு என்ன நடக்கிறது? என் தம்பியை உனக்க எப்படித் தெரியும்?” என்று கேட்டாள். குரு, “எல்லாவற்றையும் அவனிடமே கேட்டுத் தெரிந்து கொள்" என்று கூறிவிட்டுப் புறப்பட ஆரம்பித்தான். அப்பொழுது பெரியவர், “இரவு வெகு நேரம் ஆகிவிட்டது. இங்கேயே படுத்து உறங்குங்கள். காலையில் சாப்பிட்டுவிட்டுப் போகலாம்" என்றார். குருவிற்குப் பெரியவர் பேச்சைத் தட்டமுடியவில்லை. குரு, “ஆனால் ஒரு நிபந்தனை. காலை சமையல் என்னுடையது!" என்றான். அந்தப் பெண் குருவை

முறைக்க , “அது எனது இராஜ்யம். யாரையும் அனுமதிக்க முடியாது" என்று உறுதியாகக் கூறிவிட்டாள். குரு வேறு வழியில்லாமல் அமைதியானான். இரவு வெகு நேரம் வரை பேசிவிட்டு காலையில் மெதுவாக எழுந்தனர். குரு, பாரிக், முஹமது மூவரும் வீட்டிற்குத் திரும்பினர். வீடு யுத்தகளம் போல் காட்சியளித்தது. பெரியவர் வீட்டில் தங்கச் சொன்ன காரணம் புரிந்தது. வீட்டைச் சுத்தம் செய்து, சமையலுக்கு ஏற்பாடு செய்யச் சொன்னான். மீண்டும் குருவை இந்த இடத்தில் தேடி வர தாலிபான்கள் முட்டாள்கள் இல்லை. ஆஃகானிஸ்தானில் குருவிற்கு இதைவிட பாதுகாப்பான இடம் இருக்காது. ஆனால் சில காலம் பகலில் வெளியே போக வேண்டாம் என்று குரு உத்தரவு இட்டான்.

குருவின் கைபேசி ஒலிக்க ஆரம்பித்தது. முஹமதின் அப்பா அழைக்கிறார். முஹமதிடம் கைபேசியைக் கொடுக்க இருவரும் பேசினார்கள். கண்டஹாரில் தான் தங்கியிருந்த இடத்தை முஹமதிடம் கூறினார். முஹமது குருவைப் பார்க்க, குரு சிறிது யோசித்துவிட்டு, "சரி போகலாம்" என்றான். முஹமது, “நான் வண்டியை ஓட்டுகிறேன்" என்றான். சரி என்று குரு சாவியை அவனிடம் கொடுக்க, மூவரும் வண்டியில் ஏறி, முஹமதின் அப்பா வீட்டிற்குச் சென்றனர்.

கண்டஹாரின் முக்கிய வீதிகளின் வழியாக வண்டி சென்றது. ஆஃகானிஸ்தானின் மிகப் பழமையான நகரம் கண்டஹார். மிக அழகியதும் கூட. ஆனால் இன்று பல தொடர்ந்த யுத்தங்களால் சேதப்பட்டு பொலிவிழந்து காணப்படுகிறது. மக்களின் மனதில் என்னேரமும் ஒரு பீதி. எந்த நேரத்தில் குண்டு வெடிக்குமோ என்று. பல இடங்களில் பலவிதமான கண்ணி வெடிகள் வைக்கப்பட்டிருக்கும். இதனால் பொதுமக்களின் அன்றாட வாழ்க்கை பாதிக்கப்பட்டுள்ளது. அடிக்கடி குண்டுகள் வெடிக்கும் சப்தம் இங்கு கேட்டுக் கொண்டே இருக்கும்.

வண்டி முஹமதின் அப்பா வீட்டின் உள்ளே நுழைந்தது. வண்டி நுழையும் போது அம்மாவும் அப்பாவும் வீட்டின் வாசலிலே காத்துக் கொண்டிருந்தனர். அம்மா முஹமதையும் அப்பா குருவையும் கட்டிப் பிடிக்க ஐந்தாறு நிமிடங்கள் அப்படியே நின்றனர். அப்பா குருவின் பிடியைத் தளர்த்தி தன் மகனைப் பார்க்கச் சென்றார். குரு, “அவன் பெயர் முஹமது" என்று கூற, “இனி நாங்களும் அப்படியே அழைக்கிறோம். அப்பா இருவரையும் உள்ளே அழைத்துச் செல்ல, எல்லா அம்மாக்களையும் போல் தன் பிள்ளைகளுக்காக மேஜை நிறைய சாப்பிடுவதற்குத் தயார் செய்திருந்தார்கள்.

அப்பா முஹமதிடம், “நீ ஓட்டி வந்த வண்டியை நீயே வைத்துக்கொள். குருவிற்கு வேறு புது வண்டி வருகிறது. காலையில் இங்கு வந்துவிடும்.

அவர் குருவைப் பார்த்து, “இனிமேல் நீ அந்த வீட்டில் தங்க வேண்டாம். அங்கு உனக்குப் பாதுகாப்பு இல்லை. இனிமேல் நீ இங்குதான் தங்க வேண்டும். தாலிபான்களின் தொல்லை உனக்கு இருக்காது. இன்று காலைதான் முல்லா ஓமரிடம் பேசி உனது பாதுகாப்பிற்கும் முஹமதின் பாதுகாப்பிற்கும் ஒரு பெரிய தொகை கொடுத்துள்ளேன். ஒரு வருட காலத்திற்கு உன்னிடம் நேரடியாக மோத மாட்டார்கள். இதைக் கேட்ட குரு மெதுவாகச் சிரித்துக் கொண்டான். “நான் சிறிது நேரம் மொட்டை மாடி சென்று வருகிறேன்" என்று கூறிவிட்டு பதிலுக்குக் கூட காத்திருக்காமல், மாடிப்படியில் இரண்டிரண்டு படியாக ஏறிச் சென்றான்.

மொட்டை மாடியை அடைந்தவுடன் குருவின் தோளில் ஒரு பெரிய ஆந்தை தரையிறங்கியது. அதனுடன் சிறிது நேரம் செலவழித்து விட்டுக் கீழே வந்தான். அப்பாவிடம், “நீங்கள் கொடுத்த பணம் வீணாகிவிட்டது. முல்லா ஓமர் பதவி விலகிவிட்டார். ஆனால் வெளி உலகிற்கு அது அறிவிக்கப்படமாட்டாது. வேண்டும் என்றால் நீங்கள்

அவரிடமே பேசித் தெளிவுபடுத்திக் கொள்ளலாம். எப்படித் தெரியும் என்று கேட்டால் "குரு சொன்னான்" என்று கூறுங்கள். அவரது கூட்டாளிகள் யாரையும் சந்தேகப்பட வேண்டாம் என்று கூறுங்கள்” என்று குரு கூறி முடித்தான். பதிலுக்குக் காத்திராமல், முஹமதிடம், “வா, கேரம் விளையாடலாம்" என்றான். அப்பொழுது அம்மா, “நானும் வருகிறேன். நீங்கள் எடுத்து வையுங்கள், இதோ வந்து விட்டேன்" என்றாள். அப்பாவும் "நானும் வருகிறேன்" என்றார்.

கேரம் பலகையை மேஜையில் வைத்து, தூசி தட்டி, பவுடர் இட்டு, காய்களை அடுக்கி வைத்தவுடன் அம்மாவும் பின்பு அப்பாவும் வந்து அமர்ந்தனர். அப்பா குருவிடம், “உனக்கு எப்படித் தெரியும்?” என்று வினவ குரு ஆகாயத்தை நோக்கிக் கையைக் காட்டினான். குருவின் கவனம் விளையாட்டில் இருந்ததால் மேலும் பேச அப்பாவும் விரும்பவில்லை, குருவும் விரும்பவில்லை. குரு திடீரென்று ஞாபகம் வந்தவனாய், “பாரிக்?” என்று வினவ, “பயப்படாதே, நன்றாகச் சாப்பிட்டுத் தூங்கிக் கொண்டிருக்கிறான்" என்றாள் அம்மா.

அடுத்த நாள் காலை வழக்கம் போல் சமயலறையில் பல்வேறு சப்தங்கள் வந்து கொண்டிருந்தன. குளியலறையிலும் தண்ணீர் ஓடும் சப்தம். காலை 6-7 மணி இருக்கலாம். குரு, முஹமது, பாரிக் மூவரும் மெதுவாக எழ ஆரம்பித்தனர். அம்மா "ஏதாவது குடிக்க வேண்டுமா?" என்று கேட்க, மூவரும் "வேண்டாம்" என்று பதில் அளிக்கும் முன், மூன்று குவளைகளில் பால் எடுத்துக் கொண்டு அறைக்கள் வந்து விட்டார்கள். அரைகுறைத் தூக்கத்தில் இருந்த அனைவரையும் தட்டி எழுப்பி, குடிக்கச் சொல்லிவிட்டுத் திரும்பும் போது அப்பா அறையினுள் நுழைந்தார். “குரு நீ எங்கும் வெளியே போக வேண்டுமா?” என்று வினவ, “இல்லை இன்று முழுவதும் இங்கு தான் தங்கப் போகிறேன். ஆஃகானிஸ்தான் வளர்ச்சிக்காத ஒரு திட்டம் தயாரித்து வருகிறேன். அதற்கு உங்கள் உதவியும் தேவைப்படலாம். நீங்கள் வெளியே போவதென்றால் போய்விட்டு சீக்கிரம் வாருங்கள். அதைப்பற்றிப் பேச வேண்டும்". அப்பா "சரி" என்று சொல்லிவிட்டு வெளியே சென்று விட்டார்.

மதிய உணவிற்கு அப்பா வீட்டிற்கு வந்தார். குரு தனது வேலையை முடித்திருந்தான். குரு, “எனது திட்டம் தயாராகிவிட்டது. சாப்பிட்டுப் பேசலாம்" என்று கூற, இன்னும் 10 நிமிடம் ஆகும், வேலை முடயவில்லை” என்று சமையறையிலிருந்து குரல் கொடுத்தார்கள். குரு சமையல் அறைக்குள் சென்று அம்மாவிற்கு உதவிகள் செய்ய ஆரம்பித்தான். முடிந்த பதார்த்தங்களை ஒவ்வொன்றாக எடுத்து மேஜயின் மீது வைத்தான். குரு, “எல்லா பதார்த்தங்களிலிருந்து கொஞ்சம் கொஞசம் எடுத்து ஒரு தட்டில் வைத்து இறைவனுக்குப் படைத்தான். “இது எங்கள் நாட்டு பழக்கம். அம்மா நீங்கள் இனி சமைக்கும் போது எதையும் சுவை பார்க்காமலே, இறைவனுக்குப் படைக்க வேண்டும் என்ற

மனோபாவத்துடன் சமையுங்கள். பின்பு அதை உண்பவர்கள் சொல்வதைக் கேட்டுப் பாருங்கள்” என்று குரு கூற. “சரி அப்படியே செய்கிறேன்" என்று அம்மா கூறிவிட்டு அனைவரையும் சாப்பிட அழைத்தாள்.

மதிய உணவிற்குப்பின் குருவும் அப்பாவும் குருவின் திட்டத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்தனர். அப்பா பொறுமையாக அனைத்தையும் படித்தார். குரு பொறுமையாகக் காத்திருந்தான். பின்பு அப்பா பேச ஆரம்பித்தார். அப்பா, “தாலிபான்களுக்குக் கணிசமான தொகையை நேரடியாகவே ஒதுக்கியுள்ளாய். இதை முதலீடு செய்யும் நாடுகள் ஏற்றுக் கொள்ளுமா என்று தெரியவில்லை.

குரு, “ஏற்கனவே அவர்களுக்கு பணம் மறைமுகமாகப் போய்க் கொண்டிருக்கிறது. இப்பொழுது நேரடியாகப் போகப் போகிறது. முன்பு எவ்வளவு போகிறது என்று தெரியாது, இப்பொழுது அதைக் தெரிந்து கொள்ளலாம். வேண்டும் என்றால் அதன் பெயரை மாற்றிக் கொள்ளுங்கள். "தீவிர வாதிகள் ஓய்வூதியத் திட்டம்" என்று பெயர் இடலாம். அல்லது "தீவிரவாதிகள் புனர்வாழ்வு நிதி" என்றும் பெயரிடலாம். எங்கள் நாட்டில் இப்படித்தான் செய்வார்கள்.

அப்பா, “இப்பொழுது கொஞ்சம் பரவாயில்லை"

குரு, “ இதில் முக்கிய விஷயம் என்னவென்றால், இந்தப் பணம் மொத்தமாகத் தாலிபான்களுக்குப் போகக் கூடாது. அப்படிப் போனால் அவற்றில் பெரும் பகுதி சுவிட்சர்லாந்து வங்கிகளில் சேமிக்கப்படும். ஒன்று நேரடியாக ஒவ்வொரு தாலிபானுக்கும் பட்டுவாடா செய்யப்பட் வேண்டும். ஆனால் தாலிபான் தலைமையகம் இதை நிச்சயமாக எதிர்க்கும். ஏனென்றால் அவர்கள் உறுப்பினர்கள் மீது உள்ள தலைமையகத்தின் பிடி தளரும். இதைத் தலைமையகம் ஏற்றுக் கொள்ளாது.

அப்பா, “இந்தச் சிக்கலை எப்படித் திர்ப்பது?” என்று வினவ, குரு "நேரடியான வழி ஏதும் இல்லை. மாநாட்டில் இந்தத் திட்டம் சமர்க்கப்பட்ட உடன் இதன் ஷரத்துக்கள், வெளி உலகிற்குத் தெரிவிக்கப்பட வேண்டும். தாலிபான்களின் ஒவ்வொரு உறுப்பினரும் இதை அறிய வேண்டும். தாலிபான் உறுப்பனர்கள் தங்கள் தலைமையகத்திற்கு நெருக்கடி கொடுப்பார்கள். தலைமையகம் வேறு வழியில்லாமல் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

குரு, “தாலிபான்களுக்கு அடையாள அட்டைகள் உண்டு. யார் யார் அடையாள அட்டையைக் காண்பிக்கிறார்களோ, அவர்களுக்கு வங்கிக் கணக்கு ஒன்று திறக்கப் பட்டு, பணம் பட்டுவாடா செய்யப்படும். அடையாள அட்டையை அவர்கள் தான் கொண்டு வர வேண்டும் என்பது இல்லை. யார் கொண்டு வந்தாலும், எந்த வித கேள்விகளோ, ஆதாரங்களோ, அடையாளங்களோ கேட்காமல் வங்கிக் கணக்கும் ஏடிஎம் அட்டையும் தர வேண்டும்.

இந்தத் திட்டத்தை தலைமையகம் எதிர்த்தாலும், உறுப்பினர்கள் வரவேற்பார்கள். உறுப்பினர்களுக்குக் கொடுக்கும் பணத்தில் ஒரு பகுதி தாலிபான் தலைமையகத்திற்குச் சந்தாவாகப் போய்ச் சேர வேண்டும்.

தாலிபான்களுக்குக் கஞ்சா மூலம் வரும் வருமானத்தைக் குறைக்க வேண்டும். கிராம மக்களிடம் பேசி, அவரகளது விலை பொருட்களுக்கு இரண்டு மடங்கு விலை கூறச் சொல்லியுள்ளேன். கிராம மக்கள் தைரியமாக பேசவார்கள் என எதிர்பார்க்கிறேன்.

தாரிக்கும் அஹமதும் இது விஷயமாக வேலை செய்கிறார்கள். ஆனால் இது தாலிபான்களின் வருமானத்தை அதிகமாகப் பாதிக்காது. ஏனெனின் தாலிபான்கள் விற்கும் விலை மிக அதிகம்.

தாலிபான்களிடம் அதிகமாக கஞ்சா வாங்குவது அமெரிக்க உளவு நிறுவனம். உங்களுக்கு இது தெரிந்திருக்கலாம். இதைத் தடுப்பதுதான் மிகக் கடினமானது. உங்கள் அரசின் உதவி இங்கு தேவைப்படலாம்”.

அப்பா, " குரு நன்றாக யோசித்துத் திட்டம் தயாரித்துள்ளாய். நாட்டின் கனிம வளங்களை, மேம்படுத்தவும், மின் உற்பத்தியை அதிகரிக்கவும் வழி வகுத்துள்ளாய். முக்கியமாக மலையோரக் கிராமங்களில் வேலை வாய்ப்பிற்கு வழிவகுத்துள்ளாய். இதன் மூலம் கஞ்சா வரத்து குறையலாம்.

நிதி உதவும் நாடுகளுக்கு கனமங்களைத் தருப்பித் தருவதன் மூலம் கடன் சுமையைக் குறைக்க வழிவகுத்துள்ளாய். நீ ஒன்று மறந்து விட்டாய். தற்போதுள்ள ஆஃகானிஸ்தான் அரசும் ஊழலில் சிக்கியுள்ளது. இந்த அரசியல் தலைவர்களும் தாலிபான்கள் போல் மோசமானவர்கள். இவர்களையும் நம்ப முடியாது.

குரு, “ஓரளவிற்குத் தெரியும். முதலில் தாலிபான்கள். அவர்கள் ஒடுக்கப்பட்டால். நாட்டில் வன்முறைகள் அடங்கி அமைதி நிலவும். பின்பு மெதுவாக அரசியல்வாதிகளைக் கவனிக்கலாம். தற்போதுள்ள அரசு தொலைக்காட்சி பெட்டி போல. இயக்குவது தூரத்திலிருநத்து வேறு யாரோ. ஆஃகானிஸ்தானை மக்களே ஆளும் காலம் விரைவில் வரும்"

அப்பா, “இந்தத் திட்டத்தை ஆஃகான் அரசுக்கும் இந்திய அரசுக்கும் விரைவில் அனுப்பி வைக்கிறேன். இந்திய அரசின் மூலம், ஆஃகான் அரசுக்கு நெருக்கடி கொடுத்து, மாநாட்டில் சமர்ப்பிக்க வழி செய்கிறேன்"

குரு, “நல்லது, அப்படியே செய்து விடுங்கள்" என்று

சொல்லிவிட்டு சிறிது ஓய்வு எடுக்கச் சென்றான். தூரத்தில் வெடிச் சத்தங்கள் அவ்வப்பொழுது கேட்டுக் கொண்டிருந்தன. அரை மணி நேரம் குரு உறங்கியிருப்பான். வீட்டின் அழைப்பு மணி சப்தம் கேட்டு எழுந்தான். வீட்டிற்கு யாரோ விருந்தாளி வரகிறார்கள் போலும் என்று எண்ணிக் கொண்டு குரு தூங்க முயற்சி செய்த போது, அறைக்ககவு தட்டப்பட்டது.

அப்பா கதவைத் திறந்து உள்ளே வந்தார். “குரு உன்னைக் கேட்காமல் சில காரியங்கள் செய்துள்ளேன். எனது பையன்களின் பாதுகாப்பிறகாக இதைச் செய்துள்ளேன். நானும் சிலக் கட்டாயத்தின் கீழ் உள்ளேன். உன்னைச் சந்திக்க ஒருவர் வந்துள்ளார். அவரைப் பார்" என்று அப்பா தயங்கித் தயங்கி முடித்தார்.

குரு அறையை விட்டு வெளியே வர 50-60 வயது மதிக்கத் தக்க ஒருவர் இருந்தார். குருவின் பார்வையிருந்து தான் அறிமுப்படுத்தாதை உணர்ந்து கொண்டு, “முல்லா ஓமர்" என்று கையை நீட்டினார். குருவிற்கு ஒரு நிமிடம் அதிர்ச்சியாய் இருந்தது. குரு திரும்பி அப்பாவைப் பார்க்க, அப்பா ஏதும் பேசாமல் நிற்க, முல்லா ஓமர், “நான்தான் அவரைக் கட்டாயப்படுத்தினேன். அவர் மீது எந்தவிதக் குற்றமும் இல்லை" என்றார். அப்பொழுது அப்பா, “முன் கூட்டியே உன்னிடம் சொல்லி நீ மறுத்து விட்டால் தர்ம சங்கடமாய்ப் போய் விடும். நீ புரிந்து கொள்வாய் என எதிர்பார்க்கிறேன்". இரண்டு பெரியவர்களும் மாறி மாறிப் பேசியதால் குரு அமைதியானான்.

முல்லா ஓமருக்கு, குருவின் தோற்றமும், எளிமையும் அவர் எதிர்பார்க்கததாய் இருந்தன. இந்தச் சிறு பையனைத் தேடி, உலகமே பயந்து நடுங்கும் தாலிபான்களின் தலைவர் வரவேண்டிய நிலையை எண்ணி சிறிது வருத்தப்பட்டார். முல்லா ஓமர் ஏதும் பேசாமல் அமைதியாய் இருந்தார். அப்பொழுது அம்மா சாப்பிடவும் குடிக்கவும் அனைவருக்கும் எடுத்து வந்தார்கள். அப்பா அமைதியைக் கலைக்கும் வண்ணம் அவைகளை இருவருக்கும் சாப்பிடக் கொடுத்தார். பாரிக்கும் முஹமதும் அறைகளிலேயே ஒளிந்து கொண்டனர்.

குருவிற்கு முல்லா ஓமரிடம் என்ன பேசுவதென்று தெரியவில்லை. நல்ல வேளையாக அவரே முதலில் ஆரம்பித்தார். “இலங்கையில் நடந்தவைகளைப் பற்றிக் கேள்விப் பட்டுள்ளேன். நல்ல முயற்சி, நல்ல முடிவு. அதே போல் எங்கள் நாட்டிற்கும் நல்லது நடக்க இங்கு வந்துள்ளது, எங்களுக்கு மகிழ்ச்சியைத் தருகிறது”. அப்பொழுது குருவின் கண் முன்னால் குகையில் நடந்த கூட்டத்தின் நடவடிக்கைகள் திரைப்படம் போல் ஓடியது. “பல ஆண்டுகளாக வன்முறையில் ஈடுபட்டு எனது மனம் மிகவும் கெட்டுவிட்டது. இந்த நாடு பல்லாண்டு காலமாக யுத்தம், குண்டு, கண்ணிவெடி, பீரங்கி என்று வதை படுகிறது. இதற்கு உன் மூலம் ஒரு விடிவு வந்தால் சந்தோஷமே. இது என்னால் முடியாத ஒன்று. ஏனென்றால் நான் நடந்து வந்த பாதை அப்படி. திடீரென்று அதை மாற்றி எதிர் திசையில் பயணம் செய்ய முடியாது. அப்படி முயற்சித்தால் முதுகில் குண்டு பாயும்”. குரு அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தான். அவர் சொல்லும் கருத்திலும் உண்மை இருந்தது.

குருவிற்கு சிறிது குழப்பமாய் இருந்தது. நீண்ட மௌனம் சாதித்தான். ஏதும் பேசாமல் இருந்தால் தவறாக நினைக்க நேரிடும் என்று கருதி, “தயவு செய்து இன்று இங்கு அரசியல் பேசுவதைத் தவிர்க்கலாம். நீண்ட நாட்களுக்குப் பின் இந்த வீட்டில் ஒரு சந்தோஷம் நிரம்பியுள்ளது. நீங்கள் இருவரும் நெடுநாள் நண்பர்கள் போல் தோன்றுகிறீர்கள். இந்த சந்தோஷமான நேரத்தை நாமும் சேர்ந்து கொண்டாடுவோம். உங்களுக்குப் படித்தவைகளைக் கூறுங்கள் நானும் அம்மாவும் சேர்ந்து செய்து தருகிறோம். இன்னும் இரண்டு பேர் இந்த வீட்டில் இருக்கிறார்கள். உங்களுக்குத் தெரிந்திருக்கலாம்" என்று சொல்லிவிட்டு முஹமது, பாரிக் இருவரையும் வெளியே அழைத்து வந்தான். “கடைசியாக ஒரு வார்த்தை. உங்கள் கருத்துகள் அனைத்தையும் நான் ஏற்கிறேன்" என்று குரு கூறி பேச்சு வார்த்தைக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தான்.

என்ன நடக்குமோ, ஏது நடக்குமோ என்று பயந்து கொண்டிருந்த அம்மாவிற்கும் அப்பாவிற்கும் குருவின் பேச்சு நிம்மதியைத் தந்தது. குருவின் வார்த்தைகளிலும் ஒரு உண்மையிருந்தது. சூழ்நிலை இருக்கமான நிலையிலிருந்து சந்தோஷமான நிலைக்கு மாறியது. போராடிப் போராடி ஓய்ந்து போன முல்லா ஓமருக்கும் சிறிது ஓய்வு தேவைப்பட்டது. ஒரே நேரத்தில் முல்லா ஓமரும் குருவும் எழுந்து கட்டிப் பிடித்துக் கொண்டனர். குருவைக் கட்டிபி பிடித்தவுடன் தன் உள்ளே ஒரு அமைதி பரவியதை முல்லா ஓமர் உணர்ந்தார். வாழ்வில் முதல் முதலாக ஒரு தன்னலமற்ற நல்ல மனிதனைச் சந்தித்த மகிழ்ச்சி முல்லா ஓமருக்கு ஏற்பட்டது.

சுயநல வாதிகளுடன் போராடிப் போராடி அலுத்துப் போன முல்லா ஓமருக்கு குருவை என்ன செய்வதென்று தெரியவில்லை. நிச்சயமாக குருவிற்கு பொதுமக்கள் ஆதரவு இருக்கும். இதுவரை எந்த உயிர் சேதமும் இன்றி, தாலிபான்களிடையே ஒரு பய உணர்ச்சியை, தோற்கப் போகிறோம் என்ற பீதியை, குரு ஒரு குறுகிய காலத்தில் ஏற்படுத்திவிட்டான். அமெரிக்கப் படையோ இரஷ்யப் படையோ தராத பயத்தை, குருவின் தன்னலமற்ற நோக்கம் ஏற்படுத்திவிட்டது. இதனை எதிற்கும் திறமை எந்த தாலிபான்களிடமும் இல்லை என்பதே உண்மை.

நிலமை இளகியதைக் கண்டு அப்பா, குரு தயாரித்த திட்டத்தை முல்லா ஓமரிடம் காண்பித்தார். முல்லா ஓமர் பொறுமையாகப் படித்துப் பார்த்துவிட்டு, “தாலிபான்கள் அழிவிற்கு அழகாகத் திட்டம் தீட்டியுள்ளீர்கள். வாழ்த்துக்கள்” என்று கூறினார். அவரது குரலில் வருத்தமும், தோல்வியும், ஏமாற்றமும் நிரம்பியிருந்தது.

இருட்டும் வரை அங்கு தங்கிவிட்டு முல்லா ஓமர் கிளம்பினார். கனத்த இதயத்துடன் வெளியேறுவது அனைவருக்கும் புரிந்தது. முல்லா ஓமர் கிளம்பியவுடன்

அனைவரது முகத்திலும் மகிழ்ச்சி பரவியது. ஆஃகானிஸ்தானின் எதிர்காலம் பிரகாசமாய் இருப்பதை அனைவரும் உணர்ந்தனர். ஆனால் குரு எந்தவித உணர்ச்சியையும் காட்டவில்லை.

குரு பேச ஆரம்பித்தான், “முல்லா ஓமர் ஒரு பல் இல்லாத சிங்கம். கிட்டத்தட்ட தாலிபான்களின் அதிகாரம் இவரைவிட்டுப் போய்விட்டது. தாலிபான் கடிவாளம் இல்லாத ஒரு முரட்டுக் காளையாகிவிட்டது. எங்கு எப்படி தனது சேதங்களை ஏற்படுத்தும் என்று கூறமுடியாது".

அன்று இரவு குரு தனது நண்பர்களை அழைத்துக் கொண்டு, வீடு திரும்பினான். இது வேறு வீடு. அப்பா அந்த பழைய வீட்டில் தங்க அனுமதி மறுத்து விட்டார். தனது பையனைக் குருவிடமிருந்து பிரிக்க அவருக்கு மனம் வரவில்லை. எனவே, இருவரின் நன்மைக்காக, பாதுகாப்பிற்காக, இன்னொரு வீட்டை ஏற்பாடு செய்திருந்தார். இப்போது அந்த வீட்டிற்குத்தான் மூவரும் சென்றனர்.

காலை எழுந்தவுடன் இணையதளங்களில், தாலிபான்களால் சுடப்பட்ட மாலாலாவின் செய்திகளும், படங்களும் இருந்தன. 13 வயது சிறுமி தன் பள்ளியிலிருந்து திரும்பும் போது, தாலிபான்களால் சுடப்பட்டது ஆஃகானிஸ்தானை மட்டும் அல்ல, உலகையே திரும்பிப் பார்க்க வைத்தது.

பெண்களுக்கும், சிறுவர் சிறுமியர்களுக்கு எதிரான வன்முறையை எந்த மதமும் கலாச்சாரமும் ஏற்றுக்கொள்வதில்லை. இரிஷிகேஸில் பயிற்சி பெற்றுக் கொண்டிருக்கும் தனது குழுவை, உடனே கிளம்பி, கண்டஹார் வரச் சொன்னான். அப்பாவிற்குத் தகவல் கொடுத்து அவரகளைப் பத்திரமாக கண்டஹார் சேர்க்கும்படிச் சொன்னான். அவர்களைப் புதுதில்லியில் உள்ள எனது அலுவலகத்திற்கு வரச் சொல். நான் அதற்குள் அங்கு சேர்ந்து விடுவேன். இல்லையென்றாலும் அவரகளுக்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்கிறேன்" என்று கூறிவிட்டுத் தொலைபேசி இணைப்பைத் துண்டித்தார். முஹமது திரும்பக் கிடைத்தாலும் மீண்டும் இளந்து விடுவோமா என்ற பயம் உள்ளுக்குள் இருந்தது. இந்த பயம் ஆஃகானிஸ்தானில், உள்ள எல்லாப் பெற்றோருக்கும் உண்டு.

குரு நண்பர்களை அழைத்துக் கொண்டு, பெரியவரைப் பார்க்கச் சென்றான். குரு வந்தவுடன் பெரியவர் அப்பெண்ணைப் பார்த்து, “உன் அண்ணன் வந்துவிட்டான் என்று கூற, கையில் உணவுப் பாத்திரங்களுடன் வெளியே வந்தாள். ஏதும் பேசாமல் வயிறாற உண்டனர். நேற்று அம்மாவின் கையினால் சாப்பிட்டது ஒரு சுவையென்றால் இன்று தங்கையின் கைகயில் சாப்பிட்டது மற்றொரு சுவை. அது அம்மா-குழந்தை பாசத்தில் உருவானது, இது அண்ணன்-தங்கை பாசத்தில் உருவானது.

சமையலுக்கு சுவை சேர்ப்பது இந்த பாசமே. சமைக்கும் போது இடப்படும் அரிசி, புளி, உப்பு , காரம், மசாலாவின் பங்கு குறைவு. தரமில்லாத உணவுப் பொருட்களால், பாசத்துடன் சமைத்த உணவைச் சாப்பிட முடியும். ஆனால் தரமான உணவுப் பொருட்களால், பாசமில்லாமல், கடனே என்று சமைக்கப்பட்ட உணவைச் சாப்பிட முடியாது. அதில் ஏதோ ஒரு குறையிருப்பதை உண்ணும் போது உணர முடியும்.

விடுதிகளில் விற்கப்படும் உணவின் சுவைக்கு எது காரணம்? அதுவும் அந்தப் பாசமே. தனது உணவை உண்ண வரும் வாடிக்கையாளரைத் திருப்திப் படுத்த வேண்டும் என்ற அக்கறையும் கடமை உணர்ச்சியுமே சுவையாக மாறுகிறது. அந்நிறுவனத்தில் பங்கு கொண்டுள்ள அனைவரது ஒட்டு மொத்த உணர்ச்சியே சுவையாக உணவில் வெளிப்படும்.

சமைக்கும் பொழுது உப்பு, புளி, காரம் முதலியவைகளைச் சோதிப்பதற்காக கையில் ஊற்றிச் சுவைக்கும் பழக்கம், அந்த உணவின் சுவையைக் கெடுத்துவிடும். சமைக்கும் பொழுது இறைவனுக்கோ, அல்லது தனது முன்னோர்களுக்கோ படைக்க வேண்டி சமைப்பது போல் சமைக்க வேண்டும். அப்படி சமைக்கும் போது, இறைவன், நம் முன்னோர் நம்முள் புகுந்து

உணவினைச் சுவைமிக்கதாய் மாற்றிவிடுவர். எனவே சமைத்தவுடன், சிறிது எடுத்து, அவர்களுக்குப் படைத்தபின் சாப்பிட்டுப் பாருங்கள், எல்லாம் சரியாக இருக்கும்.

சாப்பிட்டுவிட்டு அனைவரும் சிறிது நேரம் பேசிக் கொண்டு இருந்தனர். ஒரு கட்டத்தில் பேச்சு நின்று ஒரு அமைதி நிலவத் தொடங்கியது. அந்த அமைதி சிறிது ஆழமானதாக இருந்தது. குரு மெதுவாகப் பெரியவரைப் பார்த்தான். பெரியவர் குருவின் எண்ணத்தைப் புரிந்து கொண்டு, “மகளே, நீ சாதிக்க வேண்டிய நேரம் வந்து விட்டது. உனது தம்பியை அழைத்துக் கொண்டு குருவுடன் கிளம்பு” என அமைதியாக அன்புடன் கட்டளையிட்டார். அப்பெண் ஒரு நிமிடம் அதிர்ச்சியில் உறைந்தாள். தான் என்ன சாதிக்கப் போகிறோம் என்ற எண்ணம். தன்னால் எப்படி இவரை விட்டுப் போக முடியும் என்ற எண்ணங்களுடன் குருவைப் பார்த்தாள். அவள் கண்கள் தன்னையும் தன் தம்பியையும் நிம்மதியாய் விட்டு விடும்படிக் கெஞ்சின.

பெரியவர், அப்பெண் தயங்குவதைப் பார்த்து, “இந்தக் கிழவனிடம் இல்லாத வசதி, வாய்ப்பு, பாதுகாப்பு, உனக்கு குருவின் மூலம் கிடைக்கும். தைரியமாய்ப் போய் வா" என்று மீண்டும் சொன்னார். அப்பெண்ணின் கையைப் பிடித்துக் குருவிடம் ஒப்படைத்தார். அந்தப் பெண் குருவுடன் நடந்து கொண்டே தன் பார்வையை பெரியவரிடம் விலக்காமல் இருந்தாள், குரு அனைவரையும் பார்த்து, அப்பெண்ணின் கையை விட்டுவிட்டு, “பெரியவரைத் தூக்கிக் கொண்டு வாருங்கள்" என்று சொல்லிமுடிப்பதற்குள், அனைவரும் ஓடி அவரைத் தூக்கிவிட்டனர். கூட்டமாக வண்டியை நோக்கி நகர்ந்தனர். பெரியவருக்குக் குழந்தைகளின் அட்டகாசத்தை இரசிக்க முடிந்ததே தவிர, எதிர்க்க முடியவில்லை.

குரு வண்டியில் அமர்ந்து அதைக் கிளப்ப வண்டி, ஒரு உறுமலுடன் கிளம்பியது. வண்டியின் ஓட்டத்தில் ஒரு துள்ளல் தெரிந்தது. வண்டி பெரியதாய் இருந்தது. தன் பிள்ளைகளுக்கு அப்பா சின்ன வண்டியா தருவரார்?

குரு அந்தப் பெண்ணிற்கு, இந்திரா என்றும், அவன் தம்பிக்கு, இந்திரன் என்றும் பெயரிட்டான். பெரியவர் தன் மனதுக்குள் சிரித்துக் கொண்டார். அந்தப் பெண், ஒரு காலத்தில் இந்தியாவை ஆண்ட இந்திரா போல், இவளும் ஆஃகானிஸ்தானை ஆளலாம். பெண்களால் என்று இந்த பூமி ஆளப்படுகிறதோ, அன்றுதான் இங்கு விடியும்.

இந்திராவிற்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை. முதலில் தன் அருகில் இருந்த பெரியவரைக் கட்டிப்பிடித்து முத்தமிட்டாள். பின்பு, எழுந்து வந்து, முன் வரிசையில் வண்டி ஓட்டிக் கொண்டிருந்த குருவிற்கும் முத்தம் தந்தாள். அவளால் மகிழச்சியைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அனைவரும் "ஓ" என்று கூச்சலிட்டனர். குருவிற்கு சிறிது வெட்கமாகப் போய் விட்டது. கன்னத்தில் வழிந்த எச்சிலைத் துடைக்க குரு முயற்சிப்பதற்கு முன், இந்திரா முந்தித் துடைத்து விட்டாள். மீண்டும் "ஓ" என்று இரைச்சல்.

குரு அனைவரையும் வீட்டில் இறக்கிவிட்டான். முஹமதுவும் குருவும் ஆளுக்கு ஒரு வண்டியை எடுத்துக்கொண்டு கண்டஹார் விமான நிலையம் நோக்கிப் புறப்பட்டனர். அங்கு இரிஷிகேஷ் குழுவும், வத்திராயிருப்பு சதுரகிரியில் ஆராய்ச்சி செய்த குழுவும் வந்திருக்கும். இரிஷிகேஷ் குழு குரு வண்டியிலும், சதுரகிரி குழு முஹமது வண்டியிலும் ஏறினர். குரு சதுரகிரிக் குழுவிற்கு தேவையான வேலைகளையும், ஆலோசனைகளையும் கொடுத்துக் கொண்டிருந்தான்.

அங்கு வாழந்த மக்களின் சுகாதார நிலையையும், உடல் வழத்தையும், நோயற்ற வாழ்க்கையையும், அவரகளது உணவுப் பழக்க வழக்கங்களையும் விவரித்தான். அவரகளது மலையில் கண்ட மூலிகைச் செடிகளை

இனம் கண்டதையும் கூறினான். உடலுக்கு நோயற்ற தன்மையைத் தரும் மருந்து இங்கு இருக்கலாம். அதைக் கண்டுபிடித்து உறுதி செய்து, அதை மருந்தாக உலக நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் அளவிற்கு தேவையானவைகளைச் செய்யுமாறு சொன்னான். மேலும் இந்த மண்ணில் வேறு என்ன என்ன விளைவிக்க முடியும் என்பதையும் கண்டறியச் சொன்னான். நேரடியாக அந்த கிராமத்திற்குச் செல்ல உத்தரவு இட்டான். ஆஃகானிஸ்தானின் எதிர்காலத்திற்கு அவரகளது ஆராய்ச்சி மிக்க உறுதுணையாக இருக்கும் என்று அவர்களுக்கு உணர்த்தினான்.

ஆராய்ச்சி மூலம் உங்களால் அந்த மூலிகைகளைக் கண்டுபிடித்து, உறுதிபடுத்துவது பல காலங்கள் ஆகலாம். எனவே நீங்கள் உங்கள் தெய்வீக சக்தியை உபயோகித்து சதுரகிரியில் வாழும் உங்களுக்கு பரிச்சயமான அரூபமான சித்தர்களுடன் தொடர்பு கொண்டு இந்த வேலையைச் சுலபமாக முடியுங்கள். உங்களுக்கு உதவ ஏற்கனவே இரண்டு பேர் அங்கு உள்ளனர்.

உங்கள் கண்டுபிடிப்புகளை உலகிற்கு எடுத்துச் செல்ல இந்தியாவில் உள்ள சில சித்த மருத்துவ நிறுவனங்களைத் தொடர்பு கொண்டுள்ளேன். அவர்கள் சோதனைக்காக மாதிரி கொஞ்சம் கேட்டுள்ளனர். அவர்களுக்கு மூலிகைகளாக அனுப்பாமல் அதிலிருந்து சாறு கொஞசம் அனுப்புங்கள். இந்திய நிறுவனங்களுக்கு இந்த மருந்தைத் தயாரிக்கும் உரிமை மட்டும் வளங்கவோம். உலகெங்கும் விற்பனை செய்யும் உரிமையை இந்நாட்டு நிறுவனத்தின் மூலம் செய்யலாம். இதுவரை கஞ்சா விற்று உலகைக் கெடுத்த ஆஃகானிஸ்தான் இனி உலகில் நோயற்ற வாழ்விற்கு வழிகாட்டுமாறு செய்வோம். வெற்றி உங்களுக்கே என்று வாழ்த்தி வழியனுப்பி வைத்தான்.

முஹமது சிறிது தயங்கி நின்றான். குரு, “என்ன?” என்று வினவ, “இந்திராவின் கையினால் இன்னும் ஒரு முறை சாப்பிட ஆசையாக இருக்கிறது" என்றான். “இத்தனை பேருக்கு எப்படி அவளால் முடியும்?” என்று குரு யோசிக்க, “அங்கு பெரியவர் இருக்கிறார், ஏதாவது ஏற்பாடு செய்திருப்பார்" என்று முஹமது பதிலளிக்க, குரு வேறு வழியில்லாமல், "சரி வண்டியில் ஏறுங்கள் எல்லோரும் வீட்டிற்குச் செல்லலாம்" என்று வண்டியை வீட்டிற்குத் திருப்பினான்.

வீட்டிற்குச் சென்றால் ஆச்சரியம். அம்மா அனைவருக்கும் சாப்பாடுடன் தயாராய் காத்திருந்தார்கள். வீட்டில் செய்தவை சில, வெளியில் வாங்கியவை சில என வண்டி நிறைய கொண்டு வந்திருந்தார்கள். அம்மா குருவின் கன்னத்தைக் கிள்ளிக் கொண்டு, “நீயும் கறி திங்க மாட்டாய், அடுத்தவர்களையும் சாப்பிட விட மாட்டாய்" என்றுச் செல்லக் கோபத்துடன் கூற, குரு அம்மாவின் பிடியிலிருந்து தப்பி ஓட, அம்மா பின் துரத்த, முஹமது எதையும் கண்டு கொள்ளாமல், எல்லாவற்றையும் வீட்டிற்குள் எடுத்துச் சென்று, சாப்பிட ஏற்பாடு செய்து கொண்டிருந்தான்.இந்திரா, வெளியே வந்து என்ன செய்ய, எவ்வளவு செய்ய என்று யோசித்துக் கொண்டிருந்த போது, சாப்பாடு வாசலில் இருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டாள். யாரோ குருவைத் துரத்துவது கண்டு. ஓடிப்போய் அம்மாவின் கைகயைப் படிக்க, “யாரது?” என்று அம்மா கேட்க, குரு, “எல்லாம் உங்கள் குழந்தைகள் தான்" என்று சொல்ல அனைவரும் வீட்டின் உள்ளே சென்றனர்.

மலாலா துப்பாக்கிச் சூட்டிற்குப் பிறகு, தாலிபான்களுக்கு ஆஃகான் மக்களிடையே அதுவும் பெண்களிடையே இருந்த கொஞ்ச நஞ்ச ஆதரவும் குறைந்து விட்டது. எப்படி ஒவ்வொரு வெற்றி பெற்ற ஆண் மகனுக்குப்பின் ஒரு பெண் இருப்பாளோ, அதே

போல், ஒவ்வொரு வெற்றிகரமான போராட்டங்களுக்கும் பெண்கள் உதவி தேவை. அங்கிருந்த பெண்கள் இதைப்பற்றி மிகவும் கவலையுடனனும் பயத்துடனும் பேசுவதைக் குரு கவனித்தான். பெண்களுக்கு எதிரான அனியாயங்களைப் பெண்களை எதிர்த்துப் போராட வேண்டும். ஆண்களிடம் வேண்டிப் போராடுவது கோழைத்தனம். தங்களது உரிமைகளைத் தாங்களை நிலைநாட்டிப் பெற வேண்டுமே ஒழிய ஆண்களிடம் யாசித்துப் பெறக் கூடாது. அப்படிக் கிடைக்கும் உரிமையும் உரிமையல்ல. என்றேனும் பறிபோகலாம்.

குரு அங்கிருந்த நான்கு பெண்களையும் அழைத்துப் பேச ஆரம்பித்தான். ஆயிஷா, மும்தாஜ், அம்மா, இந்திரா ஆகிய நால்வரும் குருவடன் பேச ஒரு அறையில் அமர்ந்தனர். அப்பொழுது அம்மா "சாப்பிட்டுவிட்டுப் பேசலாமே?" என்று வினவ, "இதற்குத்தான் அம்மா வேண்டும் என்பது" என்று குரு கூறிவிட்டு, அனைவரும் ஒன்றாக, வீட்டின் கூடத்தில் வட்டமாக அமர்ந்து, எல்லா சாப்பாட்டையும் நடுவில் வைத்துக் கொண்டு சாப்பிட ஆரம்பித்தனர். ஒரு தாய்க்கு, பிள்ளைகளுக்கு உணவளிப்பதை விட சிறந்த சந்தோஷம் வேறு எதில் கிடைக்கும்? இந்த சந்தோஷத்தை ஆண்களால் உணர முடியாது.

சில விஷயங்களில் பெண்கள் ஆண்களைவிட கொடுத்து வைத்தவர்கள். பெண்களால் ஆண்களைவிட அதிக வலியைத் தாங்க முடியும் மன உடல் வலிமை கொண்டவர்கள். எடுத்துக்காட்டாக, பிரசவ வேதனை. பிறந்த குழந்தைகளுக்கு இரத்தத்தைப் பாலாக்கிக் கொடுக்கும் சுகம் பெண்களுக்கு மட்டுமே உரியது. பெண்களுக்குத் தன் மன வேதனைகளை, போராட்டங்களை எளிதில் மற்றவர்களுடன் பகிர்ந்து ஆறுதல் பெறும் மனப் பக்குவமும் தைரியமும் உண்டு. ஆண்களுக்கு அது கிடையாது.

வயதான காலத்தில் பெண்களால் ஆண் துணையின்றித் தனியாக வாழ முடியும். ஆனால் ஆண்களால் வாழ்வது சிரமம். பெண்களால் ஆண்களை எளிதில் ஏமாற்ற முடியும். ஆண்களில் அந்த திறமை வாய்ந்தவர்கள் குறைவு. ஏமாளிகளை அதிகம்.

அனைவரும் உண்ட பின் "விரைவில் மீண்டும் அம்மாவின் கையில் சாப்பிடும் காலம் வரும். வெற்றி உண்டாகட்டும்” என்று அனைவரையும் வாழ்த்தினான். முஹமது தனது நண்பர்களுடன் பயணத்தைத் துவங்கினான்.

வீட்டில் மீதம் இருந்தவர்கள் அம்மா, இந்திரா, இந்திரன், அஹமது, முஹமது, மும்தாஜ். இப்பொழுது இரண்டு முஹமதுகள் வந்து விட்டதால் குரு இந்தக் குழு முழுவதற்கும் புதுப்பெயர் அளிக்க முடிவு செய்தான்.

அம்மா - அன்னபூரணி
இந்திரா - இந்திரா
இந்திரன் - இந்திரன்
அஹமது - சந்திரன்
முஹமது - சூரியன்
ஆயிஷா - வள்ளி
மும்தாஜ் - உமா

குரு தான் இவ்வளவு விரைவில் தாலிபான்களிடையில் பிரபலமாகுவோம் என்பதை எதிர்பார்க்கவில்லை. அனைவருக்கும் இன்னேரம் இந்தியாவிலிருந்து ஒருவன் வந்துள்ளான் என்பது தெரிந்திருக்கும். அதன் பின் உண்மையை மறைப்பது கோழைத்தனமானதாக இருக்கும். எனவேதான் இந்த பெயர் மாற்றம்.

பள்ளி வகுப்புகளில் வருகையைச் சரி செய்வது போல், குரு ஒவ்வொரு பெயரையும் ஒவ்வொன்றாக அழைக்க, அவர்களும் பள்ளிக் குழந்தைகள் போல் "உள்ளேன் ஐயா" என்று உரக்கக் கத்தினர். குரு கடைசியாக "உமா" என்று கூறிமுடித்தவுடன், அனைவரும் "ஓ" என்று கத்தினர்.

குரு " “ஓ" என்பது ஓம்காரத்தின் முதல் எழுத்து. அனைவரும் கண்களை மூடி 15 நிமிடங்கள் தியானம் செய்யலாம்” என்றான். தரையில் அனைவரும் அமரும்படி விரிப்பு விரித்து வட்டமாக அமர்ந்தனர். எட்டு பேரும் எட்டு திக்குகளை நோக்கி அமர்ந்தனர்.

அம்மாவை மேற்கு நோக்கி , மெக்காவைப் பார்த்த வண்ணம் அமரச் செய்தான். “மூன்று முறை ஓங்காரத்தை ஒன்று சேர்ந்து உச்சரிப்போம். அதன்பின் அதன் சப்தத்தில், சக்தியில் கவனம் வைத்து மனதில் அமைதியாக உச்சரியுங்கள்" என்று கூறிவிட்டு, அனைவரையும் கண்களை மூடச் சொல்லி, அமைதியாக ஓரிரு நிமிடங்கள் இருக்கச் சொன்னான்.

அனைவரும் கண்களை மூடியவுடன் மெல்லிய குளிர்ந்த காற்று அனைவரையும் வருடியது. நறுமணங்கள் வீசத் தொடங்கின. வெளியுலகில் எல்லா சப்தங்களும் ஒடுங்குவது போல் உணர்வு ஏற்பட்டது. அனைவராலும் தங்களது இதயத் துடிப்பை மென்மையாகக் கேட்க, உணர முடிந்தது.

குரு, மெதுவாக ஓம் என்பதை உச்சரிக்க, அனைவரும் உடன் உச்சரித்தனர். அந்த அறையுனுள்ளும், அனைவரது உயிர், மனம், நாடி, நரம்பகள், எலும்பு, தோல் முதலியவைகளில் ஒரு சக்தி பரவுவதை உணர்ந்தனர். அனைவரும் கவலைகளற்ற பயம் அற்ற ஆனந்தமான ஒரு நிலையை அடைந்தனர். இந்த நிலையைவிட்டு வெளியே வர யாருக்கும் விருப்பம் இல்லை. மெல்லிய காற்றினால், ஆடைகள், திரைகள் அசையும் சப்தம் தவிர வேறு எதுவும் இல்லை. சிறிது நேரம் கழித்துவிட்டு குரு மீண்டும் ஒரு முறை ஓம் என்று கூறிவிட்டு அனைவரையும் மெதுவாக, மிக மெதுவாக, ஒரு நிமிடம் எடுத்துக் கொண்டு கண்களைத் திறக்கச் சொன்னான்.

அனைவரும் கண்களைத் திறந்த பின் குருவின் தோளில் ஒரு அழகிய பறவை அமர்ந்திருப்பதைக் கண்டனர். அந்தப் பறவை ஒவ்வொருவரையும் சில வினாடிகள் உற்றுப் பார்த்துவிட்டு, மெல்லியதாக இனிய குரலில் ஏதோ சப்தம் இட குரு, அதனைத் தடவிக் கொடுத்தான். பின் தன் நீண்ட இறக்கைகளை விரித்துக் கொண்டு வானில் சென்று மறைந்தது.

குரு பேச ஆரம்பித்தான். “நீங்கள் தான் இந்தக் குழுவின் தலைவி. இந்த நாட்டின் பல பகுதிகளை அறிந்தவர்கள். உங்கள் மொழியில் வல்லமையுடையவர்கள். கல்லூரி காலத்தில் சில போராட்டங்களை நடத்தியவர்கள். எனவே பல வகைகளில் இந்தக் குழுவை முன்னடத்திச் செல்வதில் தகுதிவாய்ந்தவர்கள்" என்றான். “உனக்கு இதெல்லாம் யார் சொன்னது? அவர் வரட்டும் பார்த்துக் கொள்கிறேன்" என்றார்.

“இந்தச் சண்டையிடும் குணம்தான் இப்பொழது நமக்குத் தேவை. உங்கள் சேவை ஆஃகானிஸ்தான் வட மேற்குப் பகுதிகளிலிருந்து ஆரம்பிக்கட்டும். ஏற்கனவே ஒரு குழு அங்குள்ள மலைகளில் உள்ள மூலிகைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறது. நாம் அவர்கள் இருக்கும் இடத்திலிருந்து வேலையைத் தொடங்கலாம்” என்று கூறிவிட்டு அனைவரையும் பிரயாணத்திற்குத் தயாராகச் சொன்னான்.

வீட்டிற்கு வெளியே சில நடமாட்டங்கள் இருப்பது போல் குருவிற்குத் தோன்ற, வீட்டைவிட்டு வெளியே வந்து பார்த்தான். போலீஸ் உடையுடன் சிலர் அங்கு காணப்படவே குரு அமைதியானான். அப்பாவின் ஏற்பாடாக இருக்கும் என உணர்ந்து கொண்டான்.

அன்னபூரணிக்குத் தன் மகனைப் பார்க்கப் போகும் சந்தோஷம். எல்லா அம்மாக்களையும் போல், அவன் சாப்பிடுவதற்கு பலவகையான பதார்த்தங்கள் எடுத்து வண்டியில் ஏற்றிக் கொண்டிருந்தாள். பின்பு ஏதோ நினைவு வந்தவராய், “குரு வண்டியை எடு. வீடு வரை போய வர வேண்டும்" என்று கூறிவிட்டுக் குருவின் பதிலுக்குக் காத்திருக்காமல் வண்டியின் முன்னிருக்கையில் அமர்ந்தாள். குரு சிரித்துக் கொண்டே "உத்தரவு தாயே" என்று கூறிவிட்டு, வண்டியைச் செலுத்த ஆரமபித்தான்.

ஒரு மூலையில் வண்டி திரும்பியவுடன், இரண்டு தாலிபான்கள் கையில் துப்பாக்கிகளுடன் குருவை வழி மறைக்க, குரு என்ன செய்வதென்று முடிவு செய்வதற்குள், ஒரு பெண், பலமாகக் கத்திக் கொண்டு அந்த இரு தாலிபான்களுக்கு இடையே ஓடினாள். அவளைத் துரத்திக்கொண்டு வந்த போலீஸ், அந்த இரண்டு தாலிபான்களையும் சுட, இருவரும் வெட்டிய வாழைமரம் போல் கீழே சாய்ந்தனர். அன்னபூரணி "உடனே வண்டியை எடு" என்று உத்தரவு இட குரு சாவி கொடுத்த பொம்மை போல் வண்டியைக் கிளப்பினான்.

அன்னபூரணி திடீரென்று ஒரு சந்தில் வண்டியைத் தருப்பச் சொல்ல, ஓடி வந்த பெண்மணி அங்கு நடுக்கத்துடன், குப்பைத் தொட்டிக்குப் பின்னால் ஒளிந்து கொண்டிருந்தாள். குரு அவளைப் பார்த்தவுடன் வண்டியில் ஏறச்சொன்னான். அவளும் வண்டியில் ஏறிக்கொண்டாள். அவளுக்கு நடுக்கம் தெளிய சில நிமிடங்கள் பிடித்தன. அன்னபூரணி "சாப்பிட ஏதாவது வேண்டுமானால் எடுத்துக்கொள்" என்று சொல்ல அவளும் ஒன்றிரண்டை எடுத்துச் சாப்பிட ஆரம்பித்தாள். சிறிது அமைதியானதும் தன்னைக் காப்பாற்றியதற்கு நன்றி சொன்னாள். குரு வாய் விட்டுச் சிரித்துவிட்டான். நடந்தது என்னவென்று அவளுக்குச் சொல்லுமாறு அன்னபூரணியிடம் கேட்டுக் கொண்டான்.

அன்னபூரணி "உன்னை ஏன் போலீஸ் துரத்தியது?” என்று வினவ, அந்தப்பெண், “என்னைத் துரத்தியது போலீஸ் அல்ல. போலீஸ் வேடத்தில் இருந்த தாலிபான்கள். அப்படியென்றால் அவர்கள் ஏன் எங்கள் வண்டியை வழிமறித்த தாலிபான்களைக் கொல்ல வேண்டும்?” அதற்கு அந்தப் பெண், “அவர்கள் சுடாவிட்டால் அவர்கள் சுடப்பட்டிருப்பார்கள். நான் உங்களையும் நீங்கள் என்னையும் காப்பாத்தியிருக்கிறோம்" குரு, “அம்மா, அந்தப்

பெண்ணிற்கு ஒரு பெயர் வையுங்களேன்" என்றான்.

அன்னபூரணி, “நீ வைடா" என்று சொல்லக் குரு, “அம்மாதான் பிள்ளைகளுக்குப் பெயர் வைக்க வேண்டும்" என, அன்னபூரணி, “எனக்கு இந்தியப் பெயர்கள் தெரியாதே" என்று கூறித் தப்பிக்கப் பார்க்க, குரு, “டில்லியில் சில ஆண்டுகள் வாழ்ந்திருக்கிறீர்கள், தப்பிக்கப் பார்க்காதீர்கள்" என்று சொன்னவுடன் அன்னபூரணி யோசிக்க ஆரம்பித்தாள்.

"இவள் பெயர் அகிலா" என்று சொல்ல, பின்பு அவளிடம் "உன்னுடைய பெயர் அகிலா" என்று சொல்ல அந்தப்பெண் ஏதோ சொல்ல முயற்சிக்க, அம்மா இடைமறித்து, “அவள் இறந்துவிட்டாள், இனிமேல் நீ அகிலாதான்" என்று உறுதியுடன் கூற அந்தப்பெண் அமைதியானாள்.

குரு, “அம்மா, அந்தப்பெண்ணை ஏன் பயமுறுத்துகிறீர்கள்?” என்று வினவ, "நான் பயமுறுத்தியது உனக்க எப்படித் தெரியும்?” என்று பதில் கேள்வி கேட்க, குரு, “கண்ணாடியில் பார்த்தேன்" என்றான்.

"நான் பின்னாடி திரும்பிப் பேசியதை நீ எப்படிப் பார்த்தாய்?” என்று அன்னபூரணி வினவ, குரு, “அவள் முகத்தில் பயம் தெரிந்தது” என்றான். குரு உண்மை பேசுகிறானா இல்லை பொய் பேசுகிறானா என்று அன்னபூரணியால் கணிக்க முடியவில்லை. ஆனால் யாரும் குருவிடம் பொய் பேச முடியாது என்பதை உணர்ந்து கொண்டாள்.

குரு அப்பாவிற்குப் போன் செய்து, "சமையல் தெரிந்த ஒரு பெண் வேண்டும். நீங்கள் இப்பொழுது கொடுத்த வீட்டிற்குத் தேவை, இங்கு ஒரு பெரியவர் தங்கியுள்ளார். அவரை கவனித்துக் கொள்ள ஒரு பெண் தேவைப் படுகிறது." அப்பா, “யார் அந்தப் பெரியவர்?” என்று வினவ, குரு அவரைக் கைப்பேசியில் படம் எடுத்து அப்பாவிற்கு அனுப்பி வைத்தான். அப்பா அந்தப் படத்தைப் பார்த்துவிட்டு உடனே குருவை அழைத்து "அவரைக் கவனமாகப் பார்த்துக் கொள். இன்னும் சில மணி நேரத்தில் நான் ஆள் அனுப்பி வைக்கிறேன். அது வரை அவருடன் இரு. அவர் ஆஃகானிஸ்தானின் குரு போன்றவர். தாலிபான்களின் பிரச்சனைக்குப் பிறகு தலைமறைவாகி விட்டார். அவர் மீண்டும் கிடைத்தது ஆஃகானிஸ்தானிற்கு புது வாழ்வு வந்ததற்குச் சமானம்” என்று கூறிவிட்டு இணைப்பைத் துண்டித்து விட்டார்.

இரவில் பயணம் செய்ய வேண்டாம் என்று எண்ணி, அடுத்த நாள் காலையில் தான் குரு கிளம்பினான். அப்பா கொடுத்த வண்டி பெரியதாய்த்தான் இருந்தது. மொத்தம் 9 பேர் அகிலாவையும் சேர்த்து. வண்டியில் மேல் கூரையில் பைகள், சாப்பாடு முதலியன. பெண்கள் பலர் இருந்ததால் பைகள் அதிகமாய் இருந்தன. அகிலாவிற்குத்தான் பை ஏதும் இல்லை. குருவும் அன்னபூரணியும் முதல் வரிசையிலும், இரிஷிகேஷிலிருந்து வந்த நால்வரும் நடு வரிசையிலும் , இந்திரா, இந்திரன், அகிலா கடைசி வரிசையிலும் அமர்ந்து கொண்டனர். அகிலாவைக் காப்பாற்ற அன்னபூரணி எடுத்த நடவடிக்கைகள், பேசிய பேச்சக்கள் அவர் குழுவிற்குத் தலைமை தாங்குவதற்குத் தகுதியானவர் என்று நிரூபணம் ஆகிவிட்டது.

வண்டி 120 கி.மீ. வேகத்தில் போய்க் கொண்டிருந்தது.

பாதை குண்டு குழியுமாய் இருந்தாலும், குரு திறமையாய் வண்டியை ஓட்டி, அதிக குலுங்கல் இல்லாமல், கிராமத்திற்கு வந்து சேர்ந்தனர். குருவின் வண்டி உள்ளே வருவதற்கு ஏதுவாகப் பலகைகள் இட்டு வழிவகுத்தனர். கிராமத்தின் உள்ளே வண்டி சென்று நின்றதும் வண்டியைச் சுற்றி, மக்கள் கூடிவிட்டனர். தூர்த்திலிருந்து அதட்டலாக ஒரு குரல். “எல்லோரும் வண்டியை விட்டு விலகுங்கள்". குருவிற்கு யார் என்று புரிந்து விட்டது. வண்டியிருந்து யாரும் கீழே இறங்கவில்லை. என்னவோ, ஏதோ என்று தெரியாமல் அனைவரும் வண்டியைவிட்டு விலக, பாட்டி நடனமாடிக் கொண்டே வர, விலகிய அனைவரும் கைதட்ட ஆரம்பித்தனர். சிலர் வீட்டிற்குள் சென்று தாள வாத்தியங்களை எடுத்து வந்தனர்.

பாட்டி வண்டியின் கதவைத் திறந்து அன்னபூரணியின் கையைப்பிடித்து விரைவாகக் கீழே இறக்கினாள். குரு விரைவாக கீழே இறங்கி, வண்டியைச் சுற்றி ஓடி வந்து, பாட்டியின் கைகளைப் பிடித்து, “அவள் என் அம்மா" என்று சொல்ல, “தப்பித்தாள்" என்று சொல்ல, அதே நேரம் தாள வாத்தியங்கள் முழங்க ஆரம்பிக்க, பாட்டி நடனம் ஆடத் தொடங்கிவிட்டாள். வண்டியில் வந்த அனைவரும் பாட்டியின் நடனத்தைப் பார்த்து ஆச்சரியத்துடன் நின்றனர்.

வானம் இன்னும் இருட்டவில்லை. அந்தி மயங்கும் நேரம். வீடுகளின் ஊடே கதிரவன் தன் சென்நிறக் கதிர்களை வீசிக் கொண்டிருந்தான். பாட்டியின் நடனத்திற்கு ஒளி தரும் விதத்ததில் கதிரவன் செயல் இருந்தது. நடனம் ஆடிக்கொண்டே வந்து குருவைக் கட்டிப்பிடித்துத் தூக்கினாள். பின் குரு பாட்டியைத் தூக்கினான். பின்பு பாட்டி குருவிற்கு முத்தங்களை மாறி மாறி இரு கன்னங்களிலும் கொடுத்தாள். வண்டியிருந்து இறங்கிய பெண்கள் இதைப் பார்த்து வெட்கத்துடன் சிரித்தனர். அன்னபூரணிக்கும் சிரிப்பு தாங்க முடியவில்லை.

பாட்டி குருவைப் பார்த்து, “ஏண்டா வரவில்லை?”
குரு "அதான் வந்துட்டேனே!”
“ஏண்டா வரவில்லை?”
"அதான் வந்துட்டேனே!”

“ஏண்டா வரவில்லை?”
"அதான் வந்துட்டேனே!”

“ஏண்டா வரவில்லை?”
"அதான் வந்துட்டேனே!”

கிராம மக்கள் அனைவரும், “ஓ" வென்று கூச்சலிட்டனர்.

வண்டியிருந்த பைகள் அனைத்தும் வீட்டிற்குள் சென்றன. கிராம மக்கள் ஒவ்வொன்றாக எடுத்துச் சென்றனர். சாப்பாடு பைகள் காணாமல் போயின. அன்னபூரணி கொண்டு வந்த சாக்லேட்டுகள், பிஸ்கட்டுகள், இனிப்பு வகைகள், கிராமத்திலுள்ள குழந்தைகள் சாப்பிட்டுக் கொண்டிருந்தன. அன்னபூரணி இதைப்பார்த்து மகிழ்ச்சி அடைந்தார்கள். தெரிந்திருந்தால் இன்னும் அதிகமாகக் கொண்டுவந்திருப்பேனே என்று வருத்தப்பட்டார்கள்.

எங்கிருந்தோ பெரிய பாத்திரங்களில் உணவு வகைகள் வெளியே வர ஆரம்பித்தன. எல்லாம் ஆவி பறக்க சூடாய் இருந்தன. வெட்டவெளியில் தீயிட்டு. வெளிச்சத்தையும், வெப்பத்தையும் எற்படுத்தினர். அதைச் சுற்றி வட்டமாய் அமர்ந்தனர். குரு தாள வாத்தியத்தை எடுத்து வாசிக்க ஆரம்பிக்க பாட்டியின் நடனம் தொடர்ந்தது. வேறு சில பெண்களும் ஆடத் தொடங்கினர். அதே சமயம் சுற்றி அமர்ந்திருந்த அனைவருக்கும் உணவு வழங்கப்பட்டது. பாட்டு, நடனம், உணவு, இரவு வெகு நேரம் நடந்தது.

இரவு மணி 10-11 இருக்கலாம். திடீரென்று வானில் ஒரு ஒளிப்பிழம்பம் ஒன்று பறந்து சென்றது. சில வினாடிகள் கழித்து குண்டு வெடிக்கும் சப்தம் கேட்டது. கிராம மக்கள் அனைவரும் குண்டு வந்த திசையை நோக்கி ஓடினர். கிராமத்தின் வெளியே வண்டி ஒன்று கிளம்பியது. வண்டியில் இரண்டு மூன்று பேர் இருப்பது தெரிந்தது.

கிராம மக்கள் என்ன செய்வது என்று தெரியாமல் விழிக்க, சிலர் மட்டும் வண்டியைத் தொடர, வண்டி கிளம்பிய சில நிமிடங்களில் மண்ணில் புதையுண்டு நின்றுவிட்டது. வண்டியில் வந்த தாலிபான்கள் கீழே இறங்கி ஓடுவதற்குள் கிராம மக்களின் பிடியில் சிக்கினர். அவர்களை இழுத்துக் கொண்டு வந்து குருவின் முன் நிறுத்தினர்.

குரு அவர்களைப் பார்த்து, “குண்டு கிராமத்ததில் விழுந்திருந்தால் என்ன ஆகியிருக்கும்? ஏகப்பட்ட உயிர்கள் பலியாகியிருக்கும்" பிடிபட்டவன், “உங்கள் பெயர்தான் குருவா?” என்று வினவ கிராம மக்கள் ஓவென்று சப்தம் இட்டனர். “உங்களைக் கொல்லத்தான் எங்கள் தலைவர்கள் எங்களை இங்கு அனுப்பினார்கள். நாங்கள் இங்கு வந்து 2 மணி நேரம் ஆகிவிட்டது. உங்கள் பாட்டையும் நடனத்தையும் தூரத்தில் இருந்து பார்த்துக் கொண்டுதான் இருந்தோம். எங்களுக்கு உங்கள் கிராமத்தின் மேல் குண்ட போட மனம் வரவில்லை. அதே சமயம் குண்டு போடாமல் சென்றால் எங்கள் தலைவர்கள் ஈவு இறக்கம் இல்லாமல் கொன்று விடுவார்கள். எனவே பெயருக்கு ஒரு குண்டு போட்டுவிட்டுத் தப்பிக்க முயற்சி செய்தோம். ஆனால் மாட்டிக் கொண்டோம்”. பின்பு சிறிது தணிந்த குரலில், “எங்களுக்கும் உங்களைப் போல வாழ ஆசையாக உள்ளது”. இதைப் பேசும் போது அவர்கள் தலைகள் குனந்து இருந்தன. குரு அவர்கள் தலையை

நிமிர்த்தி, “இங்கு யாரும் தலைகுனிந்து வாழக் கூடாது. தலை நிமிர்ந்துதான் வாழ வேண்டும்” என்று கூற அருகில் இருந்த பலர் அவர்களது தலைகளைப் பிடித்து ஆட்டி முடிகளுக்குள் கையைவிட்டு ஓவென்று கூச்சலிட்டனர்.

ஆனால் சிறிது நேரத்தில் வந்தவர்கள் கண் கலங்கி அழ ஆரம்பித்தனர். கூடியிருந்தவர்கள் என்னவென்று விசாரித்த பொழுது அவர்களில் ஒருவன் மெதுவாகச் சொன்னான், “நாங்கள் உங்கள் கிராமத்தின் மேல் குண்டு போட வந்தோம். ஆனால் நீங்கள் எங்களை மன்னித்து உங்களில் ஒருவராக ஏற்றுக் கொண்டுள்ளீர்கள். இதுவரை எங்களை யாரும் இப்படிப் பாசத்தோடு நடத்தியது இல்லை. இதை நினைத்தவுடன் அழுகை வந்து விட்டது” என்று கூறியதைக் கேட்டு மக்கள் சிரிக்க. வந்தவர்களும் சிரமப்பட்டுச் சிரித்தனர்.

அன்னபூரணிக்கு இன்னும் இரண்டு குழந்தைகள் சேர்ந்து விட்டனர். மக்கள் அவர்களையும் கிராத்தின் உள்ளே அவரகளை அழைத்துச் சென்றனர்.

குரு சிறிது கவலையாகக் காணப்பட்டான். அன்னபூரணி என்னவென்று கேட்க, “அப்பாவிடமிருந்து எந்தவிதத் தகவலும் இல்லை. நேற்று ஜப்பானில் ஆஃகானிஸ்தானைப் பற்றி பன்னாட்டுக் கருத்தரங்கம் நடந்து முடிந்திருக்கும். அதில் நிதி உதவி பற்றி ஏதேனும் முடிவு எடுக்கப்பட்டதா என்று தெரியவில்லை” என்றான். அன்னபூரணி, “உனது கைபேசியைப் பார். அது உயிர் இல்லாமல் இருக்கும். இணையதளமும் இங்கு கிடையாது” என்று கூற குரு தன் தலையை மெதுவாகத் தட்டிவிட்டுக் கொண்டான். அன்னபூரணி, “என்ன பாட்டியைப் பார்த்தவுடன் மூளை வேலை செய்யவில்லையா?” என்று கேட்க அனைவரும் சிரித்துவிட்டனர்.

குரு என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டு இருக்கும் பொழுது, வானத்தில் வானத்தில் ஒரு பறவை வட்டமிட ஆரம்பித்தது. குரு அதைப் பார்த்து, “ஆஹா, தகவல் வந்து விட்டது” என்று ஆனந்தப்பட்டான். சிறிது நேரத்தில் குருவின் தோளில் அப்பறவை அமர, அதைத் தடவிக் கொடுத்தான் குரு. அப்பறவை சாப்பிடுவதற்கு அன்னபூரணி சில உலர்ந்த பழங்களைக் கொடுக்க, குரு அதற்குக் கொடுத்தான். அமைதியாக ஒவ்வொன்றாக குருவின் கையிலிருந்து சாப்பிட்டது. அப்பறவைக்கு அவ்வளவாகப் பசி இருப்பது போல் தெரியவில்லை. குருவிடம் சில காலம் தங்குவதற்கு மெதுவாகச் சாப்பிட்டது போல் தோன்றியது.

வழக்கம் போல் அனைவரையும் மீண்டும் ஒரு முறை பார்த்துவிட்டு, வானில் வட்டமிட்டபடி பறந்து மறைந்தது. பறவை மறைந்தவுடன் அனைவரும் குருவைச் சூழ்ந்து கொள்ள குரு மெதுவாகச் சிரித்தான். சரி நல்ல செய்திதான் என்று அனைவரும் புரிந்து கொண்டனர். “ஜப்பானில் இரண்டு நாட்களுக்கு முன் ஒரு கருத்தரங்கம்

நடந்து முடிந்தது; தேவையான பண உதவியை பிற நாடுகள் ஆஃகானிஸ்தானிற்கு அளிப்பது பற்றி. நான் இம்மாநாட்டிற்கு எனது எதிர்பார்ப்பை ஆஃகான் அரசு மூலம் தெரிவிக்க அது ஒட்டு மொத்தமாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது" என்று குரு கூறிமுடித்தவுடன் மீண்டும் "ஓ" வென்று சப்தம். குரு அவர்களை கையசைத்து அமைதிப்படுத்திவிட்டு, "ஆனால் ஒரு சிறு திருத்தம், நான் கேட்டிருந்த பணத்தை ஒரே வருடத்தில் தராமல் 3 ஆண்டுகளில் தருவதாக ஒப்புக்கொண்டுள்ளனர். நமக்கு வர வேண்டிய பணம் வேறு வழியில் வரும் போல் தெரிகிறது" என்று குரு கூறிமுடித்தான்.

குரு அன்னபூரணியை அழைத்து, "உங்கள் குழு செயலாற்றும் நேரம் வந்துவிட்டது. தாலிபான்களை மேற்கிலிருந்து கிழக்கு முகமாக ஓடச் செய்ய வேண்டும். அவர்கள் பாக்கிஸ்த்தான், பலுஸிஸ்த்தான் என்று சென்று வாழ்க்கையைத் தொடரட்டும். ஆஃகானிஸ்தான் ஒரு தாலிபான்கள் இல்லாமல் சுத்தம் செய்வோம்"

"இரண்டு வண்டிகளையும் உங்கள் பிள்ளைகளையும் கூட்டிக் கொண்டு கிராமம் கிராமாகச் செல்லுங்கள். அங்கு தாலிபான்கள் நடவடிக்கைகள், யார் யார் வீட்டில் பிள்ளைகள் காணாமல் போயிருக்கிறார்கள், யார் யார் குடும்பங்களுடன் தொடர்பு வைத்திருக்கிறார்கள், என்ற தகவல்களைச் சேகரியுங்கள். அவரகளது பெயர், ஊர், தாய் தந்தை பெயர், கைபேசி எண் முதலியவைகளைச் சேகரியுங்கள்.

இரண்டாவதாக நீங்கள் செல்லும் கிராமங்களில் பள்ளிகள், மருத்துவ வசதி,குடிநீர் வசதி சாலை மற்றும் போக்குவரத்து, மின் வசதி முதலியவைகள் பற்றித் தகவல்கள் சேகரியுங்கள். இரண்டு நாளில் நான் நீங்கள் இருக்கும் இடத்திற்கு வருகிறேன். அதன் பின் மேலே என்ன செய்வது பற்றி முடிவு செய்வோம். எனக்கு இந்த

மலைகளில் உள்ள மூலிகைகளில் மேலும் சில வேலைகள் இருக்கின்றன. அதன் பின் நான் உங்களுடன் சேர்ந்து கொள்கிறேன். புதிதாகச் சேர்ந்த உங்கள் பிள்ளைகள் இருவரை உங்கள் பாதுகாப்பிற்காக வைத்துக் கொள்ளுங்கள். மதிய உணவிற்குப் பின் நீங்கள் கிளம்பலாம்” என்று குரு கூறி முடித்தான். அப்போது இந்திரா, “குருவிற்குப் பாட்டியைப் பிரிய மனம் இல்லை. எனவேதான் நம்முடன் வரமாட்டேன் என்று கூறுகிறான்" என்று கூறி முடித்தவுடன் அனைவரும் சிரிக்க குருவும் சிரித்தான். பாட்டி அனைவரும் சாப்பிட ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தாள்.

அனைவரும் ஒரு வீட்டில் சாப்பிடக் கூடினார்கள். அன்னபூரணி, “குரு எனது கால்கள் நீ சொல்லும் வேலைகளைச் செய்ய திறனுள்ளவையா என்று தெரியவில்லை. பல ஆண்டுகளாக, மூட்டு வலியினால் அவதிப்படுகிறேன்” என்றார்கள். குரு, “அம்மா கொஞ்சம் தரையில் கால் நீட்டிப் பாட்டிபோல் அமருங்கள்.நீங்கள் பாட்டியாக இன்னும் கொஞ்ச நாட்கள் தான் இருக்கின்றன” என்று கூறவும் மீண்டும் அனைவரும் சிரித்தனர். குரு அன்னபூரணியின் கால்களை மெதுவாகப் பிடித்து விட்டான். இவ்வாறு கேலி பேசிக் கொண்டே கால்களை 10 நிமிடங்கள் பிடித்து விட்டான். “நீங்கள் நடக்க நடக்க வலி குறைந்து விடும்" என்றான். அன்னபூரணியும் தன் கால்களில் ஒரு புதிய சக்தி பாய்ந்ததை உணர்ந்தாள்.

குரு "அம்மா, எழுந்து குதியுங்கள் பார்க்கலாம்" என்றவுடன் அன்னபூரணி சிறிது வெட்கத்துடன், “போடா, உனக்கு வேலையில்லை" என்று தட்டிக் கழிக்க "இல்லையம்மா, வெட்கப்படாமல் குதியுங்கள்" என்று கூறிவிட்டு மற்றவர்களையும் பார்த்து " வாருங்கள், எல்லோரும் குதிப்போம்" என்று அனைவரும் குதிக்க, பாட்டி வீட்டிற்குள் வந்து, “இது என்ன புது விளையாட்டு!” என்று கேட்டுக் கொண்டு குருவின்

அருகில் நின்று கொண்டு குதிக்க ஆரம்பித்தாள்.

பாட்டி குதிப்பதைக் கண்டு அனைவரும் ஆச்சரியப்பட்டனர். அம்மாவிற்கு குரு கூறியபடி வலி கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைய ஆரம்பித்தது. அன்னபூரணி குருவைக் கட்டிப்பிடித்துத் தூக்க, பாட்டி அன்னபூரணியிடம் சண்டைக்கு வர குரு வீட்டைவிட்டு வெளியே ஓடி விட்டான். கண்டஹாரில் அனைவரும் சேர்ந்து சாப்பிட்டதைப் போல இங்கும் எல்லோரும் சேர்ந்து சாப்பிட்டனர்.

சாப்பிட்டுவிட்டு அனைவரும் வண்டியில் ஏறினர். “ஒன்றிரண்டு நாட்களில் நானே உங்களுடன் வந்து சேருவேன்" என்று கூறி வழியனுப்பி வைத்தான்.

வண்டி மறைந்தவுடன் குரு தன் வத்திராயிருப்பு குழுவுடன் பேச ஆரம்பித்தான். “உங்களது வேலை எவ்வளவு தூரத்தில் உள்ளது?” என்று வினவ, பின் வரும் கதை அந்தக் குழுவிடமிருந்து வந்தது.

“குரு நீ அனுமானித்தபடி, இந்த மலையில் அபூர்வ மூலிகைகள் உள்ளன. உன்னுடைய அறிவுரைப்படி, நாங்கள் சதுரகிரி சித்தர்களை துணைக்கு அழைத்தோம். அவர்களும் விருப்பத்துடன் எங்களுக்கு உதவி செய்தார்கள். பூஜைப்பொருட்கள் நம் ஊரில் கிடைப்பது போல் இங்கு கிடைக்காவிட்டாலும், கிடைத்ததை வைத்துப் பூஜை செய்ய அவர்களும் அதை ஏற்றுக் கொண்டு இங்கு வந்தனர். நீ சந்தேகப் பட்டபடி, இவர்கள் உணவாக உண்ணும் கீரையில் தான் இந்த தெய்வீக மருந்து உள்ளது. சித்தர்கள் அறிவுரைப்படி, அவைகளைப் பிரித்து மருந்தாகச் செய்துள்ளோம். இவைகளை மிகச் சிறிய அளவே சாப்பிட்டாலும் போதும் என்பதே சித்தர்கள் கருத்து”.

இந்த இலைகளைப் பறித்து, உலர வைத்துப்

பொடியாக்கியுள்ளோம். வேறு எதுவும் செய்யவில்லை. உலருவதற்கு முன் இங்கு ஓடும் ஆற்று நீரில் கழுவும் படி அறிவுரை சொல்லப்பட்டுள்ளது. இந்த இலைகளை வெயிலில் வைத்தாலே எளிதில் உலர்ந்து விடுகின்றன. எந்தவித இயந்திரம் மூலம் இவைகளை அறைக்கக் கூடாது என்பது சித்தர்கள் உத்தரவு. அவர்கள் கூறிய யோசனை, இந்த இலைகளைப் பறித்து, ஆற்றில் கழுவி, உலர வைத்து, சிறிய குப்பிகளில் பாதிவரை நிறப்பி, மீதி பாதிக்கு இங்குள்ள ஆற்றுப் படுகைகளில் கிடைக்கும் சிறிய கூழாங்கற்களையிட்டு நிறப்பச் சொன்னார்கள். குப்பிகள் நகரங்களை அடையும் முன் இலைகள் பொடியாகி இருக்கும் என்றனர். அல்லோபதி மருந்துகள் போல் விழுங்கக் கூடிய சிறிய குப்பிகளில் அடைக்க வேண்டாம் என்றும் கூறினர்.

வந்த சித்தர்கள் யாரும் தங்ளுடைய பெயர்களையோ, எந்த அடையாளங்களையோ தெரிவிக்கவில்லை. இம்மருந்து உலகெங்கும் பிரபலப் படுத்த என்ன வழி என்று கேட்டதற்கு, சிரித்துவிட்டு உன்னிடம் கேட்கச் சொன்னார்கள். பின்பு நம் அனைவரையும் வாழ்த்திவிட்டு விண்ணில் ஏறி மறைந்தனர். இந்நிகழச்சியை இன்று ஒரு விழாவாக் கொண்டாடுவோமா?”

தூரத்தில் ஒரு வண்டி வரும் சப்தம் கேட்டது. வணடியில் ஆஃகான் போலீஸைச் சேர்ந்தவர்கள் இருவர் இருந்தனர். வண்டியைவிட்டு இறங்கி சில புதிய பெட்டிகளுடன் ஊருக்கள் வந்தனர். வந்தவர்கள் குருவை விசாரிக்க மக்கள் அவர்களை குருவிடம் கூட்டி வந்தனர். குருவிடம் அவர்கள் பெட்டியைக் கொடுத்தனர். பெட்டியின் மீது ஒரு சிறு தாள் ஒட்டடப்பட்டு அதில் தெளிவாக பின் வரும் வாக்கியம் அதில் அச்சிடப்பட்டிருந்தது "மகன் குருவிற்கு வாழ்த்துக்கள். எனது அலுவகத்திற்கு முனிவர் ஒருவர் வந்து உனக்கு சில பொருட்களை அனுப்பும்படிக் கூறினார். அவர் கூறியவற்றை அனுப்பியுள்ளேன். உன்னை நல்ல முறையில் பார்த்துக் கொள்ளும்படி அக்கறையுடன் கூறிச் சென்றனர்- அப்பா"

குரு அப்பெட்டிகளைப் பிரிக்கச் சொன்னான். பெட்டிக்குள் வீடியோ கேமரா, கணணியில் பதிவு செய்யத் தேவையான உப கருவிகள், விண்கோள் மூலம் பேசக்கூடிய கைபேசி, அதில் இணையதள வசதி முதலியவை வந்திருந்தன. குரு "சித்து விளையாட்டு என்பது இதுதானா?" என்று தன் நண்பர்களைப் பார்த்துக் கேட்டான். வந்த இரு காவல் துறையினரும் பசி தாகம் மறந்து குருவை ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தனர். குரு அவரகள் இருவரையும் பாட்டி வீட்டிற்குக் கூட்டிட்டுப் போய் உணவளிக்கச் கொன்னான்.

குரு வந்த கேமரா முதலியவைகளைச் சரிபார்த்துக் கொண்டிருந்தான். சிறிய படங்களை எடுத்துக் கணணிக்கு மாற்றினான். பின்பு இணையதளத்துடன் தொடர்பு கொண்டு அப்படத்தை இணையதளத்திற்கு மாற்றினான். இந்த வேலைகள் அதிக கால தாமதம் இல்லாமல் விரைவாய் முடிந்தன். இணையதள இணைப்பும் தேவையான வேகத்தில் செயல் பட்டது.

கிராம மக்களை அழைத்து, இன்று மாலை அனைவரையும் சந்திக்க விரும்புவதாயும், கூட்டுப் பிரார்த்தனை ஒன்று உள்ளதாயும், அதன் பின் சிலற்றைப் பேசப் போவதாயும், அதன் பின் ஆட்டம் பாட்டம் கொண்டாட்டம், பின்பு விருந்து, இவைகளுக்கு ஏற்பாடு செய்யுமாறு கூறினான். பாட்டியை வரச் சொல்லி ஆள் அனுப்பினான். பாட்டியும் சிறுபிள்ளை போல் குருவைக்காண வேகமாய் ஓடி வந்தாள். குரு பாட்டியின் கைககளைப் பிடித்து, அருகில் அமரச் செய்து, “இன்று நாம் இருவரும் சேர்ந்து நடனம் ஆடப் போகிறோம். நடனம் முழுவதும் இந்த கேமரா மூலம் ஒளிப்பதிவு செய்து இணைய தளத்தில் போடப் போகிறோம். உன்னுடைய ஆட்டம் உலகம் முழுவதும் பரவப் போகிறது” என்று குரு கூறிமுடித்தவுடன் வழக்கம் போல் பாட்டி ஒரு பெரிய முத்தம் குடுத்தாள். பாட்டிக்கு குரு கூறியவைகளில் ஆடப்போகிறோம் என்பது தவிர வேறு எதுவும் புரியவில்லை.

மாலை 5 மணி. கதிரவன் மறைய இன்னும் 3 மணி நேரம் இருந்தது. மலையோரப் பகுதியானதால் வெயில் அதிகம் இல்லை. குரு தனது கேமராவைப் பொருத்திச் சரிபார்த்தான். தனது நண்பர் ஒருவரிடம் அதை இயக்குவது பற்றி விளக்கமாகக் கூறிக்கொண்டிருந்தான். வெயில் வரும் திசை நடனம் ஆடும் இடம் முதலியவைகளுக்கு ஏற்ப கேமராவின் இடத்தையும் படம் பிடிக்கும் கோணம் முதலியவைகளையும் சரிபார்த்துக் கொண்டிருந்தனர். கிராம மக்கள் ஒவ்வொருவராகக் கூட ஆரம்பித்தனர். பாட்டி எல்லா வீடுகளுக்கும் சென்று எல்லோரையும் வரச்சொல்லிக் கொண்டிருந்தாள். அனைவரும் வந்தவுடன் குரு பேச ஆரம்பித்தான்.

“உங்களுடைய அபரிகமான ஆரோக்கியத்தின் அடிப்படையை எனது நண்பர்கள், இறைவனின் முழு உதவியோடு, கண்டு படித்துள்ளனர். அது இந்த

மலைகளில் விளையும், நீங்கள் விரும்பி உண்ணும் கீரையே" என்று சொல்லி முடிப்பதற்குள் "நடனம் எப்பொழுது ஆடலாம்?” என்று கேட்டு ஆடத் தொடங்கிவிட்டாள். குரு மக்களைப் பார்த்து, “நான் சொல்லும் வரை, பாட்டியின் கை கால்களையும், வாயையும் கட்டி வையுங்கள்" என்று கூற, அதன் படி பாட்டி கட்டி வைக்கப்பட்டாள்.

பிரான்ஸ் நாட்டிலிருந்து "ஆஸ்ட்ரிக்ஸ் ஒபிலிக்ஸ்" என்று படக்கதைப் புத்தகம் வெளிவரும். அதில் "பார்டு" (பாடகன்) என்று ஒரு கதாபாத்திரம் ஒன்றுண்டு. அவருடைய பாட்டு சகிக்க முடியாது. மிகக் கொடூரமாய் இருக்கும். எனவே விழாக்காலங்களில் அந்தப் பழங்குடி மக்கள் அவரை கட்டிப் போட்டு ஒரு மரத்தின் மேல் உட்கார வைத்துவிடுவர். குருவிற்கு அந்த கதாபாத்திரத்தின் ஞாபகம் வந்தது.

குரு தொடர்ந்து பேசலானான், “இந்தக் கீரையை உலகமெங்கும் விற்பனைக்கு ஏற்பாடுகள் செய்யப் போகிறேன். இந்த விற்பனையின் துவக்கமாயும், நமக்கு உதவி செய்த இறைவனுக்கு நன்றி செலுத்துமுகமாயும், இப்பொழுது நாம் அனைவரும் பிரார்த்தனை செய்வோம். உங்கள் வழக்கப்படி, அனைவரும் மேற்கு முகமாக நோக்கி, அல்லாவை வணங்கிப் பிரார்த்திப்போம். 5 நிமிடங்கள் அனைவரும் மௌனமாய்ப் பிரார்த்தித்தனர். பின்பு அனைவர் மத்தியிலும் ஒரு சிறு விளக்கை வைத்து, எண்ணையிட்டு, திரியிட்டு, ஒரு சிறு குழந்தையைக் கூப்பிட்டு விளக்கேற்றச் சொன்னான். பின்பு அந்த விளக்கிற்கு மலர்கள் இட்டு பூஜிக்கச் சொன்னான். பின்பு அனைவருக்கும் அப்பா அனுப்பிய பெட்டியில் வந்த இனிப்புகளை வளங்கினான். பின்பு குரு பாட்டியின் கட்டுகளை அவிழ்த்துவிட்டு, கட்டிய வலிதீர மெதுவாகப் பிடித்துவிட்டான்.

பாட்டிக்கு திடீரென்று எங்கிருந்து வெறி வந்ததோ

தெரியவில்லை, குருவைக் குழந்தை போல் தன் இரு கைகளால் தூக்கிக் கொண்டு வட்டமடிக்க ஆரம்பித்தாள். குரு கட்டை அவிழ்க்க ஆரம்பித்தவுடன் கேமராவும் ஓடத்தொடங்கியது. 15 நிமிடங்கள் பாட்டியும் குருவும் நடனமாடி கிராம மக்களை மகிழ்வித்தனர். இளம் மாலை வெயிலில் நடனம் மிக அழகாகப் பதிவாகியிருந்தது. அதன்பின் கிராம மக்களும் சேர்ந்து ஆட, பின்பு விருந்து உண்டு முடியும் போது இரவு வெகு நேரமாகிவிட்டது.

உணவு முடிந்தபின் குரு வீட்டிற்கு வந்து, பதிவான நடனத்தைக் கணணிக்கு மாற்றினான். படத்தைச் சரியாகத் தொகுத்து 10 நிமிடங்கள் ஓடுமாறு மாற்றினான். பின்பு அக்கிராம மக்களின் ஆரோக்கியத்தைப் பற்றியும், அவர்கள் உணவாக உண்ணும் மூலிகைகளைப் பற்றியும் அதனை உலகெங்கும் பரப்பப் போவது பற்றியும் விளக்கமாக இணைய தளத்தில் போடுவதற்கு ஏற்றதாய் தயார் செய்தான். பின்பு வீடியோவையும் இந்த விளக்கத்தையும் இணையதளத்தில் பதிவு செய்தான். இது முடியும் போது இரவு 2 மணியைத் தாண்டிவிட்டது. குரு அலுப்பினால் அசந்து தூங்கிவிட்டான்.

சூரியன் வண்டியை ஓட்ட அன்னபூரணி, அருகில் அமர்ந்திருந்தாள். அன்னபூரணிக்குத்தான் எவ்வளவு மகிழ்ச்சி! நீண்டகாலம் கழித்து தனது தொலைந்த மகன் திரும்பக் கிடைத்துள்ளான். நாட்டைக் காக்கும் பணியில் தன்னையும் தன் மகனையும் ஈடுபடுத்திய இன்னொரு பிள்ளையும் தனக்குக் கிடைத்துள்ளான். இருவர் மட்டுமா? இரண்டு வண்டிகளில் உள்ள அனைவருமே எனக்குப் பிள்ளைகள்தான். எங்கிருந்துதான் குரு வந்தானோ? நரகமாய் இருந்த தனது வாழ்க்கையை இப்படி சொர்க்கமாய் மாற்றிவிட்டான்! இறைவனின் கருணையே கருணை!

இரண்டு வண்டிகளும் ஒன்றன் பின் ஒன்றாக முடிந்தவரை வேகமாய் புழுதியைக் கிளப்பிக் கொண்டு சென்று கொண்டிருந்தன. அதிகாலையில் கிளம்பிவிட்டதால் வெயில் அதிகம் இல்லை. சூரியன் தனது கதிர்கயை கிழக்கு திசையிலிருந்து வீசிக்கொண்டு இருந்தான். புழுதி படிந்த செடிகளும், முட்புதர்களும், கரடுமுரடான பாலைவனமும் இளம் காலை வெயிலில் ஒரு அழகுடன் தோன்றின. படைத்தவன் எல்லாவற்றையும் அழகுடன்தான் படைத்துள்ளான். நமது கண்களில்தான் கோளாறு. நமது இரசனையும், மனநிலையும் மாறுபடும் பொழுது காட்சிகளும் மாறுகின்றன.

காலை உணவு, அனைவருக்கும் பாட்டி ஏற்பாடு செய்து கொடுத்திருந்தாள். அன்னபூரணி அவற்றைச் சாப்பிடுவதற்கு சரியான இடத்தைத் தேடிக் கொண்டிருந்தாள். பாலைவனத்தில் அப்படி ஒரு இடம் இருப்பதாகத் தெரியவில்லை. ஏதேனும் நீர் உள்ள இடமாக இருந்தால் கூடப்ேபாதும் என்று எண்ணினாள். ஆறுகள் ஏதேனும் வருகிறதா என்று பார்த்துக் கொண்டு

வந்தாள்.

ஆஃகானிஸ்தானில் வண்டிகள் சாலையின் வலது புறமாகச் செல்லும். வண்டியை ஒட்டுபவர், இடது புறமாக அமர்ந்திருப்பார். எனவே அன்னபூரணி வண்டியின் வலது புறத்திலும் சூரியன் இடதுபுறத்திலும் அமர்ந்திருந்தனர்.

ஏதோ சப்தம் கேட்டு திரும்ப எதிரில் ஒரு பெரிய வண்டி தனது வண்டியை மோதுவதற்கு வருவதைப்பார்த்து வீல் என்று கண்களை மூடிக் கொண்டு அலற சூரியனும் என்ன செய்வதென்று தெரியாமல் விழிக்க..........

வண்டியிலிருந்து அனைவரும் சுயநினைவிற்கு வந்து கண்களைத் திறந்து, சுற்றும் முற்றும் பார்க்கும் போது வண்டி சாலையைவிட்டு விலகி, ஒரு குழிக்குள் விழுந்து கிடந்தது. பின்னால் வந்த வண்டி சாலையின் ஓரமாய் நிறுத்தப்பட்டு, அதிலிருந்தவர்கள் வேகமாய் இறங்கி குழியை நோக்கி ஓடிவந்து கொண்டிருந்தனர்.

அன்னபூரணி, சூரியன் அனைவரும் வண்டியைவிட்டு இறங்க, உமா கையில் தண்ணீர் பாட்டிலுடன் முதலில் ஓடி வந்து கொண்டிருந்தாள். அவள் அனைவரையும் வண்டியைவிட்டு விலகி நிற்கச் சொன்னாள். எல்லோருக்கும் சிறிது சிறிது தண்ணிர் கொடுத்தாள்.

தூரத்தில் வண்டியின் டயர் வெடிக்கும் சப்தம் கேட்டது. புதியதாய்ச் சேர்ந்தவர்கள், மிகவும் கவலையுடனும், பயத்துடனும், பரபரப்புடனும் காணப் பட்டனர். அன்னபூரணி அவர்கள் இருவரையும் அழைத்து "என்ன?” என்று வினவ, இருவரும், “கடந்து சென்ற வண்டி தாலிபான்களைச் சேர்ந்ததாய் இருக்கலாம். திரும்பி வந்து நம்மைத் தாக்கலாம்" என்று கூற, “வண்டியின் டயர் வெடித்த சப்தம் கேட்டதா? இல்லையா? அவர்களது வண்டிக்கு ஏதோ ஆகிவிட்டது. நம்மைத்

தேடிவர வாய்ப்பு இல்லை.” எழும்பியிருந்த புழுதியில் என்ன நடந்தது என்று அவர்களால் பார்க்க முடியாது. நாம் தப்பித்துவிட்டோம் என்று எண்ணி, நம்மைத் தேடிவரமாட்டார்கள் என்று கூறிவிட்டு, “வேண்டும் என்றால் அவர்கள் என்ன ஆனார்கள் என்று பார்த்துவிட்டு வா” என்று இருவரையும் அனுப்பிவைத்தாள். இருவரும் பயந்து கொண்டே சென்றனர்.

அன்னபூரணி வண்டியை எப்படி வெளியே எடுப்பது என்று யோசித்துக் கொண்டிருந்தாள். வண்டியில் கயிறு ஏதாவது இருக்கிறதா என்று தேடச் சொன்னாள். சிறிது நேரத்தில் இரண்டு கயிறுகள் இரண்டு வண்டிகளிலிருந்து கிடைத்தன. அக்கயிறுகளை ஒன்றாக இணைத்து குழியிருந்த வண்டியையும் சாலையில் இருந்த வண்டியையும் இணைத்தாள். இரண்டு வண்டிகளையும் ஓடவிட்டு, அனைவரும் வண்டியைத் தள்ள, வண்டி அரை மணி நேரப் போராட்டத்தின் பின் வெளியே வந்தது.

அன்னபூரணி, சூரியனிடம், “திறமையாய் எல்லோரையும் காப்பாற்றிவிட்டாய்" என்று பாராட்டினாள். சூரியன், திரு திருவென்று விழித்து, "நீங்கள் அலறியவுடன் வண்டியைக் கவனித்தேன். அதன்பின், விழிக்கும் பொழுது குழியில் இருப்பதைக் கண்டேன். இடைப்பட்ட காலத்தில் என்ன நடந்தது என்று எனக்குத் தெரியாது” என்றான். பின்னால் அமர்ந்தவர்களிடம் அன்னபூரணி திரும்பியபோது, அவர்கள் முகத்திலும் எவ்வித சலனமும் இல்லை. பின் வண்டியில் வந்தவர்களுக்கும் தெரிய வாய்ப்பு இல்லை. ஏனெனின் புழுதி மறைத்திருக்கும்.

அந்த வண்டியைப் பார்க்கச் சென்ற இருவரும் சிரித்துக் கொண்டே திரும்பி வந்தனர். அன்னபூரணியின் அருகில் வரும்வரை இருவரும் சிரித்துக் கொண்டே இருந்தனர்.

அவர்களது சிரிப்பு மற்றவர்களையும் தொற்றிக் கொள்ள, அன்னபூரணி என்ன என்னும் பாவனையில் அவர்களைப் பார்க்க அவர்கள் மேலும் சிரிக்க ஆரம்பித்தனர். அன்னபூரணி சிறிது நேரம் காக்க வேண்டியிருந்தது. அவர்களில் ஒருவன் பேச ஆரம்பித்தான்.

“நான் வண்டியைப் பார்க்கும் பொழுது வண்டி தலைகீழாகக் கிடந்தது. அவர்கள் இருந்த முன்பகுதி நசுங்கி அவர்கள் வெளியே வர முடியாமல், போராடிக் கொண்டடிருந்தனர். அவர்களிடம் துப்பாக்கி இருக்கலாம் என்று எண்ணி பயத்துடன் சற்று எட்டி நின்றோம். எங்களைப் பார்த்து கையை ஆட்டி ஏதோ பேச முயன்றனர். வண்டிச் சப்தத்தில் ஏதும் கேட்கவில்லை. அவர்கள் அருகில் சென்று பார்க்கும் பொழுது, வெளியே வரமுடியாமல் உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தனர். நாங்களும் சிறிது தைரியத்தை வரவழைத்து அவர்கள் அருகில் சென்று, அவர்களை விடுவித்தோம். விடுபட்ட இருவரும் எங்களைப்பார்த்து பயந்து நடுங்க ஆரம்பித்தனர். அவர்களுடன் பேச முயற்சிப்பதற்குள் அவர்கள் ஓட ஆரம்பித்தனர். அடிபட்ட காலுடன் நொண்டி நொண்டி ஓடினர். அவர்களிடம் நிச்சயம் கைத்துப்பாக்கி இருக்கும். இருந்தும் எங்களைப்பார்த்து பேயறைந்தது போல் ஓடினர். அவர்கள் பயந்த முகத்தைப் பார்த்தால் எங்களால் சிரிப்பை அடக்க முடியவில்லை. அன்னபூரணி அவர்களைத் தட்டிக் கொடுத்துவிட்டு, “நல்ல வேளை, அவர்கள் உயிரைக் காப்பாற்றினீர்கள்" என்்று பாராட்டினாள்.

குரு கூறியபடி 200 கி.மீ தள்ளி முதலில் வந்த கிராமத்தைத் தேர்ந்தெடுத்தனர். வண்டியைக் கிராமத்தின் மையப்பகுதிக்கு ஓட்டிச் செல்ல, அங்கு ஏற்கனவே ஒரு வண்டி நின்று கொண்டிருந்தது. அதில் ஆயுதம் தாங்கிய தாலிபான்கள், இளம் வயதினர், நால்வர் நின்றுகொண்டிருந்தனர்.

அன்னபூரணி, பெண்கள் யாரையும் கீழே இறங்க வேண்டாம் என்று கூறிவிட்டு, தானும் சூரியனும் கீழே இறங்கி தாலிபான்கள் இருப்பதைக் கண்டுகொள்ளாமல் தங்களுக்குள் ஏதோ பேசுவதுபோல் நடித்தனர். பின்பு அன்னபூரணி, தாலிபான்களிடம் சென்று, "குடிப்பதற்கு தண்ணீர் இருக்கிறதா" என்று கேட்டாள்.

அன்னபூரணியின் துணிச்சலைக் கண்டு, நான்குபேரும் சிறிது ஆடிப்போயினர். தாலிபான்களிடம் நெருங்குவதற்கு பொதுவாக பொதுமக்கள் யாவரும் பயப்படுவர். ஏனெனின் அவர்களிடம் ஆயுதம் இருக்கிறது. ஈவு இறக்கம் இல்லாதவர்கள். சிறிது கோப்பட்டாலும் சுடுவதற்குத் தாமதம் செய்யமாட்டார்கள். மேலும் தாலிபான்கள் பெண்களை நாயினும் கேவலமாக மதிப்பவர்கள். இதையெல்லாம் நன்கு தெரிந்தும் அன்னபூரணி அவர்களை நெருங்கியது, நால்வருக்கும் முதலில் ஆச்சரியத்தையும் பின்பு பயத்தையும் கொடுத்தது.

ஒருவன் மெதுவாக, வண்டியினுள் கையைவிட்டுத் தண்ணீர் பாட்டிலை எடுக்க முயற்சித்தான். இன்னொருவன் தனது துப்பாக்கியை. அன்னபூரணி பக்கம் திருப்ப முயற்சித்த பொழுது, அன்னபூரணி அவனிடமிருந்து துப்பாக்கியைப் பிடுங்கி, அவன் கன்னத்தில் அறைவிட்டவாறு, “முல்லா ஓமரைத் தெரியுமா?” என்று கூறிவிட்டு அவனை முறைத்தாள். “நான்கு நாட்களுக்கு முன் என் வீட்டில் தங்கி, பேசி, சாப்பிட்டுவிட்டுப் போனார்", இதைக் கேட்டவுடன் நால்வரும் நடுங்கிவிட்டனர்.

நால்வரிடமும் துப்பாக்கிகளைப் பிடுங்கி வண்டியின் பின்புறம் எறிந்துவிட்டு, நால்வரையும் வண்டியில்

ஏறச்சொன்னாள். வண்டியில் ஏறியவுடன் "இங்கு உங்களுக்கு என்ன வேலை? “ என்று அதட்ட, “குருவைத் தேடிக் கொண்டிருக்கிறோம்" என்றனர். “குருவை நான் பார்த்துக் கொள்கிறேன், முதலில் நீங்கள் இங்கிருந்து கிளம்புங்கள்" என்று உத்தரவிட்டு முடிப்பதற்குள் வண்டி சீறிப்பாய்ந்தது.

தாலிபான்களின் வண்டி சென்றவுடன், சுற்றியிருந்த கிராமமக்கள், சிறிது பயத்துடன் அன்னபூரணியை நெருங்க ஆரம்பித்தனர். அதற்குள் வண்டியிருந்த அனைவரும் இறங்கி, அன்னபூரணியைச் சுற்றிக் கொண்டு, அவர்கள் பயந்து ஓடியதை எண்ணி சிரிக்க ஆரம்பித்தனர்.

வந்தவர்கள் சிரிப்பதைப் பார்த்து கிராமமக்கள் தைரியம் அடைந்தவர்களாய், அன்னபூரணியையும் அவர்களது குழுவையும் சுற்றி நின்றனர். சிறு குழந்தைகள் அம்மாவின் கைகளைப் பிடித்துக் கொண்டு பயத்துடன் இவர்களைப் பார்த்துக் கொண்டு இருந்தனர்.

அன்னபூரணி, “கார்த்திகா, வண்டியிருந்து சாப்பிட உள்ள எல்லாவற்றையும் எடுத்து வா" என்று கூறிவிட்டு, கார்த்திகா கொண்டுவந்த எல்லாவற்றையும் சிறு குழந்தைகள் சாப்பிடுவதற்குக் கொடுத்துவிட்டாள். குழந்தைகளும் பாட்டி செய்த பலகாரங்களை விரும்பிச் சாப்பிட்டன. கிராமமக்கள் ஏதும் பேசாமல் நடப்பவைகளை ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தனர்.

கிராமமக்கள் குழப்பத்துடன் நிற்பதைக் கண்டு அன்னபூரணி, “நான் தாலிபான் அல்ல. எப்படி ஒரு பெண் தாலிபானாக இருக்க முடியும்? நான் உங்களுக்கு உதவி செய்ய வந்துள்ளேன்”. கூட்டத்தின் பின்புறத்திலிருந்து ஒரு குரல், “முல்லா ஓமர்.....” என்று இழுக்க, “ஆம் அவர் எனக்குத் தெரிந்தவர்தான். என்

கணவரின் நெருங்கிய நண்பர். அவ்வளவே. எனக்கும் தாலிபான்களுக்கும் எந்தவித தொடர்பும் கிடையாது. நாங்கள் தாலிபான்கள் தேடி அலையும் குருவின் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். தாலிபான்களை ஒழிப்பதும் ஆஃகானிஸ்தைான முன்னேற்றுவதும் எங்கள் வேலை. முதலில் நாங்கள் சில நாட்கள் தங்குவதற்கு இடம் தேவை. முக்கியமாக இப்பொழுது நாங்கள் சாப்பிட உணவு தேவை" என் று கூறிமுடித்தாள்.

குருவைப்பற்றிய பல பொய்யான தகவல்கள், வதந்திகள் தாலிபான்களிடையே பரவியிருந்தது. “தீய சக்திகளின் மொத்த உருவம் குரு. மந்திர தந்திரங்களில் கைதேர்ந்தவன். யாரையும் தூரத்தில் இருந்தபடியே கொல்ல வெல்ல முடியும். உலகில் எங்கு எது நடந்தாலும் குருவிற்குத் தகவல் வந்துவிடும். பாம்புகள் விலங்குகள் பூச்சிகள் குருவிற்குக் கட்டுப்பட்டவை" முதலியன. சில உண்மையயாக இருந்தாலும் பல கட்டுக்கதைகள் தாலிபான்களிடையே பரவியிருந்தன. இந்தப் பயம் தாலிபான்களைத் திறம்படச் செயல்படத் தடையாக இருந்தது. எங்கு சென்றாலும் தோல்வியைச் சந்திக்க நேர்ந்தது.

கிராமமக்கள் சிறிது நேரத்தில் வந்தவர்கள் அனைவரும் தங்குவதற்கு இடமும் உண்ண உணவும் தயார் செய்தனர். சாப்பிட்டுவிட்டு அனைவரும் ஓய்வு எடுத்தனர்.

அன்னபூரணி, உமா, கார்த்திகா, இந்திரா ஆகிய நால்வரும் பக்கத்து வீடுகளில் சென்று அங்குள்ள பெண்களிடம் பேச ஆரம்பித்தனர்.கிராமமக்களுக்கு கிடைக்கும் கல்வி வசதி மருத்துவ வசதி, போக்குவரத்து, அவர்களுக்குத் தெரிந்த கைத்தொழில் முதலியவைகளைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். மாலையில் கிராமமக்களிடம் பேசவிரும்புவதாயும் ஊரின் மத்தியில் அனைவரும் கூடவேண்டும் என்றும் கேட்டுக் கொண்டாள்.அங்கிருந்த பெண்களில் ஒருத்தி

ஊர்த்தலைவரைக் கூட்டிக் கொண்டுவருகிறேன் என்று சொல்லிவிட்டு ஒரு வயதானவரை அழைத்துவந்தாள்.

வந்த பெரியவர் பேச ஆரம்பித்தார். “அம்மா, எங்கள் ஊருக்கு இருவரை தாலிபான்கள் மட்டுமே வந்துசெல்வர். வேறுயாரும் எங்களைத் தேடி வந்ததில்லை. ஆண்களும் பெண்களும் சேர்ந்து வந்ததிலிருந்து நீங்கள் தாலிபான்கள் இல்லை என்று புரிந்து கொண்டோம். நீங்கள் தாலிபான்களை எந்தவித ஆயுதமும் இன்றி துரத்தியதிலிருந்து நீங்கள் சாதாரணமானவர்கள் இல்லை என்றும் புரிந்து கொண்டோம். வந்தவுடன் எங்கள் பிள்ளைகளுக்குச் சாப்பிடக் கொடுத்ததிலிருந்து நீங்கள் எங்கள் நலனில் அக்கறையுள்ளவர்கள் என்றும் புரிந்துகொண்டோம். எனவே என்ன வேண்டும் என்று கேளுங்கள், நாங்கள் உங்களுடன் ஒத்துழைக்கத் தயாராய் இருக்கிறோம். அன்னபூரணி, “இன்று மாலை அனைவரும் ஊரின் மத்தியில் கூடுமாறு ஏற்பாடு செய்யுங்கள்" என்று கேட்டுக் கொண்டாள்.

மாலை 6 மணிக்குக் கூட்டம் தொடங்கியது. கிராமமக்கள் அனைவரும் கூடியிருந்தனர். அதில் அன்னபூரணி முதலில் கவனித்தது, 20 வயது முதல் 30 வயதுக்குட்பட்ட இளைஞர்கள் யாரும் இல்லை. இதனை அன்னபூரணி கேள்வியாக் கேட்டதற்கு, யாரும் பதில் பேசாமல், மௌனமாய் இருந்தனர். சில பெண்கள், இரகசியமாய்க் கண்களைத் துடைத்துக் கொண்டனர்.

அப்பொழுது இந்திரா பேச ஆரம்பித்தாள். “இதுதான் இன்றைய நமது நாட்டின் நிலை. இதை மாற்றத்தான் எனது அண்ணன் குரு இந்த நாட்டிற்கு வந்துள்ளார்கள்" என்று கூறிவிட்டு சிறிது பேச்சை நிறுத்தினாள்.

இந்திராவிற்கு அவள் பேசியதே வியப்பாய் இருந்தது. தனக்கு ஏது இந்த தைரியமும் பேச்சுத்திறமையும்?

எங்கிருந்து வரகிறது? யார் கொடுத்தது? என்று யோசிக்க ஆரம்பித்தாலும், அந்த எண்ணங்களைப் பின்னுக்குத் தள்ளிப் பேச ஆரம்பிக்கையில் உமாவும் கார்த்திகாவும் கைதட்ட கிராமமக்கள் அனைவரும் கைதட்டினர். கூட்டத்திற்குள் அமர்ந்திருந்த இந்திரன், சந்திரன், சூரியன் முதலானோர் விசிலடித்து, ஆரவாரம் செய்ய, இந்திராவிற்குச் சிறிது வெட்கமாய்ப் போய்விட்டது.

குரு இந்தியாவிலிருந்து வந்ததிலிருந்து நடந்த பல நிகழ்ச்சிகளையும் குருவின் நோக்கத்தையும் தெளிவாக, நிதானமாக 10 நிமிடங்கள் பேசினாள். கிராமமக்கள் அனைவரும் மிக அமைதியாகக் கேட்டனர். குழந்தைகளின் மழலை மொழி, பறவைகளின் சப்தங்கள் தவிர அங்கு வேறு எதுவும் இல்லை.

பின்பு குரு இந்நாட்டிற்காக ஏற்பாடு செய்திருந்த பணஉதவி பற்றியும், திட்டங்கள் பற்றியும் விளக்கிவிட்டு, அவைகளை நடைமுறைப்படுத்தவே இங்கு வந்துள்ளோம் என்று கூறிமுடித்தாள்,

குருவிற்கு தனது வேலை முடிவிற்கு வருவது போல் தோன்றியது. தாலிபான்களின் தலைவர் முல்லா ஓமர் ஓய்வு பெற்றபின் தாலிபான் இரண்டு கட்சிகளாகப் பிளவுபட்டுக் காணப்படுகிறது. தாலிபானின் அடிப்படைப் போராளிகள் பயத்தின் பிடியில் சிக்கியுள்ளனர். எனவே நீண்ட காலம் அவர்கள் தாலிபான்களின் தலைமையகத்திற்குக் கட்டுப்பட்டுச் செயல்படுவார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. எல்லாவற்றிற்கும் மேலாக பொதுமக்கள் தாலிபான்கள் மீது மிகுந்த அதிருப்தியுடன் இருந்தனர்.

அன்னபூரணியும் இந்திராவும் வளர்ச்சிப்பணிகளைத் தங்கள் கைகளில் எடுத்துள்ளனர். அன்னபூரணியின் தைரியம் அனைவரும் வியக்கும் வண்ணம் உள்ளது. இந்திராவின் பேச்சுத்திறன் அனைவரையும் கவரும் வண்ணம் உள்ளது. இந்தக் குழு ஆபத்து காலங்களில் கலங்காமல் திறமையாகச் செயல்படுகிறது. மேலும் ஆஃகானிஸ்தான் வளர்ச்சிப் பணிக்கான தேவையான நிதிஉதவி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

கஞ்சாவின் பிடியிலிருந்து மக்களை விடுவிக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. இன்னும் ஆறுமாதகாலம் அல்லது அதற்குக் குறைவாகத் தங்கியிருந்தால் போதுமானது என்று குரு எண்ணத் தொடங்கிவிட்டான்.

ஆறுமாதங்களுக்குப்பிறகு........

குரு கண்டஹாரில் முதன் முதலில் தங்கிய பகுதி. இன்று அது இடிக்கப்பட்டு மிகப்பிரமாண்டமான கட்டிடம் ஏழுந்துள்ளது. நான்குமாத அவகாசத்தில் ஆஃகானிஸ்தானின் செயல் திறனைப் பறைசாற்றும்

வண்ணம் அக்கட்டிடம் அமைநத்துள்ளது. ஆஃகானிஸ்தானை ஆளப்போகும் பாராளுமன்றக் கட்டிடம் அது. இந்தியப் பாராளுமன்றம் போல் வட்டவடிவில் ஆஃகான் கலாச்சாரம் பிரதிபலிக்கும் வண்ணம் நிமிர்ந்து உயர்ந்து அமைந்திருந்தது. நடுவில் பாராளுமன்றம் கூடுமிடத்தின் கூரை கண்ணாடியால் வடிவமைக்கப்பட்டிருந்தது. இரவினில் நட்சத்திரங்களையும் நிலவையும் பார்த்த வண்ணம் பாராளுமன்ற நடவடிக்கைகளை நடத்தலாம்.

மாலை 4 மணி. குளிர்காலமானதால் சீக்கிரமே இருட்டத் தொடங்கிவிட்டது. பாராளுமன்றக் கூட்டம் 3 மணியிலிருந்து தொடர்ந்து நடந்துகொண்டிருக்கிறது. பிரதம மந்திரி தேர்ந்தெடுக்கும் பணி நடந்து கொண்டிருந்தது. பதவிப் பிரமாணம் செய்து வைக்கப் பெரியவர் அமைதியுடன் புன்முறுவலுடன் காத்திருந்தார். அவரது வலது பக்கத்தில் அப்பாவும் இடதுபக்கத்தில் இந்திராவும் நின்றுகொண்டிருந்தனர். அப்பாவின் அருகில் அன்னபூரணி மற்றும் குருவின் குழுவினர். ஆனால் குரு அங்கு காணப்படவில்லை.

காலை 10 மணியளவில் குருவுடன் அனைவரும் பதவி ஏற்பு விழாவில் கலந்துகொள்ளும்படி சண்டையிட்டுப் பார்த்துவிட்டனர். ஆனால் குரு திட்டவட்டமாக மறுத்தவிட்டான். ஏன் என்று கேட்டதற்கு "எனக்கு அனுமதி மறுக்கப் பட்டுள்ளது. ஆனால் அங்கு நடப்பவைகளைப் பார்த்துக் கொண்டுதான் இருப்பேன்" என்றான் குரு. குருவின் கண்களும் பனித்தன. அதற்குமேல் குருவைக் கட்டாயப்படுத்த யாருக்கும் மனம் வரவில்லை, குரு அனைவரையும் கட்டிப்பிடித்து விடைபெற்றான். பெரியவரை வணங்கி ஆசிபெற்றான். மதிய உணவை அனைவரும் சேர்ந்து சாப்பிட்டனர். குரு தனது வண்டியை எடுத்துக் கொண்டு, ஆஃகானிஸ்தானின் பாலைவனங்களின் ஊடே சென்று மறைந்தான்.

பிரதமரைத் தேர்ந்தெடுக்கும் நேரம் வந்ததும் இந்திராவின் பெயரைப் பெரியவர் முன் மொழிய, அனைவரும் கரகோஷ்ம் எழுப்பி ஆதரவு தெரிவித்தனர். அப்பொழுது மேற்கூரையில் சப்தம் கேட்டு அனைவரும் மேலே பார்க்க, ஒரு அழகிய பறவை, தனது இறக்கைகளை மடக்கிக் கொண்டு வசதியாக அமர்வதற்கு முயற்சி செய்துகொண்டிருந்தது.

கம்பீரத்தில் கழுகையும் அழகில் பஞ்சவர்ணக்கிளியையும், நளினத்தில் மயிலையும் கொண்டதாய், மிகப் பெரிய பறவையாய் இருந்தது. பெரியவர் இந்திராவிடம் குரு வந்துவிட்டான் என்று கூற, இந்திரா, ஒலி பெருக்கியில், "குரு" என்று அழைக்க அப்பறவை மீண்டும் வானில் ஏறி வட்டமிட ஆரம்பித்தது. அனைவரும் வானைப்பார்த்து "குரு குரு" என்று அழைக்க அந்தப்பறவையும் வட்டமிட்டபடியிருந்தது.

பின்பு பெரியவர் பதவி விழாவை நடத்தத் தொடங்கினார். அன்னபூரணி நாட்டின் ஜனாதிபதியாகப் பதவி ஏற்க, பின்பு, இந்திரா பிரதம மந்திரியாயும் சகாக்கள் மற்ற மந்திரிகளாயும் பதவி ஏற்றனர்.

அனைவரது கண்களிலும் ஆனந்தக் கண்ணீர் வழிய, குருவை அனைவரும் மேல் நோக்கிப் பார்க்க அந்தப் பறவை வானில் உயர்ந்து பறந்து சென்றுகொண்டிருந்தது.